# முன்னுரை

குழந்தையாக இருந்தவர்கள் ஒருமடங்கு குழந்தையை வளர்த்தவர்கள் இருமடங்கும் இந்நாவலைப் படித்து அனுப விக்கலாம். படித்துக் கொண்டு வரும்போது, ஆடவர், பெண்டிர் இருபாலரும் குழந்தையாக இருந்த நம்மை வளர்த்தது இப்படித்தானே எனத் தயங்குவார்கள், கலியாணமானவர்களோ, நாம் குழந்தை பெற்று வளர்த்த லட்சணம் சரியாகப் பிரதிபலிக்கிறதே என்றும் மயங்கு வார்கள்.

எந்தக் குடும்பத்திலும் ஏற்படுகிற வாழ்க்கை அனுபவங் களின் எதிரொலியான பிரதிபலிப்பே இந்நாவலின் களம்.

நம்முடைய வாழ்விலே ''இதுபோல நடந்தது'' ''இந்தச் சம்பவம் நடந்தது'' ''மூன்று அத்தியாயங்களே முழுக்க நடந்தன'' என்பதாகப் படிக்கும் காலத்தே கணவனைப் பார்த்து மனைவியும், மனைவியைப் பார்த்துக் கணவனும் புன் முறுவல் பூத்துக் கொண்டால் அதுவே சிறந்த நகைச் சுவை.

குழந்தை சிரிக்கப் பிறந்தது; குழந்தையின் வளர்ப்போ சிரமம்தரப் பிறந்தது. குழந்தையை நாமே வளர்க்கும்போது பயமும் பயங்கரமும் ஏற்படுகின்றன. வளர்த்துவிட்ட பிறகோ? ஆஹா! 'நான் வளர்த்தேனாக்கும்' என மார்தட்டு கிறோம். இந்நாவலில் வளரும் குழந்தையும், அதனை வளர்க் கும் பெற்றோரும் அதனுடைய பாட்டிமார்களும் நம்மை வாழ்விக்க—சிரிப்பு மூட்ட—வருகிறார்கள்.

சிரிப்பு மூட்டுவதற் கென்றே இங்கு எதையும் எழுதிச் செல்லவில்லை. குழந்தையைப் பற்றிச் சொல்ல வருவதால் சிரிப்போடு சொல்லவே மனம் விரும்புகிறது. குழந்தையின் சிரிப்புக்கு வஞ்சனை இல்லை. வட்டி இல்லை. வம்புதும்பு

இல்லை. ஏன், கடமைகூட இல்லை! இயல்பாகச் சிரிக்கும் குழந்தையைப் போலவே சம்பவங்களையும் நிகழ்ச்சிகளையும் மன மோதல்களையும் சிரிப்போடு இணைத்தே சொல்லியிருக்கிறேன். மனித இயல்பு என்னும் வெண்ணெய்க்கட்டி, குழந்தை அனுபவங்கள் என்ற சூடுபட்டதும் புத்துருக்கு நெய்யைப்போல, 'கம்'மென்று மணக்கவேண்டும்! நெய்யின் மணம், ஊற்றுபவருக்கும் இன்பந்தருவது; உண்பவர்களுக்கும் இன்பம் தருவது, குழந்தையைப் போல:

பிள்ளைக் கனியமுதை, 1953-ம் ஆண்டில் ஊட்டி வளர்த்த **சுதேசமித்திரனுக்கும்**, உயரிய வடிவம் தந்த **வானதி பதிப்பகத்தாருக்கும்** என் நன்றி.

மயிலாப்பூர்
1—2—62

**சுகி சுப்பிரமணியன்.**

# 1. விரதாதிகள்

பெண்ணலத்தினைப் பெறாதவர் மகவினைப் பெறாதவர்
பெண்ணலத்தினைப் பெற்றவர் மகவினைப் பெற்றவர்
பெண்ணலத்தினால் மகவினைப் பெற்று, இருமையும் பெறுவர்
பெண்ணலத்தினால் அன்றி ஓர் பொருளுண்டோ

—காஞ்சிபுராணம்

நிலா முற்றத்தில் குடியிருக்கும் எங்கள் வாழ்க்கையைக் கண்டு பலருக்கும் கிரகண ஆசைகள் ஏற்படும். எங்கள் வீடு சுமாரானது. சௌகரியமானது. காந்திமதியின் மதியை நான் பலவாறாகப் புகழ்ந்தாலும் அவள் செட்டான குடித்தனமும், நாகரிகப் பாங்கும் ஆகா என்ன சொல்லுகிறது. ஆயினும், மலருக்குள் மணம் ஒளிந்திருப்பது போன்று அவளது மனதிற்குள்ளே ஏதோ வேதனை ஒளிந்திருந்தது. அந்த வேதனை எனக்குத் தெரிந்தாலும் நான் கையாலாகாதவனாக இருந்தேன். "கடவுளாகப் பார்த்துக் கொடுப்பது; முன் ஜன்ம பூஜா பலன்; கொடுத்து வைக்க வேண்டும்" என்றெல்லாம் பழமையில் நம்பிக்கை உள்ளவர்கள் சொன்னார்கள்,

'டாக்டரைப் பார்' என்றார்கள் நாகரிகப் போக்குள்ளவர்கள். மிகவும் அவதிப்படுகிறவர்கள் "உங்கள் வருத்தம் அர்த்தமற்றது, யோகசாலிகள்" என்று பாராட்டினார்கள். இவ்வளவு தூரம் நான் சொல்லி வந்ததிலேயே புரிந்திருக்கும்.

எங்களுக்குக் குழந்தையில்லை!

ஆதியில் குழந்தையில்லாதார்க்கு முனிவர்கள், மாங்கனியைக் கொடுப்பார்கள். துருவன் மாங்கனி உண்டதால் ஜனித்தான். தவசிகள் வாழ்ந்த காலத்தில் மாங்கனியும்

மாந்திரிகமும் குழந்தைப் பேற்றைத்தரலாம். ராஜாதி ராஜாக்களாக இருந்தால் புத்திர காமேஷ்டி யாகம் செய்துவிடலாம். நான் வாழும் காலம் சோற்றுக்கு ஆலாய்ப் பறக்கும் சொர்க்க காலம். முனிவர்கள் தரும் மாங்கனி உதவியையோ புத்திரகாமேஷ்டி யாகமோ செய்யமுடியாத காலம். என்ன தான் தரித்திரத்தால் உழன்றாலும் 'குழந்தையில்லை' என்பதை வெளியே சொல்லிக்கொள்கிறார்களா?

இல்லையெனப் பெருமையுடன் சொல்லிக்கொள்ள முடியாதது குழந்தைப்பேறு; அவமான உணர்ச்சிதான் காந்திமதியின் முகத்தில் தாண்டவமாடத் தொடங்கிற்று. குழந்தையின் தொல்லை, சிரமம் எனக்குத் தெரியும். நானும் அப்படி யிருந்தவன். குழந்தைகளை அக்கம் பக்கம் பார்த்தாலே, குழந்தைகள் எட்ட இருந்து பார்க்க வேண்டியவை; சொந்தமாக வைத்துக்கொள்ளக் கூடாதவை என அறிவேன். கடவுள் ஆணையும் பெண்ணையும் படைக்கும்போது பெண் இதயத்திலே அதிகப்படியான குழந்தைப் பாசத்தை அல்லவா குழைத்துப் படைத்துவிட்டான். நண்பர்கள், உறவினர்கள் மத்தியில் நான் குழந்தையில்லாதவன் என நினைப்பேன். அதற்காகத் தனித்திருந்து அழுவதில்லை. முகங்கன்றிச் சிவப்பதில்லை. அன்னத்திலும் ஆகாரததிலும் வெறுப்பு ஏற்படுவதில்லை, நமக்கு எட்டாத ஆசைகளில், விஷயங்களில் இதுவும் ஒன்றென வாழ்வுப் பாதையில் செல்லுகிறேன். குழந்தையில்லாக் குறை என்னை எப்போதுமே பாதிப்பதோ துன்புறுத்துவதோ கிடையாது.

எனக்கு, நேர் எதிர் காந்திமதி. மனைவி, புருஷனுக்கு எதிராகத்தான் இருக்க முடியும். எப்போதும் கவலையை முகத்தில் கட்டித் தொங்கவிட்ட மாதிரி இருக்க ஆரம்பித்தால், அவளைப் பார்க்கும்போதெல்லாம், ஆண்டவன் கன்னத்தில் நாலு அறை அறைந்து அவனையே குழந்தை உருவாக்கிக் கொண்டு வரலாம் என்று தோன்றும். முன்னாள் பக்த கோடிகளுக்குள்ள தபஸ் செய்யும் சுபாவம் மற்ற

விஷயங்களில் இருந்தாலும் இந்த விஷயத்தில் இல்லாது போய்விட்டது. காந்திமதியின் முகம் மலர அவள் என்றும் போல இன்பப் பேச்சொலி கெக்கெலி கொட்ட ஒரு குழந்தை பிறக்கட்டும் என்று ஸ்மரணை செய்தேன்.

ஸ்மரணை செய்துவிடுகிறதால் குழந்தை பிறக்குமா? எங்கள் தாம்பத்திய வாழ்வு, வெறும் மரமாகத்தான் இருந்தது என்றார்கள். வாழ்வைப் பூர்த்தி செய்யும் மலர் குழந்தை. அது பூத்துக் கனியாக வேண்டுமென்றார்கள். சில காலமாக இந்நாளில் அரசமரத்தைச் சுற்றுவது அநாகரிகமாக இருந்தாலும் காந்திமதி செய்ய ஒப்புக் கொண்டாள். அப்பப்பா...பெண்களுக்கு நம்பிக்கையும் அன்பும் விழுந்து விட்டால் எதையும் செய்வார்கள். படித்தவன் அரசமரம் சுற்றுவதா? என்றால் நம்பமுடியவில்லை. காந்திமதி செய்துவந்தாள்.

அரசமரம் சுற்றிய பலன் காந்திமதியோடு துணைபோன அம்மாளுக்குக் கிடைத்ததே தவிர, அரசமரமும் துணை செய்யவில்லை. பௌர்ணமி தோறும் பூஜித்துப் பொங்க லிட்டு, அத்தனை நைவேத்தியத்தையும் அக்கம் பக்கமுள்ள குழந்தைகளுககுக் கொடுத்தால், பத்தாவது பொங்கலோடு, குழந்தை ஜனித்துவிடும் என்றார்கள்.

ஒவ்வொரு பௌர்ணமியையும் காதலர்கள் நிலவை எதிர்பார்த்துக் கவின் இன்பம் அனுபவிப்பதுபோன்று அனுபவித்தோம். பௌர்ணமி தோறும் சர்க்கரைப் பொங்கல் விருந்து. நிலாமுற்றத்தைச் சுற்றி எந்த வீட்டிலும் ஆறு குழந்தைகளுக்கு, ஆறு போன்று குழந்தைகளுக்குக் குறைவே கிடையாது; ஆகவே ஜே, ஜே, என்ற கூச்சலும் கும்மாளமும் கேட்கும். நாலுநாட்களுக்கு முன்னதாகவே நண்டும் நாழியுமாக குஞ்சும் குறுமானுமாக "என்னிக்குப் பொங்கல்" என கேட்கவரும். நாங்கள் மறந்தாலும் அவை வந்து அரித்துவிடும். இரண்டாவது பொங்கலுக்கு 40 பிள்ளைகள். இவ்வாறு அழைத்த பிள்ளை

களைத் தவிர, அழையாத பிள்ளைகளும் வரத் தொடங்கிவிட்டார்கள். யாரைத் தள்ளுவது யாரைக் கொள்வது. அதுவும் பிள்ளையில்லாக் குறை நீங்க, பிராயச்சித்தம் படைக்கிற போது பாகுபாடு செய்வது தவறு. 99 பிள்ளைகளுக்குச் சோறு இட்ட புண்ணியம் ஒரு குழந்தையை விரட்டியதால் நீங்கி விடலாம்.

பௌர்ணமி அன்று வீடே திமிலோகப்படும், எங்கும் குழந்தைகள், குழந்தைகள் மயம். தண்ணீர் அண்டாவின் பக்கம் குழந்தைகள், மெத்தை தலையணைக்குள் குழந்தைகள் , நிலைக் கண்ணாடிக்கு உள்ளும் புறமுமாகவும் குழந்தைகள். மாடிப்படிகளிலே கொலுவைத்த மாதிரி அடுக்கடுக்காகக் குழந்தைகள். செம்பு, தம்ளர் எடுக்கப்போனால், அங்கேயும் குழந்தைகள். பொங்கல் இடுவதைக் காணவும், இடவொட்டாமல் அடிக்கவும் பாட்டுகள், தாளங்கள் மெட்டுகள். அப்பப்பா! என்னால் பொறுமை தாங்க முடியவில்லை.

மூன்றும் பௌர்ணமி யன்று பொங்கல் நடந்தபோதே ஊர்க்குழந்தைகள் கோஷம் காதைத் தொளைத்தது. உலகத்து நரிகள் எல்லாம் ஒருவீட்டிற்குள் அடைபட்டால் எப்படிக் கத்தும்? அதைவிடப் பன்மடங்கு கூச்சல். ஆனால், காந்திமதி மனம் கோணுவாளா? மாட்டாள். வேணுகானம் கேட்ட பசுக்களும், எருதுகளும் மயங்கியதாகச் சொல்லுகிறார்களே அதற்கு எதிரான காட்சியைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். ஒரு மந்தைப் பசுக்களும் பல சுருதியில் கத்த, அக்குரலை இன்ப நாதமாகச் செவிமடுக்கும் கோபிகையை நினைப்பூட்டியது இக்காட்சி. காந்திமதி இலட்சியவாதி. மூக்கைச் சிந்தவேண்டிய குழந்தைகளாக நூற்றுக்கு மேம்பட்டதாக இருக்கும். அத்தனையும் பொறுமையாகச் செய்வாள். குழந்தைகள் என்றால் எத்தனை எத்தனை சில்லரை அசங்கியத் தொல்லைகள், அத்தனையும் தெய்வமாகவன்றோ அவள் கண்ணில்பட்டன. எனக்கென்னவோ அவைகள்

வாலில்லாத வானரங்களாகப் பட்டும், அவள் எப்படித்தான் தெய்வமாக நினைத்தாளோ?

நாலாம் பௌர்ணமி சமயம், பொங்கலை, வெண்கலப் பானையில் வைத்துக் கட்டாது, பெரிய பெரிய அண்டா அடுக்குத் தேவை என்றாகிவிட்டது. சாஸ்திர ரீதியாகச் சிறிய பானையில் சந்திரபகவானுக்குப் படைக்கப்பட்டாலும் உள்ளே இரண்டு சமையல் காரர்கள் இடுப்பொடிய சமையல்வேலை நடத்தினர். குழந்தைகளை எந்த இடத்திலும் சமாளித்து விடலாம். பந்தியில் சமாளிப்பது எதிரியின் படைக்குள் போய் விழுந்த மாதிரி. நானூறு பேர் பெரியவர்கள் சாப்பிடும் பந்திக்குப் பரிமாறி விடலாம். நாற்பது குழந்தைகளுக்குப் பரிமாறி வெளியே மீள முடியாது. இவ்வாறு பௌர்ணமி எப்போது வரும் என்பதைக் காந்திமதியும், ஏன் வருகிறதோ என்று நானும் எதிர் பார்த்தோம். எனக்குக் குழந்தைகளைப் பார்க்கப் பார்க்க குழந்தைகள் வீட்டில் இல்லாதது பெரிய சௌகரியம் என்ற நினைப்பு எழும். அத்தனை குழந்தைகளின் இம்சையைப் பார்த்த பிறகும், குழந்தை வேண்டும் என்று ஒரு இதயம் எண்ணுமானால் அம்மம்மா......தாய்மையின் வலுவை, வனப்பை என்னதென்று சொல்லுவது!

பௌர்ணமி நாட்கள் எங்களுக்குத்தான் தொல்லையாக இருந்ததே தவிர, அக்கம் பக்கத்துக் காரர்களுக்கு பரம சௌகரியமாக இருந்தது. தேவலோக நிம்மதி. ஒரு நாளாவது மகராஜி வீட்டுக்குப்போய் தங்களை இம்சிக்காமல் இருக்கின்றனவே யென்று குழந்தைகளைப் பெற்றவர்கள் சந்தோஷப்பட்டார்கள். இந்த ஒரு நாள் சந்தோஷத்திற்காக இரண்டொரு ஆத்மாக்கள் (அதிகமாகக் குழந்தைகளைப் பெற்றோர்) "காந்திமதிக்கு இன்னும் இரண்டு மூன்று வருஷம் கழித்துக் குழந்தை பிறக்க வேண்டும்" என்று வாழ்த்தினார்கள்.

இப்போது பார்த்துக்கொள்ளுங்கள். குழந்தைகள் அத்தனையும் இம்சை செய்யும் பிறவிகள்.

ஒவ்வொரு பௌர்ணமியும் மெதுவாக வந்துகொண்டிருந்ததாம், காந்திமதியின் கணக்குப்படி. எனக்கோ அன்றாடம் பௌர்ணமியாகத்தான் இருந்தது. ஒரு பௌர்ணமியில் குழந்தைகள்படுத்தும்பாடு தொல்லை, கூச்சல், அடிதடி சண்டையெல்லாம் சேர்ந்து என் நினைவை விட்டு நீங்குவதற்குள் மறு பௌர்ணமி கனஜோராக வந்துகொண்டே இருந்தது. முன் மாதிரி குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள குழந்தைகளை மட்டும் அழைக்காது எல்லோர் குழந்தைகளையும் தன்னதாகப் பாவித்ததை, தெருவில் உள்ளோர் எல்லோரும் பாராட்டினார்கள். எவரையும் மெச்சிப் புகழ்ந்தால் உச்சி குளிரத்தானே செய்யும்.

காந்திமதி பௌர்ணமி விரதம் எடுக்க ஆரம்பித்தப்பின் கவலையற்ற மனத்தோடு, சதா குழந்தைகளோடு பழகிக் கொண்டிருந்தாள். பத்தாவது பௌர்ணமியும்வந்தது. வெகு ஆடம்பரமாக அடுத்த தெருப் பிள்ளைகளையும் அழைத்து நாலுவகைக்கறிகாய்களிடன் பேஷானவிருந்துச்சாப்பாடும், சாப்பாட்டுக்கு மேலே தின்பண்டங்கள் கொண்ட பைகளையும் இனாமாகவும் கொடுத்தோம். பெரியவர்களும் வந்திருந்தார்கள். என் மாமனார், மாமியார் உற்றார், உறவினர் நீ இரங்காயெனில், எல்லோரும் வந்ததால், வீடு ஏக அமர்க்களம். அத்தனைபிள்ளைகளையும் சேர்த்துப்பார்த்திருக்கவே முடியாது. எல்லாம் சின்னஞ்சிறுசுகள். மலர்ந்த பூக்களின் நடனமாட்டம் போலிருந்தன.

வந்த குழந்தைகள் எல்லாம் அம்மா,அம்மா, சித்திசித்தி அக்கா அக்கா, அத்தை அத்தை அட எத்தனை முறைகள் உண்டோ அப்படிக் கூப்பிட்டன. பாட்டி என்று மட்டும் பேசக் கற்றுக்கொண்ட குழந்தைகள் 'பாத்தி' என்றன. சின்னம்மா என்று கூடச்சொல்லின. வானத்து நட்சத்திரங்கள் கண்சிமிட்டி வானவில்லின் வர்ணங்களை அணிந்து

வந்தவைபோல எத்தனை யெத்தனை வர்ண உடைகள். நிற பேதங்கள். மழலைப் பேச்சில்தான் எத்தனைவகை. சொல் லுக்குச் சொல் மாற்றங்கள், குரல்களின் இனிமையும் கரகரப்பும் தனித்தனி. இப்படிப்பட்ட குழந்தை உலகத்தை வேறு யாரும் பார்த்திருக்க முடியாது. ஒரு குழந்தைகூட இல்லாத நாங்கள் கண்டோம். எங்கள் வீட்டின் நிலா முற்றம் கண்டது. நாங்கள் செய்த கிரகப் பிரவேச வீடு பார்த்தது.

நினைத்ததைவிட பரம திருப்தியுடன் பத்தாம் பௌர் ணமி இனிது முடிந்தது. அவரவர்கள் வீட்டுக்குழந்தைகளை அவரவர்கள் வீட்டில், சில இடத்தில் ஒன்று இரண்டு மூன்று என்பதாக எண்ணிக்கையுடன் சேர்ப்பித்தோம். உறவினர்கள் நண்பர்கள் அவரவர்கள் தூங்குமிடம் சேர்ந்தார்கள்.

நீ இரங்காயெனில் மட்டும் "டேய் இன்றைக்கு அரு மையான படம். சினிமாப் பார்க்கப் போகலாம்" என்றான்.

"போடா முட்டாள். இன்று...இன்று."

அவனிடம் எப்படிச் சொல்லுகிறது. பௌர்ணமி தினம். அதுவும் பத்தாவது பௌர்ணமி தினம். பலன் பூர்த்தியாகும் நன்னாள். சுப நாள். இன்ப நாள் என்பதை விளக்கமுடியாமல் விழித்தேன். வார்த்தைதகள் சொல்ல முடியாது தயங்குவதை விழிகள் விளக்கிவிடும். கண்க ளுக்கு முக்கியமாகக் காதல் வார்த்தைகளை அள்ளிச் சொரி வதில் அலாதி சக்திஉண்டு. என்கண்ணின் ஒளிபேதங்களைக் கண்டவன் எப்போதுமுள்ள கிண்டல் நையாண்டியை மறந்து திருப்பிப் பாராமல் போவதைப் 'பார்த்தபோது அவன் ஒரு குழந்தையாகவே தெரிந்தான்.

என் அறைக்குள் வந்தேன். என் அறையை அலங்க ரித்து நிற்கும் பெற்றோர்கள் படம் காந்திமதியின் பெற்றோ ரும், தலைவர்கள், கவிஞர்கள், ஓரிரண்டு சினிமா வனிதை

கள் உள்பட எல்லோரும் எப்படிப்பட்டவர்கள்? அத்தனை பேரும் குழந்தைகளாகக் காட்சி தந்தார்கள். எங்கே பார்த்தாலும் நிலத்திலும் நீல வானிலும் சுவரிலும் தொங்கும் படங்களிலும் குழந்தை, குழந்தை,குழந்தை! அரைமணிக்கு முன்னதாக வீடு முழுவதும் நூற்றுக்கணக்கான குழந்தைகளின் ஆரவார ஒலிகள். அவைகள் போயும், அவைகளின் இன்பகீதம்என்னை வானலோகத்திற்குத் தூக்கிச்சென்றது. நான் எதிரே இருந்த கண்ணாடியில் பார்த்தேன். நான் எப்படி இருக்கிறேன். குழந்தையாக இருக்கிறேன். குழந்தையுள்ளம், உருவம்கொண்டு வான்நோக்கிப் பறக்கிறேன். அதாவது அப்படியெல்லாம் எண்ணம்.

வட்ட நிலா என்னைப் பார்த்துச் சிரித்தது. அதிலே குழந்தையின் முகம்கண்டேன். வானத்துத்தரையில் தவழும் வண்ணக் குழந்தை தானே நிலா? என்று நான் சொல்லிக் கொண்டிருந்த வேளையில் காந்திமதி, பால் தம்ளருடன் வந்து சேர்ந்தாள். அவள் வயதுவந்த பெண்ணுக, வாலிபத்தின் உருவமாக இருந்தாளா 'பச்சைக் குழந்தையடி' என்ற பாரதியார் பாடல் போன்று சிறு கண்ணம்மாவாக என் கண்ணில் தோற்றம் தந்தாள். என் கண்களும் அவள் கண்களும்சந்தித்தன. நாணித்தலை கவிழ்ந்தாள்.

''என்னகுழந்தை, என்னைக் கண்டு பயமா'' என்றேன். என் குரலில் மழலையின் தளதளப்பு வந்துவிட்டது. அவள் பால் தம்ளரைக் கொடுத்தாள். நான் வாங்கி வைத்துவிட்டு மீறு "உன் முகத்தில் இன்று அலாதி சோபை இருக்கிற''தென்றேன்.

அவள் அதற்கும் பேசாமடந்தையாக இருந்தாள். நான் நிலாவையும் அவள் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தேன். கல்யாணம் ஆகி ஆறு வருஷங்கள் ஆன பிறகும் இன்று இவள் முகத்திலேயே ஒரு கவர்ச்சி, தியாகத்தின் சுடர், அன்பின் ஊற்று, ஆனந்தத்தின் சுவடு தெரியக் கண்டேன்.

"அம்மா சொன்னுள்"

"உன் அம்மா என்ன சொன்னுள்" என் அருகே உட்கார வைத்தேன்.

"காசி ராமேஸ்வரம் போகவேண்டுமாம்"

"போனுல் போகிறது" என்று வாக்குறுதி கொடுத்தவன் அதற்கு அவசியம் ஏற்படாது என அவள் கன்னத்தில் விளையாட்டாகத் தட்டினேன்.

"உங்கள் வாக்குப் பலிக்கட்டும்."

இருவரும் சேர்ந்து சிரித்தோம். இன்னும் நிலா எங்கள் பக்கம் பார்த்துச் சிரிக்கிறது.

"உனக்குக் குழந்தைகளிடம் இத்தனை பக்தி இருக்குமென நான் எண்ணவில்லை."

"உங்களுக்கு மட்டும் என்ன? நீங்கள் செலவையும் சிரமத்தையும் பார்க்காமல் இத்தனை பக்தியுடன் பூஜைகள் செய்ததே ஆச்சரியம்.

"எல்லாம் உனக்காகத்தான்"

பொய்க் கோபத்தோடு "எனக்காகவா? உங்களுக்கு ஆசையே இல்லையா" என்ருள்.

"கிடையாது. இந்த வீட்டில் குழந்தை இல்லை என யார் சொல்ல முடியும்?".

என் புதிர் புரியாமல் என்னை விழுங்கிவிடுகிற மாதிரி பார்த்தாள். "உனக்குக் குழந்தை நான். எனக்குக் குழந்தை நீ" என்று குழந்தைத்தனமாகப் பேசினேன். நடந்தேன். அத்தனையும் சகித்துக் கொண்டாள் காந்திமதி.

"உறக்கப் பேசாதீர்கள்" என்ற வாய் புதைத்த சமயம் எங்கள் வீட்டில் எங்களைத் தவிர்த்து உறவினர்கள் வந்திருப்பதும் உறங்குவதும் நினைவில் எனக்கு எழுந்தது. இந்த மாதிரியான கட்டங்களில் பெண்கள் உஷாரானபேர்வழிகள்.

ஆண்கள் அசடுகளே. நான் உஷாராக வாயை மூடினேன். வாய்ப் பேச்சை நிறுத்தினாள். தனித்துள்ள தம்பதிகள் மத்தியில் என்ன நேரும். மௌனப் பேச்சுகள் மெல்லிய சுருதிக்குரல்கள், சரஸத்திற்கும் சல்லாபத்திற்கும் இன்ப சுரங்கள்.

"வானத்தைப் பார். நிலா இன்று கொள்ளையழகோடு வந்துள்ளது."

"போதுமே உங்கள் காவியப் பார்வை அத்தனையும் காரியப் பார்வை" என்று எழுந்து அறைக்கு வெளியே மொட்டை மாடியில்போய் நின்றாள். உருவத்தின் பின் நிழல் போவதுதானே இயல்பு. நானும் சில விநாடியில் மொட்டை மாடியில் நிற்கிறேன். எங்கும் பால் நிலவின் ஸ்பரிசம், மரங்கள், கட்டிடங்கள், தார்ரோடு, நிலவில் முங்கிக் குளித்தெழுகின்றன. நிலவுக்குத்தான் எத்தனை இன்ப ஸ்பரிசம். பட்ட மரம், பாழும் குடிசையும்கூட வெள்ளியில் உருக்கியெடுத்த வார்ப்படம் போன்று டால் வீசுகின்றன. என் பார்வை கண்ணுக்கு எட்டும் தூரம் ஆற்றிலே நிலவொளி பட்டு, வெள்ளி உருகி ஓடுவதுபோல தோற்றந்தரும் காட்சி முதல், அடுத்த வீட்டு பசிய வேப்ப மரத்திலே விழும் காட்சிவரை சுற்றிச் சுற்றி வந்தது. வந்தாலும் என்ன? முடிவிலே அருகிலே நிற்கும் காந்திமதி மீதுதான் முடிவுறுகிறது.

சிரிப்பும் சிந்தனையும் முடிவுற்ற சமயம் நாங்கள் அறைக்குள் நுழைந்தோம். அங்கேயும் நிலவின் கதிர்கள் விளையாடிக்கொண்டிருந்தன.

## 2. குழந்தையில்லாக் கொடும்பாவி

—பட்டமளிப்பு விழா—

உந்து நீர்க்கடலுடுத்த பார்முழுதும் ஒருங்கே
வந்து தாள் தொழுதும் அரசியல் வளமெலாம் பெரிதும்
இந்திராதியர் பெரும் பதத்திருக்கை எய்திடினும்,
மைநதர் இன்றிய வாழ்வது வாழ்வு மற்றன்றே

—பிரமோத்தர காண்டம்

எந்தவித நல்ல நோக்கத்திலும் செயலிலும் ஏதாவது ஒரு கெட்ட காரியம், பாலில்வெண்ணெய் போன்று மறைந்திருக்கும். பௌர்ணமி பூஜைபோட்ட மூன்றும் நாள், நான் ஆபீஸிலிருந்து குஷாலாக வந்துகொண்டிருந்தேன். ஆபீஸிலுள்ள தோழர்கள்—எதிரிகள் எல்லோருக்கும் எங்கள் வீட்டு பூஜை மகாத்மியம் எட்டியிருந்தது. அவர்கள், "இன்னும் பத்தாவது மாதத்தில் ஆண் குழந்தை" என்று ஆர்ப்பாட்டம் செய்தார்கள். நான் வாங்கிக் கொடுத்தடிபன், காபி வகையராக்கள் அவ்வாறு பேசவைத்தனவோ என்னவோ! எனக்கும் பௌர்ணமி பூஜையினால் குழந்தையில்லாக் குறை நிறைவேறும் என்ற நம்பிக்கை வேர் விட்டது.

நினைத்தபடி நடக்கிற உலகமா இது? கண்ணீரும் கம்பலையும், மழைக் காலத்துச் சந்திரனை மேகங்கள் மூடி அழுகைக் குலைத்தமாதிரி காந்திமதி அழுது கொண்டிருந்தாள். அவள் வெகு நேரமாக அழுதிருப்பதாகப் பட்டது. முகம் வீக்கம் கண்டு கண்கள் உதட்டுக்குப் போட்டியாய்ச் சிவந்திருந்தன. நான் எதிர்பாராத காட்சியைப் பார்த்தேன். அன்றைக்குத்தான் உறவினர்களும், முக்கியமாகக் காந்திமதியின் பெற்றோர் ஊருக்குப் போயிருந்

தார்கள். அதற்காக அழுகிருளோ என முதலில் நினைத்தேன். நான் காரணம் கேட்க கேட்க, மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தாள். சொல்ல முடியாமல் விழுங்கினுள்.

வேலைக்கார வள்ளி வந்தவள், "அவ தலையிலே இடி விழ நல்ல மனசோட நீ செய்யப்போக பேசின பேச்சைப் பாரு" என்று ஆரம்பித்தாள். கண்ணைக்கட்டி காட்டில் விட்ட மாதிரி இருந்தாலும், "என்ன நடந்தது?" என்றேன்.

"அதாங்க. பம்படி வீட்டு பங்களாக்காரி இருக்காளே."

"பம்பு பக்கம் எந்தப் பங்களா இருக்கு"?

"அதான் ஓட்டுக் குடில் குட்டிச்சுவர் வீடு" என்று நிறுத்தினுள். அந்த வீட்டின் பரிதாபத் தோற்றம் என் மனக் கண்ணில் வந்தது. ஏழையான குடும்பம், ஆறே ஏழோ குழந்தைகள். ஆறு குழந்தைகளைப்பெற்றுக் காப்பாற்றுகிறவர்களை நாம் கோவிலில் வைத்துக் கும்பிடலாம் என்று எங்கோ படித்திருக்கிறேன். அத்தனை பரம தரித்திரக் குசேலக் குழந்தைகளிடம் காந்திமதிக்கு அலாதியான பாசம். அதிலும் சிறு பயல் சில சமயம் எங்கள் வீட்டிலேயே இருப்பான். முருகன் எத்தனை கொள்ளை யழகு. ஹாலந்து பசுவின் பாலும், ஹாய்யாக காற்ருேட்டமுள்ள பங்களாவில் தாதியார் நால்வர் கண் விழித்துக் காப்பாற்ற வேண்டிய ராஜ பிறவி அவன். அத்தனை கொள்ளை அழகும், குறு குறு பார்வையும், தலைமயிர் சுருட்டை சுருட்டையாகவும் இருக்கும். பார்த்தால் நெஞ்சோடு அள்ளி அணைத்துக்கொள்ள வேண்டும்போல் இருப்பான். குழந்தையே எங்களுக்கு இல்லாவிட்டால் அவனைத் தத்து எடுக்கலாம் என்றுகூட நான் சொல்லி இருக்கிறேன். அந்தப் பையனுக்கு என்னவோ ஏதோவெனப் பயந்து "வள்ளி என்ன சங்கதி?" என்று கேட்டேன்.

"நீங்க கொடுத்த செல்லம், அம்மா கொடுத்த இளக்காரம். வாரியக் கொண்டைக்குப் பட்டுக் குஞ்சம் கட்டலாமா?"

வள்ளி கேள்வியைக் கேட்டு நிறுத்தினாள். நான் விவரம் அறிய ஆசைப்பட்டும் நல்ல கட்டத்தில் "தொடரும்" என்று போடுவார்களே கதாசிரியர்கள் அப்படித்தான் நிறுத்தினாள். இன்னும் காந்திமதியின் அழுகை நின்றாலும், விக்கல் ஒலிக்கிறது.

"சட்டென்று சொல்"

"எனக்கு வர்ற கோபத்திலே" என்ற வள்ளி மூலையில் கிடந்ததை எடுத்துக்கொண்டு வாசற் பக்கம் கூட்டப் போய்விட்டாள். வள்ளிக்கும் அந்த வீட்டு அம்மாளுக்கும் சண்டையோ? தனக்கு அதிகம் கொடுக்காமல் பிறர் வீட்டுக் குழந்தைகள் உணவாகவும், சாமானாகவும் கொண்டு போவதில் எரிச்சல் படுகிறாளோ வள்ளி.

"மீனு, என்ன நடந்தது" என்றேன். காந்திமதிக்கு அவள் தாயார் அழைக்கும் பெயர் மீனு. அந்தப் பெயரை நான் உச்சரித்தாலே குழைவோடு புதிய காதல் சுவையோடும்தான் சொல்லுவேன். "மீனு" என்றதும் அவள் உயிர் பெற்றாள். நடந்த விவரங்களை விக்கல் விம்மல்களின் இடையிடையே நான் தொகுத்துத் தெரிந்துகொண்டேன். அறிய அறிய என் மனம்...

அநியாயம். இந்த உலகத்தில் நியாயத்திற்கும் அனுதாபத்திற்கும் இரக்கச் சித்தத்திற்கும் இடம் உண்டா? நன்றியற்ற உலகம் என்ன சொல்லிற்று, காந்திமதி வழக்கம் போல அந்த வீட்டுக் குழந்தையை எடுத்துவரப் போயிருக்கிறாள். பிள்ளை பெறாத பெண்களுக்கு ஏற்படும் பேரிடி இவள் தலையிலும் விழுந்தது

அந்தச் சின்னஞ்சிறு வீட்டுக்குள் "அந்தமலடி காந்திமதி வீட்டுக்குப்புள்ளையை அனுப்பின நாள் முதலா அதுக்கு

மாந்தம் மாந்தம். அதுவும், முருகன்கிட்டே அவளுக்குக் கண், அவ கண்ணிலே மலட்டுக் கண்ணிலே தீயை வைக்க. எம் புள்ளைக்கு பொங்கலைபோட்டு சோறும் பாயஸமும் திணிச்சுக் கொன்றுபோட இருந்தாளோ?" என்ற பெற்ற வள் சொல்லுகிறாள். காந்திமதிக்கு ஒவ்வொரு சொல்லும் நெருப்புக் குண்டுகளாய் இருக்கிறது. தான் காட்டிய அன்புதான் குழந்தைக்கு அஜீரணம் கொண்டுவந்து விட்டதோ என நினைத்தாள். முருகனைப்பெற்றவள், "இனி மேல் அந்த மலடி முகத்திலே எம்புள்ளைகள் ஒண்ணும் முழிக்கக் கூடாது. அவ கண்ணிலே கருநாகம் பிடுங்க. மலட்டுப் பொணமே உனக்குத்தான் ஒரு பிள்ளையில்லையே. உன் கைபட்டா கண்பட்டா ஊரு பிள்ளைகள் செத்து சுடு காடாப் போயிடும்" என்றாள்.

இதைக் கேட்டோ, தற்செயலாகவோ அடுத்த வீட்டு அம்புஜமும் சேர்ந்துகொண்டாள்.

"ஆமா அக்கா, அந்த பௌர்ணமி பூஜைக்கு எம் மக போய் வந்ததிலே இருந்து துளி காபி குடிக்கணுமே. பாலே குடிக்கலே. மகராஜி என்ன மருந்து மாயத்தைப் போட்டுக் கொடுத்தாளோ. மேலத்தெரு இட்லிக்கார அம்மா பயலுக்கும் உடம்பு சரியாயில்லையாம்" என்று கட்டமண்சுவருக்கு அப்பால் நின்று குற்றப் பத்திரிகை வாசித்தாள்.

காந்திமதிக்குச் சொற்களைக் கேட்கக் கேட்க, ஆத்திரம் வந்தது. குழந்தைகளைக் கொல்லவந்த கொலைகாரி என்ற பட்டத்தை குழந்தையைப் பெற்றெடுத்த தாய்மார்கள் அத் தனை பேரும் சூட்டுகிறார்கள். அவள் நெஞ்சு பொறுக்க வில்லை. தன் கோபத்தையும்-முக்கியமாக—முகபாவத்தை அடக்கிக்கொண்டு, "ஏம்மா குழந்தைக்கு உடம்பென்ன?" என்று ஆரம்பித்தாள்.

"இந்தாம்மா, இனிமேல் எங்க வீட்டு வாசலை மிதிக் காதே. எங்க வீட்டுக்காரர், ஒரு புள்ளை செலவுக்குள்ள

தரித்திரமாவது நீங்கட்டுமுன்னு உன் வீட்டிலே குழந்தையைப் பகலிலே விட்டுவைக்கச் சொன்னார்."

"ஏம்மா இப்படிச் சொல்லுறீங்க. நான் என்ன பாவியா? எங்கே குழந்தை?"

"அட சரிதாம்மா. நீ பாலையும் பிஸ்கோத்தையும் கொடுத்து எம்பிள்ளையைக் கொல்லப் பார்க்கிறே? உன்னை நம்பித்தான் அஞ்சு பிள்ளையும் வளர்ந்ததோ? போம்மா. மலடி கை பட்டாலே புள்ளைக்குத் தேரைத் தோஷம் விழுமுன்னு எங்க அத்தை சொல்லியிருக்கு. இனிமேல் எம் புள்ளை பொழைக்கணும். வந்த வழியே திரும்பிப் போ"

எதை உயிருக்குயிராக நேசித்தாளோ அதுவே விஷமாக மாறிவிட்டது. தன்மேல் எவ்விதத் தவறும் இல்லை. அபாண்டப் பழி சுமத்த வேண்டாம் என்பதை நடு நிலைமையாக எடுத்துச்சொல்ல அம்புஜத்தை துணை சேர்த்தாள் காந்திமதி.

"ஆமாம், ரொம்ப அழகுதான். உனக்கென்ன கஷ்டம்? என்னத்தையும் திணிச்சு புள்ளை வயித்தைக் கெடுக்கறே. எம்மக அன்னிக்கு உங்க வீட்டிலே தின்னப்பறம் ஒண்ணுமே திங்கலே. வயித்து வலியாலே கஷ்டப்படுது."

"அப்படியானா நானே டாக்டர் வீட்டுக்குக் கொண்டு போய் வைத்தியம்..."

"எங்களுக்கு இனிமேல் வைத்யமா? போதும்மா போதும்."

"நீ மிதிச்ச காலடி மண்ணை மிதிச்சாலே குழந்தை புழுவாதுடிச்சிடும். உன்வயித்திலே ஒரு புழு பூச்சிஉண்டாயிருந்தால்லே, குழந்தையோட அருமை தெரியும்," என்று அம்புஜம் பல்லவி எடுத்துக்கொடுக்க குசேலர்வீட்டம்மாள் அனுபல்லவியும் சரணமும் பாட ஆரம்பித்தாள். காந்திமதி குழந்தை முகம்காண ஆசைப்பட்டதே மகா பாவம் என்றமாதிரி அங்கேயே கோவெனக் கதறி அழுதுவிட்

டாள். பிறகு நாலுபேர்வந்து சமாதானம் செய்து வீட்டிற்கு அழைத்து வந்தார்கள். எல்லோருமே பிள்ளையில்லாத காந்திமதியை பாவத்தின் உருவம், குழந்தைகளின் எமன் என்று சொல்லியிருக்கிறார்கள். சொல்லிவைத்தாற்போல பௌர்ணமி விருந்தை வெகு பலமாகச் சாப்பிட்ட குழந்தைகள் ஆறேழு பேருக்கு வயிற்றோட்டம் என்ற உண்மையும் தெரியவந்தது. ஆனாலும் நல்லது, நல்லவள், நல்லோர் இவைகட்கு இந்த உலகத்தில் இடம் ஏது? நான் ஆறுதல் சொன்னேன்.

''ஆமாம் காந்திமதி குழந்தையைப் பெற்றவள், என்ன வேண்டுமானாலும் பேசுவாள். பாசம் கொள்வதே எதன் மீதும் தவறுதான். பாசத்திற்கும் தண்டனை உண்டென்பதை அனுபவித்து விட்டாய்.'

"இனி என்னால் தெருவில் தலைகாட்ட முடியுமா?''

"நீ எந்தக் குழந்தைகளையும் ஆசையோடு பாராதே. அன்போடு எடுக்காதே. உலகத்தில் பெண்ணுக்கு விரோதி பெண். பெற்ற தாய்மாரே பெண்ணினத்துத் தாய்மையைப் புரியவில்லை'' என்று பலவிதத்திலும் நான் ஆறுதல் சொன்னேன். அதே சமயம் முருகனின் தகப்பனார் பரம தரித்திரக் கோலத்தில் வந்தார். அவருடைய ஏழ்மையான நிலைமையைக் கண்டும், அவர் மனைவி, மீனாவைத் திட்டியிருந்த அர்த்தமற்ற செயலைக் கண்டிக்க என் மனம் துடித்தது.

"நீங்கள் பெரியமனசு செய்யணும். முருகன் அம்மா, நம்ம வீட்டு, மீனாஅம்மாவை திட்டுச்சாம். அது ஒருஎழவும் தெரியாத களுதே. பிள்ளை பெத்துபிட்டாலே உலகஞானம் வந்திடுமா. கொஞ்சபொழுதுக்கு முந்திதான் எங்கிட்டே பெருமையா சொல்லுச்சு களுதே, அம்மாவும் நீங்களும் வித்தியாசமா நினைக்கக்கூடாது'' என்று மனைவிக்காக மன்னிப்புக்கேட்க வந்தார். உத்தமர்களுக்கு வாய்க்கும்

மனைவிமார்களின் குணமே அலாதி, நான் அந்த மனிதரின் மேலான குணத்தைப் புரிந்துகொண்டு "சொல்லிவிட்டுப் போகிறீர்கள். குழந்தைப் பாசந்தான். இரண்டு பேர் தவறு தலுக்கும் காரணம் இருக்கிறது. இரண்டும் தவறும் அன்று, தன்மையும் அன்றுவிட்டுத் தள்ளுங்கள்" என்றேன்.

"பக்கத்து வீட்டு அம்புஜமும் சேர்ந்துதிட்டுச்சாம். பாருங்க எத்தனை பிரியத்தோட எல்லாக் குழந்தையும் இந்த நிலா முற்றத்து வீட்டுக்கு வரும். எம்பிள்ளைகளை வரக் கூடாதுனனு சொல்லிவிட்டாள் அவ. அது ஒரு புத்தியில் லாத மிருகம். மனசிலே போட்டுக்காதிங்க" என்றவரிடம் காந்திமதி, "முருகனுக்கு உடம்பு ஒன்றும் இல்லையே?" என்று குழைவாகக் கேட்டாள்.

"உங்கவீட்டு சாப்பாட்டிலேயா உடம்புக்கு வரும்? அந்த மூதி எப்பவும் நிலக்கடலை திங்கும். அம்மா திங்கிற போது புள்ளை என்ன செய்யும்? அடிச்சுப் புடிச்சு தின்னு ருக்கும். நிலக்கடலையைக் கொடுத்துப் பிள்ளையைக்கெடுத்த தோடு, பாவத்தைதான்செய்து போட்டு, பழியை உங்க தலையிலே போடலாமா?"

"போடலாம், பிள்ளைப் பெற்றவங்க பேசறதுதான் நியாயம். விட்டுத் தள்ளுங்க. காந்திமதி இனிமேல் அக்கம்பக்கத்து வீட்டுப் பிள்ளைகளைக் கொஞ்சவும் விளையா டவும் எடுத்து வராதே" என்று குரலில் கண்டிப்பாக இருந்தேன். முருகனின் தகப்பனார் மன்னிப்பை வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தார்.

காந்திமதிக்கு அன்று முழுவதும் தூக்கம் வரவில்லை. திடுக்கிட்டு எழுந்து எழுந்து அழுது கண்ணீர் வடிப்பதும் தனக்குத்தானே பேசிக்கொள்ளுவதுமாகவே இருந்தாள்.

மறுநாட் காலையில் நான் ஆபீஸுக்குப் புறப்பட விருந்த சமயம் இந்தச் சம்பவம் நடந்தது. முருகன் வழக்கம்

போல இட்லி, காப்பிக்கு எங்கள் வீடு வரவேண்டு மென்று முயற்சி செய்திருக்கிருன். தன் தாயாரை ஏமாற்றி எப்படியோ தத்தித் தத்தி தடுமாறி எங்கள் வீட்டு வாசற் படியும் ஏறிவிட்டான். வந்ததை நாங்கள் கவனிக்கவில்லை. ஒரு ராக்ஷசக் குரல் அதாவது, ஆறு குழந்தைகளைப் பெற்று வளர்த்துத் தாலாட்டிப்பாலூட்டிய பண்பில் வளர்ந்த குரல் "இங்கே என்ன, அள்ளித் தேனும் பாலும் கொட்டறுங்க, மலடி வீட்டுக்குப் போகவேண்டாமுன்னு, களுதை ஓடியா வந்தே?" என்று அந்தப் பச்சைக் குழந்தையை பசலையை பளீர் பளீர் என்று அடிக்கிருள். அது தாயிடமிருந்து விம்மி வெளியேறத் துடிக்கிறது. கண்கொள்ளாத காட்சி. எனக்கே ரத்தக்கண்ணீர் தெறித்தது. சொல்லவும் முடியாமல் கொள்ளவும் முடியாமல் சுவரில் சாய்ந்துவிட்டாள் காந்திமதி.

காந்திமதி இருக்கும் திக்கு "நோக்கி அம்மா அம்மா" என்று அலறுகிறது குழந்தை.

"அம்மா யாருலே அம்மா...... அம்மாளாம்மில்லே வா வீட்டுக்கு" என்று ஒரு கையைப் பிடித்துக் கரகரவெனத் தரையிலே வைக்கோல்போரை இழுப்பதுபோல இழுத்தாள். யார்? பத்துமாதம் சுமந்து பெற்ற அன்னை. செக்கச்சிவந்து மேனி மாசுபடியகண்ணீர்வடித்துக்கதறக் கதறப் போய்க்கொண்டிருந்தது எனக்கு ஆவேசம் வந்தாலும் அநாகரிகமான செயலைக் கண்டிக்க உரிமை யிருந்தாலும் பெற்றவளின் உரிமையைப் பறிக்க நான் யார்? ஏதாவது கல்லது சொல்லப் போக நான் வாங்கும் பட்டம், பிள்ளை யில்லாத பெரும் பாவி என்ருகும். குழந்தையின் அழு குரல் மங்கிற்று.

அழுதுகொண்டே நான் காந்திமதியின் அழு முகத்தைத் துடைத்தேன். எனக்கும் வார்த்தை வரவில்லை. பாவத்தின் இரு ஆத்மாக்கள் சந்தித்தும் பேசுவதற்கு வார்த்தை கிடைக்காதது போல கலங்கி நின்ருேம்.

இந்த வேளையில் ஸ்ரீரங்காயெனில் விசில் அடித்துக் கொண்டு வந்தவன் "ஏண்டா ஆபீஸிலே பெரிய பார்ட்டியாமே. சமாய்ச்சுட் போட்டியாமே. விருந்தாமே, ஏது, ஏது, குழந்தை வேண்டும் என்பதற்காக எப்படிப்பட்ட வருத்தம்" என்று விளையாட்டாகப் பேசினான். நாங்கள் அடைந்த அவமானம் சுடு சொற்களை இவன் கண்டானோ?" நானும் காந்திமதியும் கவலையின் பிரதிபிம்பங்களாக நிற்கவே, "ஓகோ தாம்பத்திய ஊடல் சமயம் நான் வந்தது தவறு. என்ன சண்டையோ?" என நழுவ ஆரம்பித்தவனைப் பற்றிக் கொண்டு நானும் வெளியேறினேன்.

ஆண்களுக்கு மனக்கவலையை மறக்க பரந்த உலகம் மற்றும் உத்தியோக அலுவல்கள் இருப்பதைப்போல பெண்களுக்கு வீட்டுக்குள் அடைபட்டவர்களுக்கு ஆறுதல் சொல்ல என்ன இருக்கிறது? கானகத்துக் காதலியைக் காரிருளில் கைவிட்டுச் சென்ற நளன்கூட அத்தனை வாதனைப்பட்டுச் சென்றிருக்கமாட்டான். நான் அடைந்த வாதனை சொல்லுக்கு அப்பாற்பட்டது. தமயந்தி அடைந்த வாதனை எனக்குத் தெரியாது. ஆனால் காந்திமதி அடைந்த வாதனையும் வருத்தமும் நன்றாகத் தெரியும். புகழேந்தியைப் போல் சொல்லும் ஆற்றல்மட்டும் இருந்தால்...

குழந்தையே இல்லாத நான் குழந்தையுள்ளம் கொண்ட கவியாக மாறுவது நடக்கக்கூடிய காரியமோ? என்னை விட்டுத்தள்ளுங்கள். காந்திமதிக்குத் தெருவில் தலைநீட்ட முடியாதபடி நேர்ந்த அவமானம் என்றைக்குத் தீரும்?

# 3. திருஷ்டியும் சிருஷ்டியும்

கல்லா மழலை கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லால் உருக்கி அழுதோடி தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லாதவர்க்கு மனைவாழ்வில் இனிமை யென்னும்?

—பாரதம்

"உனக்குப் பிள்ளையில்லாவிட்டால் காசி ராமேஸ்வரம் போ. எங்கள் பிள்ளைகளைக் கூப்பிட்டு ஏனையாரிலாச் சாப்பாடு போடவேண்டும்?" என்று வீடு தேடிவந்து பலரும் கூச்சல் போட்டால் என்ன செய்கிறது? நல்ல காரியங்களைப் பரவவிடுவதைவிட,கெடுதல் தரும் செயல்களைத்துரிதமாகப் பெண்கள் பரவவிடுவதில் சமர்த்தர்கள். பக்கத்து வீட்டு முருகன் தாயாரும் அடுத்த வீட்டு அம்புஜமும் குழாயடியில் "காந்திமதியம்மாள் செய்த காலித்தனம்" என்ற தலைப்பைக் கொடுத்துக் கொண்டு, தங்கள் குழந்தைகளுக்குச் செய்து விட்ட துரோகத்தை எடுத்துச் சொன்னதும், இது கேட்ட சித்தியும் மாமியும், அக்கா தங்கைகளும் ஒன்றுகூடி ஏகமனதாகத் தீர்மானித்தார்கள்.

இந்த நாளில் பிள்ளையில்லாதவர்கள் பெருமைப் படுவதைப் பார்க்கும் நாளில், பிள்ளைக்காக பூஜைகள், வேண்டுதல்கள் செய்வோரைக் கண்டுஉலகம் நகைக்கவும் செய்யும். பகைக்கவும் செய்யும்.

எங்களுக்கு முதலில் நகைப்பும் பின்னர் பகையும் கூடிவந்தன. பௌர்ணமி போய் மறு பௌர்ணமி வந்த சமயம்கூட நோய்வாய்ப்பட்ட குழந்தைகள் எங்கள் கண் திருஷ்டியால் படுத்துவிட்டதாகச் சொன்னார்கள். காந்திமதி தெருப்பக்கம் வந்தால்,பருந்தைக் கண்டகோழிக்குஞ்சுகளை

அணைத்துக்கொள்ளுவதைப் போன்று சம்பவங்கள் நடந்தன. காந்திமதி கண் பட்டாலே குழந்தைகள் நோய்வாய்ப் படும் என்ற செய்தி எழுதாச்சட்டமாக நிலவ ஆரம்பித்தது. பிள்ளையில்லாததுகூட பெரிய குறைபாடன்று. இதைப் பிறர் எடுத்துச் சொல்லி இழிவாக நடத்தும்போதுதான் மனசிலே பாராங்கல் சுமை ஏறுகிறது. இந்த அவதி காந்திமதிக்கு மட்டும் ஏற்பட்டு வந்தது. எனக்கும் தொடர ஆரம்பிக்கவே அரும்பாடுபட்டு கட்டிய நிலா முற்றம் வீட்டை விற்றுவிட்டு எங்கேனும் புதிய இடத்திற்குக் குடிபுகலாமா என நினைத்தோம். நினைக்கிறபடி நடக்கும் உலகம் இதுவா?

காந்திமதியை ஒரு வாரம் ஊருக்கு அனுப்பிவைக்கும்படி அவள் அப்பா எழுதியிருந்தார், ஒரு வாரம் என்றால் அவர் கணக்குப்படி ஒரு மாதம், அவரது சம்சாரம் அகராதியில் இரண்டு மாதங்களும் ஒரு வாரமும் ஆகும். உள்ளூரில் இரண்டொருவர்களுடன் மட்டுமே பேசும் வாய்ப்பும் சந்தர்ப்பமும் கிடைத்த காந்திமதி இந்தச் சிறைவாசத்திற்கு விடுதலை கிடைத்ததெனை எண்ணினாள். நானும் சந்தோஷமாக அனுப்பி வைத்தேன்.

காந்திமதி ஊருக்குப் போய்விட்டாலும் வீட்டிலே வேலைக்காரி வள்ளி வீடு பெருக்க, வெந்நீர் போட ஏதாவது ஓட்டலிலிருந்து எடுப்போ, டிபனோ வாங்கிவர இருக்கிறாள், காந்திமதியை நான் ஊருக்குக் கொண்டுவிட்ட சமயந்தான், மாமனார் வீட்டிலே சில ஏற்பாடுகள் நடைபெறுவது தெரியவந்தன. அந்த ஊரில் நாட்டு வைத்தியன் கைராசிக்காரன், மருந்து கொடுப்பானும், இது தவிர ஜோஸ்யர் பட்சி தோஷம் கழிக்கக் காத்திருந்தார். வைத்தியம், மாந்திரீகம் லௌகீகம் எனப் பலமுறையிலும் பிராயச்சித்தம் நடைபெறுவது தெரியவந்தன.

நான் சம்பிரதாயத்திற்கு விரோதியாக இல்லாது போனாலும்அதனைப் பக்தியுடன்கொண்டாடும்நபரல்ல, "நம்

அதிர்ஷ்டம் அவ்வளவே, ஆகுநாள் அன்றி மற்றபடி ஆகா" என்ற பரந்த கொள்கை யுடையவன். நானும் ஒரு வாரம் லீவுஎடுத்துப்போயிருந்ததால் என்னையும் காந்திமதியையும் உட்கார' வைத்து பல சடங்குகள் நடந்தன. எனக்குப்பிடிக்காத அம்சங்களைக் காந்திமதியின் மனம் புண்படாதிருக்கச் சகித்து வந்தேன். கிராமத்திலிருந்து வந்த ஒரு பூசாரி எத்தனையோ சாமான்களுக்குப்பட்டியல் தயாரித்திருந்தான். அதிலேகருஞ்சேவல் குஞ்சுகள்ஏழுஎன்பதும் ஒரு அயிட்டம். எனக்கு உயிர்வதை பிடிக்காது என்பதோடு, பரம்பரை சைவர் குலத்து வந்தவர்கள் கோழிக்குஞ்சை பலியிட்டு, வழி வழி வம்ச விருத்திக்கு வழி வகுக்கவும் மனம் இடந்தர வில்லை. காந்திமதி வயிற்றிலே ஒரு ஜீவன் பிறக்க ஏழு உயிர்கள் கோழியாக இருந்தாலும் சாவது எனக்குப் பிடிக்காததால் மனசைக் கடுமையாக்கிக் கொண்டு எதிர்த்தேன். காந்திமதி கூட பலியிடுவதை ஒப்புக்கொண்டது ஆச்சர்யம். தன்னலத்துக்காக உயிர்வதை செய்வது, பாவ புண்ணியம் என்பதற்காகவும், எண்ணமல் காணச்சகிக்காத பரிதாபம் என்பதற்காக உதறிவிட்டேன். தனக்கு ஏழு கருஞ்சேவல் குஞ்சுகளைத்தானமாகத்தரும்படி சொல்லிவிட்டான், பூசாரி. எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள்.

மெயில் வண்டி வேகத்தில் ஜோஸ்யத்தால் திருஷ்டி தோஷம்,பயங்கரி பூஜை வழிபாடு நடைபெற்றன; வைத்திய முறையில்மருந்து பக்குவம் நடைபெற்றன. இத்தனையும் சூரணங்கள், லேகியங்கள் சாப்பிடுவது எனக்கு வாதனையாகஇருந்தன. நவநாகரிக யுவதிகளும் யுவர்களும் அழகும் தேகக் கட்டும் குலையாதிருக்க இன்பப்பெருக்கை எண்ணிக் குழந்தையே வேண்டாமென மலட்டுத்துவம் செய்து கொள்ளும் இந்த நாளில் குழந்தைகாகப்பாடுபடுபவர்களைப் பார்த்துச் சிரிக்கத்தான் தோன்றும். பிறர் சிரித்தார்களோ சிரிப்பார்களோ என்றெண்ணமல் சகல 'கிரியைகளும் நடந்து முடிந்தன. ஜோஸ்யர் சொல்லிய முறைப்படி காசி

ராமேஸ்வரம் போய்வர வேண்டுமென்று ஒரு நிபந்தனையும் விதித்தார் மாமனார்.

என் குடும்பத்திலும் சரி, காந்திமதி குடும்பத்திலும் சரி, யாருமே காசியாத்திரை செய்தவர்கள் அல்லர். முக்கியமாகக் குழந்தைப்பேறு வேண்டிப்போகவில்லை. ராமேஸ்வரத்துக் கோயில் சிற்ப வேலைப்பாடுகள், மண்டபங்கள், வரையப்பட்ட ஓவியங்களைப் பார்த்தவர்கள் அவசியம் பிள்ளைப் பேறு அடைந்தே தீருவார்கள் என்று சொல்லினர். பாரம்பர்யத்திற்கு எதிராக நாங்கள் நடக்க வேண்டிய சூழ்ச்சிக்காலம் வந்துவிட்டது. ஆனாலும் என் முப்பாட்டனார் ஒருவர் தமக்குள்ள குடும்ப பாரத்தைக் குழந்தை குட்டிகளின் எண்ணிக்கையை நிர்வகிக்க முடியாமல், காசிக்கு ஓடிப்போய்விட்டார். குடும்பத்தை அநாதரவாக விட்டுவிட்டு தாம் மட்டும் மோட்சமடைய வழி தேடினார். அந்தப் பாவமே இப்போது எங்கள் வீட்டில் நிலவுவதாகவும் அதனால் குழந்தைப்பேறு இல்லையென்றும் சொன்னார்கள். எந்த நல்ல காரியம், எந்தக் கெட்ட காரியம் நடந்தாலும் அதற்கு அடுக்கடுக்காகக் காரணங்கள்சொல்ல சாஸ்திரத்தால் முடியும். யார் செய்த பாவமோ, நாங்கள் காசிக்கும் ராமேஸ்வரத்திற்கும் போகவேண்டுமா?

காசி ராமேஸ்வரத்தில் பொதிந்திருக்கும் தத்துவம் எனக்குத்தெரியும். உண்டு, கொழுத்து,உடலிலே வலுவற்றவர்கள் வெயிலிலும்மழையிலும் அலைந்து தத்தம்சரீரத்தைக் கஷ்டப்படுத்தி இரத்த வோட்டம், நல்ல சரீரம் பெறுகிறார்கள். பிரயாணக்காலத்திலே புருஷன் மனைவி சந்திப்புக்கு வாய்ப்பு கிடையாது. மூன்று மாதம் ஆறுமாதம் உடல் வலுவோடு பக்தி சிரத்தையாக க்ஷேத்திராடனம் போய் வந்த சமயம்,அவர்கள்குழந்தைப்பேற்றுக்குள்ள வலுவான தகுதியடைகிறார்கள், உடலைச் சரிப்படுத்தும் மார்க்கத்தைத்தான் கடவுள் பக்தியுடன் ஒட்டிவைத்திருக்கிறார்கள் என்ற தத்துவத்தை நான் அறிவேன். என் உடம்பும் காந்திமதி

யின் உடம்பும் நன்கு ஆரோக்யம் உள்ளவை. பொதுவாக பெண்கள் அதிகமான ஆரோக்கியம் உள்ளவர்களாக இருந்தால் கர்ப்பந்தரிப்பது மூன்றும்பிறைச் சந்திரனைக்காண்பது போல; நோயுற்றசிப்பியிலே முத்துப் பிறக்கும் என்பார்கள். உடலில் சிறிதளவு வலுக்குன்றியவர்களே நித்திய கர்ப்பிணிகளாய் இருப்பார்கள். நம்முடைய மூன்னோர்கள் பிள்ளைப்பேறு என்று பெருமையாக வார்த்தைப் பந்தல் போட்டாலும், கர்ப்பத்தைப் பிணியுடன் சேர்த்திருப்பதைப் பாருங்கள். ஆகவே, பத்தியம். விரதம் என்ற வகையில் காந்திமதியைப் பட்டினிப் போட்டு சிறிது உடல் சௌக்கியத்தை குறைப்பதுதான் நல்ல மார்க்கம் என்பதை நான் சொல்லுகிறேன். சொன்னால் விழலுக்கு இறைத்த நீராகிவிடுகிறது. அந்த ஒரு வாரத்தில் காந்திமதிக்கு அதிகப்படியாக புரதம் வைட்டமின் சத்துக்கள், கொழுப்புப் பதார்த்தங்கள் உடலில் சேர்ந்தன, நேர்மாறான காரியங்களை ஜோஸ்யம், மாந்திரீகம் என்றநம்பிக்கைகள் மூலம் செய்கிறார்கள் சொன்னாலும் கேட்கமாட்டார்கள், படித்தவர்கள் வீட்டுப் பெண்களும் அந்த வீட்டார்களுமே இந்த மாதிரிச் செய்வதில் வல்லுநர்கள்.

ஒரு வாரத்தில் என் உடம்பும் ஒரு சுற்றுப் பருத்திருந்தது. மாமியார் வீட்டுச் சாப்பாட்டுக்குள் மூங்கியெழுகின்ற மாப்பிள்ளைகள் பாடு எப்போதுமே இவ்வகை ஆபத்துக்குள்ளாக வேண்டும்.

வருஷம் இருபதுக்கு அப்பாலும் அந்தமரியாதை, மாமியார் மாப்பிள்ளைக்குகொடுக்கும் உணவு மரியாதை தனியே. எனக்கோ ஆறு ஏழு வருஷங்கள் தானே ஆகின்றன. அதிலும் காந்திமதியோடு என் மாமனாருக்கு மூன்றுகுழந்தைகள். இரு ஆண், காந்திமதி ஒருபெண். அதனால்பெண் குழந்தைகளின் தொல்லையை நன்கு அறியாத குடும்பம். வீட்டு மாப்பிள்ளையென்ற பின் வாரிசுகள் அற்ற குடும்பம் ஆகவே எப்போதும் எனக்கு அளவுக்கு அதிகமாக உணவு

மரியாதைகள் நடைபெறும். இந்தச் சமயமும் நடைபெற்றது. நான் ஊர் திரும்பிய சமயம், அக்கம் பக்கத்து கண் திருஷ்டி, பொல்லாப்பு பேச்சு, மலடுகள் என்ற அவச் சொல்லையே மறந்து போயிருந்தேன். எனக்கு மட்டும் ஒரு குழந்தை பிறந்தால் அதன் அருகாக ஒரு 'மைக்' அமைத்து, அதன் அழுகை, சிரிப்பு அது போட்டுடைக்கும் சாமான்களின் அலறல், வீறிட்டுக் கதறும் அழுகை, குழந்தையின் எல்லாவிதமான போக்கிரித் தனங்களையும் அக்கம் பக்கத்தாருக்குக் காது செவிடுபட அலற வைக்கப்போகிறேன், செய்வேனோ என்னமோ. செய்ய ஆசை பிறந்தது,

எங்களையா திட்டினீர்கள்! அட ஜன்மங்களா, எல்லோரும் கேளுங்கள் பெண்களே கேளுங்கள், எங்கள் குழந்தை போட்டுடைக்கும் தகர டப்பாவின் ஓசையைச் செவிமடுங்கள். இதோ ஊதல் வாசிக்கிறது கேளுங்கள். இதோ தகரவண்டி உருட்டுகிறது. திட்டின ஜன்மங்களே பழி சுமத்தியபாவிகளே கேளுங்கள், கேளுங்கள் என்றெல்லாம் 'மைக்' அமைத்து வீட்டைச் சுற்றி நாலாபுறமும் ஒலி பெருக்கி மூலம் சமைத்துப் பிறர் மூக்கை நறுக்கவேண்டும். சொன்னவர்கள் நாக்கைப் பிடுங்கிக் கொண்டும், இந்த அலறல்கள் சகிக்காமல் க்யூ வரிசையில் வந்து நின்று என்னிடம் மன்னிப்பு பெறல் வேண்டும்.

எவ்வளவு பெரிய பைத்தியக்கார எண்ணங்கள். இத்தனையும் நடத்தினல் ஊர் சிரிக்குமே என்று மனம் எண்ணுகிறதா? பழிவாங்க எண்ணும் மனசிற்குச் சிந்தனை கிடையாது. நான் அக்கம்பக்கத்தை மறந்து அன்றாட வேலையில் ஈடுபட்டு, ஆபீஸ் காரியங்களில் சிரத்தைக்காட்டி வந்தேன். காசி, ராமேஸ்வரம் போக நாற்பது நாட்கள் லீவு வாங்க, முன் ஏற்பாடாக மானேஜர் கண்ணில் நல்ல பிள்ளையாக விழ இருந்தேன். அவர் என் உழைப்பைப் புரிந்துகொண்டு, கடுமையாகவே நடத்தினர். ஏதோ ஒரு காரியத்தைச் சாதிக்கத்தான் அப்பழுக்கில்லாமல் காரியங்

களை முடிக்கிறேன் என்ற யூகம் தெரிந்தவர். ஆபீஸ் விவ காரங்களே இப்படித்தான். நல்ல வேளையாக ராமேஸ்வரம் போக எனக்கும் அதிகப் பணச்செலவு பிடிக்காது. ரயிலில் இலவச பாஸ் கிடைக்கும் எங்கள் இருவருக்கும். மற்றும் எத்தனை பேர் எங்களுக்குத் துணையாக வருவார்கள் என் பதை கணக்கெடுத்தபோது என் பாட்டிமார்கள், அத்தை மார்கள், விதவையான பந்துக்கள் (டிக்கெட்டுக்குப் பணம் கொடுப்பார்கள்.) உணவும் மற்றையச் செலவும் என் தலை யில் விழும். நாஸ்திக கொள்கை யுடையவர்கள், ஆனால் கோயில் குளம் சுற்ற ஆசையுள்ளவர்கள். நான் எவ்வாறு பொறுக்கி எடுத்தாலும் கிட்டத்தட்ட நூறு பேர் சேர்ந்து விடுவார்கள். நூறு பேருக்கு இந்த நாளில் சாப் பாட்டைப் போட்டு, வழியிலே அவர்கள் கட்டையைப் போட்டு, விடாமல் காசிக்கும் ராமேஸ்வரத்திற்கும் அழைத்துப் போய் வருவதென்றால்!!

தலை சுற்றுகிறது.

ஆண்டவனே குழந்தையைக் கொடுத்து விடு, காசி விஸ்வநாதா வேண்டாம் இந்தப் பொறுப்பு சங்கடங்கள் என்றே புலம்பினேன். இரண்டொருவராகப் பிரயாணம் போய் திரும்புவதே கஷ்டமான நாளில், யாத்ரா மார்க்கம் பரம கஷ்டமாக இருக்கும். நான் திகைத்துத் திண்டாடிய சமயம் ஏதோ வட இந்திய யாத்திரை ஸ்பெஷல் ஒரு மாதத்தில் புறப்படுவதாக பத்திரிகையில் விளம்பரம் செய்திருந்தார்கள். துணையோடு போய் வந்துவிடலாமென என் மாமனாரும் எழுதினார். காசி ராமேஸ்வரம் போவதை ரகசியமாக வைத்திருக்கும்படியும் அதிகமாகப் போனால் இரு குடும்பத்திலுமாக பத்து பேர் புறப்படலா மென்றும் எழுதியிருந்தார். எனக்கும் இது உசிதமாகப்பட்டது. என் தாய் தந்தையர்களுக்கு இது உசிதமாகப் படாது என்பது உலகப் பிரசித்தம். அவர்கள் குறைந்தபட்சம் ஐம்பது பேராவது போக வேண்டுமென்று சொன்னார்கள். பின்னை

யாகிய என் கௌரவத்தை நிலைநாட்ட பாடுபட்டார்கள். மாப்பிள்ளை வீட்டுச் செலவைகுறைக்க காந்திமதியின் வீட்டார் பாடுபட்டார்கள். இந்த இருவர் கட்சிகளுக்கும் ஊடே அவதிப்பட்டேன் நான். காசிக்குப் போகும் பிரயாணத்தை ஒத்திவைத்து விடுகிறது, தாற்காலிகமாக ராமேஸ்வரம் போய் வந்தாலே போதும் என்ற முடிவுக்கு வந்தோம்.

மறு மாதம் இன்ன தேதியில் ரயிலுக்குப் போகிறது என்று மூட்டை முடிச்சுகள் பிரயாணச் சாமான்கள் சேகரம் நடைபெற்றன. இதைக்கேட்ட நீ இரங்காயெனில் தானும் வருவதாகச் சொன்னான். அவன் பிரம்மச்சாரி. அவனையும் அழைத்துச் செல்ல வேண்டுமாம். கலியாணமான பின்னர் ஒருவேளை குழந்தை யில்லாது போக நேர்ந்தால் முன்கூட்டியே அந்தப் பாவத்தை நீக்கிக் கொள்ளுகிறானும். எப்படி முன் யோசனை? நானும் அவனை அழைத்துப் போவதாக ஒப்புக் கொண்டேன்.

"ஏண்டா பைத்தியம். அனுபவமுள்ள டாக்டர்களைப் போய்ப் பார்த்து உடலைச் சோதிப்பதை விட்டு இப்படி முட்டாள்தனம் செய்யலாமா?" என்று சொன்னான். மிகவும் உண்மையான புத்திமதி. தற்காலத்துக்கடவுள்கள் டாக்டர்கள் தானே. ஆக்கலும் அழித்தலும் செய்கிறவர்கள் இவர்கள். இதை மறந்து அதிகப்படியான பணச் செலவை நான் செய்ய இருந்தேன். இந்தப் புத்தி எனக்கு இல்லாது போனதற்கு வருந்துகிறேன். ஆனால் நமக்காகச் சில காரியங்கள், மனைவி மக்களுக்காகச் சில காரியங்கள் நடத்தவேண்டியதாகிறது. காந்திமதிக்குப் பிடிக்காத காரியத்தை என் மன சந்தோஷத்திற்காகச் செய்கிறதைப் பார்க்கிறேன். அதே போன்று அவள் மனத் திருப்திக்காக நான் ராமேஸ்வரம் புறப்பட்டே தீரவேண்டும் என்றேன்.

"முக்கியமாக அக்கம் பக்கத்தவர்களைப் பழிவாங்க உனக்கு ஒரு குழந்தை வேண்டுமென்பதே முக்கியநோக்கம் என்றான் நீ இரங்காயெனில்.

"என் நோக்கங்களில் அதுவும் ஒன்று" என்றேன்.

"நம்முடைய எண்ணெய்க் கடை வாலசுப்பிரமணிய செட்டியார்வாள் ராமேஸ்வரம் போய்வந்த கதை தெரியுமா?"

"என்ன விஷயம்?"

"அதுவா......" அவன் சொல்லமுடியாமல் சிரித்தான். பிறர் ராமேஸ்வரம் போவது பிள்ளை பெற்றவர்கள் சிரிக்கக் கூடிய காரியம். பிரம்மச்சாரி சிரித்தால் அதை சகிக்க முடியுமா?

"வாயை மூடு. பிரமச்சாரி சிரிக்க இதில் என்ன இருக்கிறது" என்று நண்பன் என்றும் பாராமல் கடிந்தேன்.

வள்ளி தபாலை வாங்கிக் கொண்டு வந்தவள் "இந்தாங்க ஐயா தபாலு. அம்மா எழுத்து மாதிரி இருக்குதே. என்ன எழுதியிருக்கு?" என்றுகேட்டாள். பெண்களுக்கு பரிபூரண நாணம் இருந்தாலும் எதை எப்போது கேட்கவேண்டுமோ அதை கேட்டேவிடுவார்கள். நான் தபாலைப் படிக்க உறை யைக் கிழிக்க ஆரம்பித்த சமயம், "டேய் எண்ணெய் கடைக்காரர் ராமேஸ்வரம் போய்வந்த கதை, இலக்கியம் உள்ளளவும் இடபெற வேண்டிய அற்புதமான கதை. அதிலும் பிள்ளையில்லாதார் ராமேஸ்வரம் போகுமுன் அறியவேண்டிய அற்புதமான கதை" என்ருன்.

என்கவனம் தபாலில் இருந்தது. ஆவல் ததும்ப கடிதத்தைப் பிரித்தேன். நான் எதிர்பாராத, திடுக்கிட வைக்கும் செய்தி அந்தக் கடிதத்தில் இருக்குமோ? தன் பேச்சைக் கேட்காமல் கடிதத்தை படிப்பதைக் கண்ட நீஇரங்கா யெனில் குழந்தை கையிலுள்ள பண்டத்தைப் பற்றியோடும் காக்கைப்போல் பிடுங்கிக் கொண்டு என்னை ஏமாற்றினுன். அவனது அற்புதக் கதையைக் கேட்டால்தான் காந்திமதி எழுதிய கடிதத்தைத் தருவதாகச் சொன்ஞன்.

நான் என்ன செய்வதெனத் தெரியாது கடிதத்தில் படித்த அந்த வரிகளை மட்டும் மீண்டும், மீண்டும் எண்ணிக்கொண்டிருந்தேன்.

"அன்புள்ள அத்தான் அவர்கள் திருப்பாத கமலங்களுக்கு, அடியாள் காந்திமதி..." அதற்குமேல் என்ன எழுதியிருந்தாள்? படுபாவி நீ இரங்காயெனில் கடிதத்தை வைத்துக் கொண்டு கதையை ஆரம்பித்தான்...

# 4. பிறவிப் பயன்

தம் பொருள் என்ப தம் மக்கள்

—திருவள்ளுவர்

ஸ்ரீமான் வாலசுப்பிரமணிய செட்டியார், எண்ணெய் வியாபாரம் அவர்கள் ராமேஸ்வரம், தனுஷ்கோடி போய் வந்த விவரத்தைச் சொல்ல ஆரம்பித்தபோது அசட்டையாக இருந்த நான் கதையில் விறுவிறுப்பு ஏற்பட்டதும் விழித்துக் கொண்டேன். எனக்கு ஏழு வருஷமாய் பிள்ளை இல்லையென நான் புறப்படலாமா வேண்டாமாவென்று நினைக்கிறேன். வாலசுப்பிரமணிய செட்டியார் பத்தாவது வருஷம் புறப்பட்டார்.

"ஸ்ரீமான் வாலன் அவர்கள் உன்னைப்போன்று படை திரட்டிக்கொண்டு ராமேஸ்வரம் கோவிலை முற்றுகையிடப் புறப்படவில்லை. அவர், அவரது தர்மபத்தினி இருவருமே புறப்பட்டனர். அவர்கள், எப்போதுமே இணைபிரியாத பறவைகள். தங்கள் பக்திக்கு இடையூறு வராத வண்ணம் ராமேஸ்வரம் யாத்திரை போய் வந்தார்கள். முழுக்குப் போடவேண்டிய கட்டங்களில் கைபிடித்து, மந்திர உச்சாடனம், தானம் இவை செய்து, பாவத்தைக் கடலில் கரைத்துவிட்டார்கள். தனுஷ்கோடி கடலலைகள், அவர் கரைத்த பாவத்தைப் பெற்றதால் ஓரடி உயரம் அதிகமாக அலை பாய்ந்தது. தனுஷ்கோடியில் குளித்து மூழ்கி, புண்ணிய புருஷன் புண்ணிய மனைவியாராய்ப் புறப்பட்டனர்.

கோபுர தரிசனம் பாவ விமோசனம் என்பார்கள் அப்படித்தான் ஆயிற்று. ஸ்ரீமான் வாலசுப்பிரமணிய செட்டியார் கோவிலுக்குப் போகும் முன்னதாகவே அவர்

மனசிலே 'அந்த முகம்' பதிந்துவிட்டது. சுருங்கச் சொல்லு கிறேன். அவர் பிள்ளைப்பேறு தேடிப்போன இடத்தில் பதினாறு வயதுடைய வாலைப் பெண்ணின்மீது அடங்காத காதலடைந்து ஊருக்கு திரும்பி வந்தபோது, அந்தப் பெண்ணையும் அழைத்து வந்துவிட்டார். செட்டியாரிடம் யாரெல்லாமோ தர்மம் நியாயம் நீதி போதித்தும் அவர் செக்கடிப் பிள்ளையாராகவே இருந்தார். முடிவில் போதனைகள் தோற்றன. நியாயம் தோற்றது. அவர் காதல் வென்றது. மூத்த மனைவியென்ற பட்டத்தைப் பெற்றாள் மனைவி. அநாதையாக இருந்த அப்பெண் அவர் ஆசைக்கும் அன்புக்கும் உரிய பெண் ஆனாள்."

நீ இரங்காயெனில் கற்பனை செய்த கதையை நான் விளையாட்டாக எண்ணிக்கொண்டிருந்தேன். வேலைக்கார வள்ளி, "அந்த ஐயா சொல்லறது உண்மைதான். ராமேஸ்வரம் போய் இந்தப் பாவத்தைக்கொண்டு வந்தார். பிள்ளை கூட பிறந்தது" என்றாள்.

"யாருக்கு"

"இளைய பெஞ்சாதிக்குத்தான் பிள்ளை பிறந்தது"

வேலைக்கார வள்ளியின் வாய்ச் சொல்லை கல்லில் செதுக்கவேண்டும். அவளுக்கு பிறர் குடும்பத்து ரகசியங்கள் மெய்—பொய் துல்லியமாகத் தெரியும்.

"பாவம். மனுஷன் எவ்வளவு முட்டாள் என்பதற்கு உனது வாலசுப்பிரமணியமே சாட்சி, என்றேன் நான்.

"குளிக்கப்போய் சேறு பூசிக் கொள்ளாமல் சேற்றிலிருந்த செந்தாமரையை அல்லவா, அவர் கொய்துகொண்டு வந்துவிட்டார்."

நீயிரங்காயெனில் கற்பனை, காவிய ரீதியில் இறங்கினாலும், அங்கே அக்கிரமமே இருப்பதை நான் உணர்ந்தேன். கட்டிய மனைவியின் மனம் புண்படாதிருக்கச் சென்ற கணவன், அவள் ஆயுளுக்கே உலைவைக்கும்

காரியத்தைச் செய்துவிட்டதை எத்தனை தீர்த்தக் கட்டங்களில் மூழ்கினாலும் தொலையாது. எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும் தீராது. என் அனுதாபத்தை உணர்ந்த நீயிரங்காயெனில், 'டேய் இது கதையல்ல வாழ்க்கை. கற்பனையல்ல, கண்ணாரக் கண்ட சம்பவம். எதற்குச் சொல்கிறேன். நீயும் வாலசுப்பிரமணிய செட்டியார் அடிச்சுவட்டில் நடை பயிலாதே, பயின்றுவிடாதே என்று எச்சரிக்கை செய்கிறேன். கபர்தார்" என்று முடித்தான்.

நீ இரங்காயெனில் சொல்லிய உண்மைக் கதையைப் போன்று ராமேஸ்வரம் போய் வருகிறவர்கள் அத்தனை பேருக்கும் ஏற்பட்டால், பூலோகம் வெடித்துச் சாம்பராகி விடும். நான் அத்தனை முட்டாள் அன்று. என் அருமைக் கண்மணி காந்திமதிக்கு துரோகம் செய்யவும் துணிவேனா?'

"சரி உன் கதையின் கருத்தை அறிந்தேன். கொடு மரியாதையாகக் கடிதத்தை" என்று அடக்கிவைத்திருந்த ஆத்திரத்தை வெளிப்படுத்தினேன். நீ இரங்காயெனில் சமய சஞ்சீவியாகச் சொன்ன கதைக்காக நான் நன்றி தெரிவிக்காது போகவே கடிதத்தை என்மீது வீசினான்.

"டேய், டேய் அவசியம் உன்னையும் அழைத்துப் போகிறேன். நீ கல்யாணமாகாத பயல். நாம் ராமேஸ்வரம் போகிறோம். அவ்வமயம் என்னைத் தாக்க வரும் பெண் புலியை நீ ஜயித்துவிடலாம்" என்று முதுகில் தட்டினேன். நீ இராங்காயெனிலையும் அழைத்துக்கொண்டு போவதெனத் தீர்மானித்துக் கடிதத்தைத் திருப்பினேன். "அன்புள்ள அத்தானுக்கு, அடியாள்...வணக்க'த்திற்கு அப்பால் என்னவெனப் பார்த்தேன.

எனக்கு இருந்த உற்சாகம் சொல்லுக்கு அடங்காது. என்ன நாகரிகமாகச் சொல்லியிருக்கிறாள் பாருங்கள். "இப்பவும் நான் இங்கே சௌக்கியம் உங்கள் பயல் என்னை உண்ணவிடவில்லை. நான் அன்ன ஆகாரத்தைக்கூட

தொடவிடாதபடி இத்தனை தொல்லை செய்கிருன்" என்று படித்தவரை சிரித்தேன். அதற்குள் பயல் என்று நிச்சயம் செய்துவிட்டாள். பயலோ, பெண்ணே அந்த மட்டும் புண்ணியம் வந்துவிட்டது என்று மனம் மகிழ்ச்சியடைந்தது. காசிக்கும் ராமேஸ்வரத்திற்கும் போகாமல் புண்ணியம் கைகூடிவிட்டது.

"டேய், டேய், வளைகாப்பு வருகிறதா, மீனு அக்காவுக்கு?" என்ருன்.

"ஆமாம், உன் கைக்கும் ஒரு சோடி வளையல் போடச் சொல்லுகிறேன்"

"சபாஷ். பலே சபாஷ். பௌர்ணமி விரதம், நோன்பு என்று நோற்ருலே கைமேல் பலன் கிடைக்கிறது அப்பாடா! முக்கியமாக ராமேஸ்வரம் பிரயாணம் கான்சல் ஆகிவிட்டது. குறைந்த பட்சம் இருநூறு ரூபாய் மிச்சம்" என்ருன்.

நான் மேலும் கடிதத்தைத் தொடர்ந்து படித்தேன்:

"எனக்கு அன்னத்தின்மீது ஆகாரத்தின்மீது வெறுப்பு ஏற்பட்டதே தவிர, அத்தான் நினைவாகவே இருக்கிறேன். சொல்லக்கூட வெட்கமாக இருக்கிறது. அம்மா இந்த சுபச்செய்தியை அறிந்து மாந்துளிர்ச் சேலை எடுத்துக் கொடுத்தாள். ரோஸ்கலர் ஜாக்கெட் தைத்தாள். இரண்டும் அணிந்து, என்னையே கண்ணுடியில் பார்த்த சமயம் நீங்கள் தான் தெரிந்தீர்கள். உங்கள் முகம் சற்றுவாடி இருக்கிறதைப் பார்த்தேன். ஓட்டல் சாப்பாட்டிஞல் நீங்கள் அன்ன ஆகாரமின்றி இருப்பதும்,என் மனசிற்குச் சங்கடமாய் இருக்கிறது. உங்கள் வாடிய கண்கள் என் வண்ண மேனியைப் பார்த்தால் என்னென்ன சொல்லுமோ? இதைத்தான் கற்பனை செய்துகொண்டிருக்கிறேன்."

இதுநாள்வரை காதல் வெறியில் நானும், அன்பு வலைப் பின்னலில் அவளும் எழுதிய கடிதங்கள், இந்த ஒரு கடிதத்

திற்கு உறைபோடக் காணுமா? அசோக சக்கரவர்த்தியின் பிரகடனத்தைக் கண்ட பிரஜைகள் கூட அத்தனை அன்போடு வரவேற்றிருப்பனரோ! சொல்லுக்குச் சொல் சொக்கழகு மெருகு கண்டேன். வானத்தின்மீது மிதந்தேன். என்னை இன்பபுரிக்குக் கைலாகு கொடுத்து அழைத்துச் செல்வதாகப்பட்டது. இத்தனை இன்பங்கள் கடிதம் மூலம் கிடைக்குமென்பதை நான் கற்பனையிலும் உணராதவன். உடனடியாகப் பூரணப் பொலிவோடு பொன்மலர் வாசமுடன் இருப்பதைக் காண ஆசை துள்ளாடியது. முதல் குழந்தை உண்டான எந்தப்பெண்ணுமே அழகின் சிகரமாய் இருப்பாள், அழகின் எல்லைக்கோடு கர்ப்பிணிக் கோலம். நிறத்தின் பசுமையும் தாய்மையின் பொலிவும் பச்சை நரம்புகளில் தோன்றும். மூக்கிலே, முழியிலே, கண்களின் மிதிப்பிலே கன்னக் கதுப்புக்களிலே கோடை மழையிலே சிலிர்த்து நிற்கும் மாபரத்துத் தளிர்களின் பசுமைபோலக் கண்கொள்ளாக் காட்சியாக எங்கும் இன்பத்தின் பசுமை சுடர்விடும். கடிததை மேலே படிக்கப் படிக்க எனக்குக் காந்திமதியின் புதுமைக் கோலமே தெரிந்தது. நாக்கு குழறிற்று கண்களில் இன்பம் மிதக்கிறது.

"அன்புள்ள அத்தான், நீங்கள் இவ்வாரத்துச் சனி ஞாயிறு இரண்டு தினங்களில் ஒரு வாரம் லீவு போட்டுக் கொண்டு வந்துவிடும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன். அப்படி வர சௌகர்யப்படாவிட்டால் நானும் அம்மாவும் அங்கே புறப்பட்டு வந்து விடுகிறோம்."

என்னிடம் எதையும் மனசில் மறைக்காமல் கூறும் பழக்கம் காந்திமதிக்கு இருந்ததால், இப்படிச் சொல்லி விட்டாள். நான், அந்த நிமிஷம் 'நிலாமுற்றத்து' வீட்டில் இல்லை. காந்திமதியின் தாய் வீட்டுக்குள் போய் நின்றேன், என் வீட்டிலே எதிரே இருந்த நீ இரங்காயெனில், வேலைக்கார வள்ளி இருவரையும் மறந்தேன். கடிதம் எழுத உட்கார்ந்துவிட்டேன்.

'ஏனய்யா, அம்மா லட்டருலே என்ன இருக்கு?' என்று வள்ளி பல தடவை கேட்டபோதுதான் எனக்கு விபரம் சொல்வதை எப்படி சொல்வதென யோசனை பிறந்தது.

'குளிக்காமல் இருக்குதாமா?'

'ஆமாம்'

'ஆயிமகமாயி புண்ணியத்திலே ஆம்புள்ளை கொளந்தே பிறக்கணும். அந்த அம்புஜம், அந்த முருவனம்மா ரெண்டு பேர் முகத்திலேயும் கரியைப் பூசணும்' என்று ஆனந்தத் திலே கையிலே இருந்த வெண்கலப் பானையைப் போட்டு உடைத்தாள். மற்ற சமயமாக இருந்தால் எனக்கு நாராச மாக இருக்கும். உடையும் பாத்திர சப்தம், தெய்வீக கான மாக ஒலித்தது. மனத்தின் தன்மையைப் பொறுத்தே சூழ்நிலையின் விளக்கம் விரிவடைகிறது.

'அம்மாவைப் பார்க்கணும் நானும் வருகிறேன். அம்மா வைப் பார்த்து வர' என்று ஆரம்பித்தாள் வேலைக்கார வள்ளி?

'நீ எதுக்காக வரணும்? அம்மாவே இங்கு வரப் போகுது' என்றான் நீ இரங்காயெனில்.

'ஆமாம் மணி. நாம் இருவரும் ஜாலியாக ஓட்டலுக்குப் போய் அங்கேயே மூன்று ஸ்வீட், பாயசம், பாதம்கூீர் உள் படசாப்பிடலாம்' என்றும் சொன்னான். நான் எதற்கு என விதமான பதில் சொவ்வது என்ற நிலையைக் கடந்து எங்கும் இனிமையான சந்தோஷம் நிலவுவதைக் கண்டேன். எதையோ கன்னுபின்னுவென பதில் எழுத ஆரம்பித்தேன். காந்திமதி. எனக்குக் கடிதம் எழுதியபடி நாகரிகமாக என் பதிற் கடிதம் அமைந்ததா?

ஆண், உணர்ச்சி வசப்பட்ட சமயம் உளறிக் கொட்டி விடுகிறவன் என்பது உலகப்பிரசித்தம். எதிலும் பெண்கள் கெட்டிக்காரர்கள். நான் எழுதிய கடிதத்தைப் படித்த

போது எனக்கே வெட்கமாக இருந்தது. எல்லை கடந்த நிலையில் மனக்கேளிக்கைகளை உற்சாகத்தை எழுதியிருந்தேன். மனம் போனபடி ஸ்தோத்திரம் செய்திருந்தேன். இரண்டொரு இடங்களில் 'தேவி' 'தாங்கள்' என்ற சொற்கள் விழுந்திருந்தன. ஒரே வரியில், அட நான், எழுதியதுதானு என்று திடுக்கிட்டுவிட்டேன். தனிமையில் வாய் வார்த்தையாக எழுதாத இலக்கியமாக இருக்க வேண்டிய சொற்களை எழுதியிருந்தேன். அதை அடித்துவிட வேண்டுமென நாகரிகஉள்ளம் சொல்லிற்று. ஆனால் மனைவி மீது கொண்டுள்ள அன்பு அடிக்காதே என்றது. மேல்நாட்டில் பிரமுகர்கள் சாமான்ய மனிதர்கள் தாங்கள் எப்போதோ யாருக்கோ எழுதிய கடிதங்களைச் சமயம் வாய்க்கும்போது புத்தகமாக வெளியிடுவார்கள். அப்படிப்பட்ட ஆபத்து எனக்கு நேராது. நேர்ந்தாலும் என் கடிதங்களைப் பதிப்பிக்கிறவர் அந்த வரியை எடுத்துவிட்டுத்தான் பதிப்பிப்பார்கள் என்று நம்புகிறேன். என் பித்து, மகிழ்ச்சிக் கடல்போலப் பொங்கிவழிய, ஆனந்த அலைகளில் மிதப்பனாக பக்கம் பக்கமாக எழுதியிருந்தேன். இதனை வேத வாக்கியங்களாக புனிதத்தன்மை நிறைந்தனவாகக் காந்திமதி எண்ணுவாள்.

நீ இரங்காயெனில் எஜமான் செயலை கவனித்தபடியே யிருக்கும் வளர்ப்புப் பூனை போல பார்த்துப் கொண்டிருந்தான். கையின் அசைவிலிருந்து நான் எழுதும் வாக்கியங்கள் என்னவாக இருக்குமென அவன் யோசித்தாலும், என் மனம் பச்சையாக பச்சைக் குழந்தையின் மழலையாக இருக்குமென்பதைக் காணமுடியாது. அவனுக்கு முன்னால் நான் கடிதம் எழுத ஆரம்பித்து முடித்த சமயம் கடிகாரத்தைப் பார்த்தால், ஆபீசுக்கு இரண்டுமணி நேரம் 'லேட்' என்று அறிந்தேன். இனி ஆபீஸ் போவது ஆபத்து; தாமதத்திற்குப் பல விளக்கங்கள் சொல்லியாகவேண்டும்.

'டேய், நீ இரங்காயெனில் இனி என்ன செய்ய?' என்றேன்.

'ஒரு நோய் எழுதுவாய் தலை வலி வயிற்றுவலி என்று விடுமுறை கடிதம் எழுதிக் கொடு; நான் சைக்கிளில் போய்ச் சேர்த்துவிடுகிறேன்.' என்று தோன்றாத் துணைவனாக இருக்கவே, ஒரு நாள் லீவுக்காகத் தலைவலியையும் வயிற்று வலியையும் லீவு கடிதத்தில் வரவழைத்தேன். நீ இரங்கா யெனில் என் சைக்கிளை எடுத்துக்கொண்டு ஆபீசுக்குப் போய் விட்டான். லீவு போட்டுவிட்டு என்றைக்குப் போய் காந்திமதியைக் காணலாம் என ஆசையுடன் கோட்டை கட்டிய சமயம் அடுத்த வீட்டுப் பாட்டி வந்தாள்.

"ஏனப்பா, காந்திமதிக்கு ஆண்குழந்தை பிறக்கட்டும்" என்று ஆசி தந்தாள். பெண்களுக்குத் தெரிந்த ரகஸியம் ராய்ட்டர் ஸ்தாபனத்திற்குத் தெரிந்த செய்தி போல வேக மாய் பரவக்கூடியது. இந்தச் செய்தியைப் பாட்டியிடம் வள்ளி சொல்லிவிட்டாள். பாட்டி என்னிடம் சேதி கேட்க வந்து நிற்கிறாள். பாட்டி ஆசி சொல்லும் போது என் முகத் திலே தந்தையாகப் போகும் அசட்டுக்களை ஜொலித்தது.

"ஆமாம். கடிதம் வந்தது" என்றேன். பாட்டி மாதக் கணக்கை எப்படியோ உச்சரித்தாள்.

"அப்போ ராமேஸ்வரம் போகப் போவதில்லை" என்றாள். எங்களுடன் தானும் ராமேஸ்வரத்திற்கு வர எண்ணம் இருந்திருக்க வேண்டும்; இல்லாது போனால் கேட்பானேன்?

"போகவேண்டிய அவசியம் இல்லை" என்றேன். பாட்டிக்கு வெகு சந்தோஷம், வள்ளிக்கு சந்தோஷம். மற்ற வர்களுக்கு சந்தோஷம் இருக்கிறபோது என் பெற்றோர், அவள் பெற்றோர் இவர்களுக்குள்ள சந்தோஷம் எவ்வளவு பிரமாண்டமானதாக இருக்கும்! ஆயினும் இந்த நற் செய்தியை நாராசமாக உணரக்கூடிய நபர் ஒருத்தி உண்டு. என்னருமைத் தங்கையே அவள். அவளுக்குள்ள ஏழு குழந்தைகளில் ஒருகுழந்தையை நாங்கள் தத்து எடுக்கிறது

என்று பேச்சளவில் சொல்லியிருந்தோம். செயலளவில் செய்வதா வேண்டாமா என்ற இரண்டும் கெட்டான் சமயத்தில், இந்தச் செய்தியைக் கேட்டு அவள் மனம்தான் உடையவேண்டும். தனது குழந்தை ஒன்று சௌகர்யமாக வாழும் வாழ்வுக்குத் தடை வந்துவிட்டதே யென்று நினைப்பாள். எந்த நல்ல காரியமும் நன்னோக்கமும் உலகில் யாரோ சிலருக்குத் தீமையைத் தருகின்றன. துன்பமாகத் தான் அருமைத் தங்கை பாலா நினைத்திருப்பாள்.

மனைவி காந்திமதி, என்னருமைத் தங்கை பாலா மற்றும் உற்றார் உறவினர்கள் எல்லோரையும் மானசீகமாகக் கண்டு பேசிக் கொண்டிருந்தேன். பாட்டி தன் ஆசியையும் அன்பையும் சொல்லிவிட்டு, "இந்தாப்பா மணி காந்திமதியை இங்கே அழைத்துவா. வளைகாப்பு முடிந்த பின்னர் நல்ல நாள் பார்த்து அழைத்துப் போகட்டும்" என்று சொன்னாள். இதுதான் உலக சம்பிரதாயமாம். இத்துடனே, வளைகாப்பு விசேடத்திற்கு ஆண்டவஞ் செட்டியார்—வளையல் கடைக்காரர்—ஆகிவந்த கை, அவரையே அழைத்து வரலாம் என்றும் சொன்னாள். மாடுவாங்கு முன் மோர் விலை சொன்ன கதையாக வளைகாப்புக்கு யார் வந்து வளையல் அடுக்க வரவேண்டுமென்றும் பாட்டி சொல்லிவிட்டாள். பெண்கள் கற்பனை சாலிகள். வரப்போகும் இன்பம் துன்பம் இரண்டையும் பெருக்கிக் கொள்வதில் சமர்த்தர்கள்.

என் வாழ்நாளில் ஏற்பட்ட சந்தோஷ சம்பவங்களில் காந்திமதியின் இன்றையக் கடிதத்திற்கு ஈடு இணை கிடையாது என்றே சொல்வேன்.

என்மனமிருந்த எக்களிப்பில், என் தகப்பனுருக்கு சுபச் செய்தியை நாகரிகமாக எழுதி அனுப்ப எண்ணினேன். ஆபீஸில் லீவு போட என்ன பொய்யைச் சொல்லி டாக்டர் உறுதிமொழியுடன் எந்த வியாதியைக் காட்டுவ

தென்று உழன்றேன். என் மனம் ஒரு நிலையில் இல்லை. பிள்ளையில்லாதிருந்து, பிள்ளைப் பேற்றின் அறிகுறிகள் தெரிகின்றன என்பதை அனுபவித்தவர்களுக்குத் தான் இவ்வகை சந்தோஷம் தெரியும்.

நீ இரங்காயெனில் ஆபீஸ் சென்றவன் ஒரு கடிதம் கொண்டு வந்தான். அதிலே தெரிவிக்கப் பெற்ற விஷயம் என் பிரயாணத்திற்கு எமனாக இருந்தது. என்னை அடுத்த படியிலுள்ள காம்ப் கிளார்க்கு உத்தியோகத்திற்கு மாற்றல் ஏற்படுத்தியிருப்பதால் உடனடியாக மறுநாள் நான் வந்து அந்த வேலையை ஒத்துக்கொள்ள வேண்டுமென்று குறிப்பு வந்தது. காந்திமதியை நான் போய்க் காணமுடியாதபடி குறுக்கீடுகள் விந்துவிட்டன. அவளே புறப்பட்டு வர வேண்டும். வரும்வரை என் மனசில் அடங்காப்புயல் அடித்துக் கொண்டே இருக்கும்.

நேரில் போகமுடியாத காரணத்தை எழுதிவிட்டு எப்படியும் வந்து சேரவும்என்று குறிப்பு எழுதினேன். மற்றக் காலங்களில் நினைத்தவுடன் தாய் வீட்டைவிட்டு காந்திமதி புறப்படுவதுபோல இனி புறப்பட முடியாது. அவள் பிள்ளைத்தாச்சி. ஆகவே கட்டுப்பாடுகள், நல்ல வேளை என்ற காலக் கணக்குகள் குறுக்கிடும் என்றறிந்தேன். சனி ஞாயிறு தினங்களில் போய்வருவதைத் தவிர வேறு வழியில்லை.

ஒரு வாரம் போவது ஒரு யுகமாக இருக்கிறது.

## 5. குங்குமப்பூ முதல் குடும்ப பூசல் வரை!

ஏ கிருகஸ்தர்களே! ஜாக்கிரதை. ஸ்திரீயினிடத்தில் அதிக நம்பிக்கை வைக்காதீர்கள். அவர்கள் உங்கள்மீது அளவற்ற அதிகாரஞ் செலுத்த ஆரம்பித்து விடுவார்கள். குரங்கானது வேடனுடைய பாதத்தினடியிலே தன்னுடைய ஜீவனைத் தியாகம் செய்கிறதுபோல, மனிதன் அழகிய ஸ்திரீயின் பாதங்களினடியிலே தன்னைத் தியாகம் செய்கிறான்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸர்.

சூழ்ந்தையுண்டாயிருக்கும் காந்திமதியை நாடிப்போக நினைத்த வேகத்தைப் பார்த்தால், முதன் முதலில் அவளைச் சந்தித்தபோது கல்யாண சமயத்தில் என்ன மாதிரி ஆசைகளும் பாசங்களும் துடித்தனவோ, அப்படித்தான் இப்போதும்எனக்கு ஏற்பட்டன.இடையிலே ஏற்பட்ட ஏழு வருஷ அனுபவங்கள்கூட எனக்கு மறந்துவிட்டன. அதுவும் போக முடியாத தடையேற்பட்ட காரணத்தால் இன்னும் பதின்மடங்கு ஆசையும் பாசமும் பெருக ஆரம்பித்தன. அளவிற்கு மிஞ்சிய பாசங்கள் ஆபத்து தருகிறவை என்பதை அறிவேன். பாசந்தான், சகல துன்பங்களுக்கும் வழிகாட்டி, பிறப்பிடம்; முற்றும் துறந்தவர்கள் இவற்றைச் சொல்லட்டும். நடைமுறையில் கைப்பிடிப்பது முடியாத காரியம், முக்கியமாக இல்லற வாசிகளுக்கு முடியாத காரியம்.

சனி, ஞாயிறு லீவு நாட்களில் நான் காந்திமதியைப் பார்த்துவரத் திட்டமிட்ட சமயம், வெளியூர் காம்ப் புறப்பட இருந்த பெரிய துரைக்குத் துணையாக, உடன் போக வேண்டியதாயிற்று. என் வரவை ஆவலோடு எதிர்பார்த்தவளுக்குக் கடிதம் எழுத நேர்ந்தது. காந்திமதி நெருப்

பிடைபபடட புழுவாகத்தான் துடித்திருக்க வேண்டும். தன் புதுமை அழகை நான் காண முடியாமல் பின் தங்குவதைக் கண்டு அழுது துடிக்கலாம். கடலின் வெண் முத்துக்கள் போன்ற கண்ணீர்த் துளிகளை உதிர்த்துக் கொண்டிருப்பாள். வயிற்றுப் பெருமாள் பொருட்டு மனதிற்குப் பிடிக்காத வேலையைப் பார்க்கவும், மனதிற்குப் பிடித்தமான சந்தோஷத்தை மறக்கவும் நேரிடுகிறதே. காந்திமதியின் மனநிலை என்னவாக இருக்குமோ? பெண்கள் தங்கள் தாபத்தையும் இல்லற சந்தோஷத்தையும் வெளிப்படையாகக் காட்டமாட்டார்கள். ஆண்கள் கவலையை வெளிப்படையாகக் காட்டமாட்டார்கள்.

நான், உத்தியோகத்தையும், துரையையும் திட்டிக் கொண்டு வெளியூர் புறப்பட்டேன். துரைகள் எப்போதுமே துரைசானிகள் இல்லாது வெளியூர் போக மாட்டார்கள். நகமும் சதையும் என்பது அவர்கள் இல் வாழ்க்கையில் தான் பொருந்தும், நாலைந்து நாள் வெகு சிரமப்பட்டு வெளியூர் பிரயாணத்தை முடித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தால், காந்திமதி இருக்கிறாள்! கனவுதானோ என்று சொல்லும்படி முகக்களையில் மாற்றம். கரங்களிலோ பசுமை. கண்களில்தான் எத்தனை கருமையும் செழுமையும்! கண்ணின் அடியிலே அழகுக்கு அழகாய் அற்புதமான கருமை படிந்திருந்தது! நான் சொக்கிப் போய்விட்டேன்.

காந்திமதியின் அழகைவிட, குணந்தான் என் முன்னால் சுடர்விட்டது. அவள் தாய்மை உருவத்தைக் கண்டு நான் சந்தோஷங்கொள்ள வேண்டுமெனத் தனது தாய் தந்தையர் பேச்சைத் தட்டி ஓடோடியும் வந்துவிட்டாள், அவள் அப்பாவுக்கு வெகு கோபம். அடிக்கடி பிள்ளைத்தாச்சி ரயில் பிரயாணம் செய்யக்கூடாது என்று அவர் சொன்னாலும் நான், அடைகிற மகிழ்ச்சியை அவர் கண்டாரா? பெற்றோர் பாசத்தைவிட புருஷனின் அன்புதான் பெண்

ணின் ஒரே சொத்து. மற்றவர்கள் எப்படியோ காந்தி மதிக்கு இதுவே கண் நிறைந்த சொத்து.

குல்கந்து, குங்குமப்பூ என்று தோலா தோலாவாக வாங்கி வந்தேன். அவளுக்குப் பிடித்தமான தாழம்பூவை ஆறணு எட்டணுக் கொடுத்து வாங்குவதும், விதவிதமான மனசிற்குப் பிடித்தமான பண்டங்களைச் செய்து கொள்ளும் படியும் சொன்னேன். சில சமயங்களில், சொல்லுவதற் குக்கூட வெட்கம் தான். நானே சமையலறையில் புகுந்து உதவிகள் செய்வதுமாக இருந்தேன், சிற்ருளாக கையாளாக இருந்து உதவிசெய்த நான், பிரிவுக் காலத்துச் சமையல் அறையில் புகும்போது ஓரளவு பயிற்சி பெற்ற ஆளாக விளங்கினேன். 'மலடு' 'பிள்ளையில்லாத பாவி', என்ற வசைச் சொற்களைப் போக்கும் உத்தமியாகிவிட்டவளுக்கு சமயா சமயத்தில் அடுப்பு பற்றவைத்தல், வெந்நீர் பானையை உடன்பிடித்துத் தூக்குதல், நாற்காலி ஸ்டூல் இவைகளில் ஏறி பரணியிலிருந்து பாரமான சாமான்களை இறக்குதல், —ஏற்றுதல் முதலான குடும்ப போர்ட்டர் உத்தியோகம் செய்தேன். இன்னும் பல உதவிகளை அவள் மறுத்தும் நான் செய்ய ஆரம்பித்தேன். என் குற்றேவல் கண்ட காந்திமதியின் தாயாருக்கு மகிழ்ச்சி கட்டுக்கடங்காது. மகளுக்கு அடங்கிய மருமகனைக் கண்டால் எந்த மாமி யாரும் திருப்திபடுவது இயல்புதானே.

"உன் அப்பா, ஒரு துரும்பை எடுப்பாங்களா? நீ கொடுத்து வைத்தவள் மீனு" என்று மகளைக் கண்டு தாயார் பெருமைப்பட்டதை நானே காதாரக் கேட்டேன். என்னடா! அசட்டுத்தனமாக மாமியார் முன்னிலையில் மனை விக்கு உதவி செய்கிருமே என்று மனம் கூசும். காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே வானத்தையே சாட முடியும் என்று சொன்னுர் பாரதியார். அதுவும் காதற் பெண்கள் பிள்ளைத்தாச்சியாக இருக்கும்போது அவர்களுக் காக வானத்துக்கும் அப்பால் போய்க் காரியங்களை சாதிக்

கத் தோன்றும். அநேகமாக வேலைக்காரி வள்ளிகூட எனது குற்றேவல் தன்மை கண்டு சண்டைக்கு வந்து விட்டாள்.

"இந்தாம்மா நான் வேலையிலிருந்து நின்றுவிடுகிறேன். இது நாள்வரை ஒரு துரும்பை எடுத்துப் போடுவாங்களா ஐயா? இப்ப என்னடான்னு, வீட்டு வேலையே செய்ய ஆரம் பிக்கிறாங்க. எனக்கில்லே அவமானமாக இருக்கு. வேலை செய்ய நான் இல்லேயா?" என்று வேலைக்காரி அவமானப் படும்படியான அளவுக்கு நான் காந்திமதிக்கு சிசுருஷை செய்திருக்கிறேன்.

"வள்ளி, அவங்க சும்மா நாலு நாளைக்கு ஓடியாடி வருவாங்க. அப்பாலே ஓடிப் போயிடுவாங்க" என்பாள் காந்திமதி.

கர்ப்பிணிகள் பொதுவாகவே நாவடக்க முடியா தவர்கள். இதைச் சாக்கிட்டு விதவிதப் பண்டங்கள் கார வகை தித்திப்பு ரகங்கள் செய்வார்கள். நம்முடைய வாழ்க்கை முறையில் விசேடம்,நல்ல நாள்,கொண்டாட்டம் என்றால், சாப்பாட்டு வகைதானே முக்கிய பங்குபெறும். அதிலும் எங்கே சாப்பிட்டாலும் சாப்பிடாவிட்டாலும் தலைச்சன்பிள்ளை உண்டான பெண்ணுக்கு உணவு தயாரிக் கும் வகைகளை உண்ணும் பாக்கியம் கிடைக்கவேண்டும். அந்தப் பாக்கியம் எனக்குப் பரிபூரணமாகக் கிடைத்தது. செலவையும் பணத்தையும் யார் எதிர்பார்க்கிறார்கள். கவலை அதுவா? காந்திமதி நல்லுணவு உண்டாளா? நல்ல துணி மணி உடுத்துகிறாளா, சீவிச் சிங்காரித்துக் கொலுப் பொம்மைபோல, கடின உழைப்புக்காளாகாமல் இருக்கி றாளா? இதுவே பெருமைப்படும் பேச்சு. இதுதான் எல்லோருக்கும் கவலை. ஓயாக் கவலை.

கண் காட்சிசாலையில் இருக்கும் ஓவியம் சிற்பம், காண வருகிறவர்கள் போன்று உறவினர்கள் காந்திமதியைக்காண

வந்தார்கள். நெய்யிலே முறுக்கும், தேன்குழலும், திரட்டுப் பாலும் அதுவும் இதுவுமாகக் கொண்டுவந்தார்கள். அவன் பெயரைச் சொல்லி நான் தின்றேன். நான் நிறைய சாப்பிடு வதில் சாந்திமதிக்கு எப்போதும் மகிழ்ச்சி உண்டு. போகும் போதும் வரும்போதும் குத்துக் குத்தாகப் பட்சணங்களை அள்ளிச் சிறுகுழந்தையாகத் தின்றேன். ஆபீசுக்குக்கூட பொட்டலங் கட்டிக்கொண்டு போனேன்.

காந்திமதியின் உடலிலும் உள்ளத்திலும் வளர்ச்சி ஏற் பட்டன. என் தாயாரும் மாமியாரும் வீட்டோடு தங்கினர். கண் இமைக்குள் வைத்துக் காத்தார்கள். நான் சில சமயம் சண்டையிடுவது உண்டு. அவள் ஏதாவது வேலைசெய்ய வேண்டும், வேலையில்லாது சோம்பேறியாக இருந்தால் அதனால் கஷ்டங்கள் உண்டெனப் படித்திருந்தேன். கர்ப்ப ஸ்திரீகள் செய்ய வேண்டிய அப்பியாசங்கள் அனுசரிக்க வேண்டிய அன்றாட பழக்கங்கள் இவைகளைப் புதிது புதி தாகப் படித்துச் சொல்வேன். வீட்டிலே கர்ப்பிணிக்கு வேண்டிய புத்திமதிகளைச் சொல்லும் பத்திருபது புத்த கங்கள் வாங்கியிருந்தேன். அவைகளிலிருந்து சாறு எடுத்து விஷயங்களை காந்திமதிக்குப் புகட்டுவதும் உண்டு. காந்தி மதிக்கு எல்லாம் வியப்பாக இருந்தன. தனக்கே இந்தப் பாடு உபசரிப்பு என்றால் ராஜ கன்னிகைகளுக்கு எப்படி எப்படி நடக்குமெனச் சொல்லுவாள்.

''உன்னைவிட உலகத்தில் எந்தப் பெண்மணி உசத்தி?''

''ராணிகள் இருக்கிறார்கள்''

"நீதான் என் ராணி?''

''ஆமாம் ராஜா'' என்பாள் கொஞ்சலாக.

இருவரும் சிரிப்போம். காணுததைக் கண்ட கனவு லோகப் பதுமைகளாக இருந்தோம்,என் உறவினர்களில் எல் லோருக்குமே சந்ததியின் அறிகுறி தெரிந்தது பூற்றி மகிழ்ச்சி. உடன்பிறந்த தங்கைக்கு மட்டும் கட்டுக்கடங்காத கோபம்.

பாலா தன்னை வந்து பார்க்கவில்லையென்ற கோபம், காந்தி மதிக்கு மனசிற்குள் இருந்தது. அப்பால் வருத்தம் முகத்திலே இருந்தது. உதட்டிலிருந்து வெளியேயும் சொன்னுள். தன்னை அவமானம் செய்துவிட்டதாக எண்ணம் விழுகிறவர்களுடைய பேச்சிலே நிதானம் தவறும். பழிச் சொல் எகிறிப்பாயும். அப்படித்தான் வந்தது. என் தங்கை என்பதற்காக நான் பரிந்து பேசினுல் அவள் கோபம் பன்மடங்காகும். அடிநாளில் தங்கையின் கல்யாணச் செலவுமுதல் பிள்ளைப்பேறுவரை, நான்பல ஆயிரம் கொட்டியிருக்கிறேன். இது காந்திமதியின் போதனையால்செய்த உதவிகள் தான். கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்று அவள் வாதாடுவாள். அப்படி அவள் உதவிகளுக்குப் பாத்திரமாக இருந்தும் தன்னைக்காண பாலாவரவில்லையெனச் சூடாகப் பேசினுள்.

என்னதான் நியாயமான வார்த்தையாக இருந்தாலும் பெற்ற தாய்க்கு விஷமாகத்தான் இருக்கும். என் அம்மாவுக்கு,காந்திமதியின் பேச்சு,குறைபாடான சொல் பிரமாதமாகப் பட்டன. தன் மகளைப் பற்றி எந்த தாய்க்கு தாழ்வாகப்படும்? மகள் வராததைப் பற்றிப் பேசக்கூடாதென அவள் சொல்லிப்பார்த்தாள். நான் "வளைகாப்புச் சமயம் வந்து சேர்வாள், உன் மதனி வராவிட்டால் என்ன கெட்டுப்போகும்?" என்றேன்.

"இதற்குமுன் மாதக் கணக்கில் நம் வீட்டில் டேராப் போட்டவர்களுக்கு இப்போது ஏன் வரப்பிடிக்கவில்லை" இதை ஒரு தடவை சொன்னுலும் சரி ஒன்பதாயிரம் தடவை சொன்னுலும் சரியே, ஆனுல் தடவைக்குத் தடவை கோபத்தின் காரம் சொல்லுக்குள் ஊறி நிற்கும்.

காந்திமதியின் தாய் "ஏனம்மா சும்மா மனசை அலட்டிக்கொள்ளுகிருய்? அவர்கள் வீட்டிலே சௌகர்யங்கள் எப்படியோ? வரமுடியாமல் இருக்கலாம்" என்ருள். மகள் கோபத்தைத் தணிக்க அவள் தாயாரும்,தன் மகள் சார்பா

என் தாயாரும் பேசினால் எங்கேபோய் நிற்குமோ அங்கே வந்து நின்றது. அதாவது மாமியாரும் தாயாரும் கராம் புராம் என்று ஒரே வீட்டுக்குள் நடக்க ஆரம்பித்தார்கள். ஒருவரைக் கண்டால் மற்றவர்கள் அடுத்த அறைக்குள் போய் விடுவது என்ற அபாய நிலைமை முற்றிற்று. வீட்டு எஜமானனுக்கு வேறு நரக வேதனை வேண்டாம். தன் தாயாரும்—மனைவியின் தாயாரும் கோபங் கொண்டால் அதில் யார் பக்கம் நியாயம் இருந்தாலும் அவன் வாய் திறப்பது அபாயம். இரு பக்கமும் இரு எரிமலைக்குள் அகப்பட்ட ஜீவன் என்ன நிலையை அடையுமோ அப்படித் துடித்தேன். அன்புப் பெருக்கு, ஆசை வெள்ளங்களில் எத்தனை அபாயக் குமிழிகள் கும்மித்தெறிக்கின்றன. இது நாள்வரை என் மாமியரும் காந்திமதியின் மாமியாரும் அன்யோன்யமாக இருந்தவர்கள் மத்தியில், காந்திமதியின் வயிற்றிலே இருக்கும் சிசு சண்டையை வளர்க்கிறது. ஆண்டவனே, பிள்ளை பிறக்கும் முன்னதாகவே இந்தமாதிரி கொடிகட்ட ஆரம்பித்தார்களே இனி எத்தனை எத்தனை மகாயுத்தங்கள், களேபரங்கள் என் தலையில் விழுமோ? சொல்லவும் தள்ளவும் மெல்லவும் கொள்ளவும் முடியாது தவிக்க ஆரம்பித்தேன். இம்மாதிரியான கஷ்டங்கள் பெண்ணின் தலையில் விழும்; அப்போது அவள் மனம் வேதனைப்படும்; அவள்வயிற்றிலுள்ள ஜீவனுக்கு அது கெடுதல் தரும்—என்ற நன்னோக்கத்தோடுதான் பெண்ணைப் பேறு காலத்திற்குத் தாய்வீடு அழைக்கிறார்கள் போலும், எவ்வளவு சீரியவழக்கம். சிறந்த முன்யோசனை!

காந்திமதி என்னருகே இருந்து மனமகிழ்ச்சியடைவதைவிட, அவளைத் தாய்வீட்டுக்கு விரைவில் அனுப்பிவிட்டால் குடும்பக் கலகங்கள் அடங்கலாம். ஆகவே வளைகாப்பை சீக்கிரம் முடிக்கலாம் என்றால், அது ஏழாம் மாதந்தான் நடத்த வேண்டுமாம். இன்னும் மூன்று மாதங்கள் தொண்ணூறு நாட்கள் நான் நரகத்தில் இருக்கவா? ஆண்ட

வனே பிள்ளைப்பேறு பெறுகிறவர்களுக்கு சந்தோஷமாக இருந்தாலும் சுற்றத்துச் சூழ்நிலைகள் எத்தனைமனக் கஷ்டமாக இருக்கின்றன.

என் தகப்பனுர் "வளைகாப்பை நமது வீட்டில் நடத்த வேண்டும். உன் தாயாரையும் காந்திமதியையும் இங்கேயே அனுப்பி வை. இங்கு கிராமத்திலே நல்ல காற்று, பச்சைக் காய்கறி. பில்லைப் பசு கன்று போட்டிருக்கிறது. வீட்டுப்பால். இங்கு தங்குவது உடம்புக்கு நல்லது." என்று எழுதிவிட்டார், புதிய பிரச்னையைக் காந்திமதி ஒப்புக் கொள்ளவேண்டும். அவளுக்கு இருக்கும் மனத் தாங்கலில் மாட்டேனென்ருல் எனக்குத்தான் தகப்பனுரின் ஏச்சுக் கிடைக்கும் "பெஞ்சாதிக்குப்பயந்த பயல்" என்று சொல்லு வார். தகப்பனுர் அன்பை நோகச்செய்யும் மனப்போக்கு எனக்குக் கிடையாது.

மாமியார், "ஆமாம் மீனு, உன் மாமியாருடன் போய் அங்கே இருப்பது நல்லது. வளைகாப்பு முடிந்த கையோடு அழைத்துப்போகிருேம்" என்ருள். மாமியார், தன் மகள் எங்கேயாவது மனக் கசப்பின்றி இருக்கட்டும் என்று நினைத்தாள். முக்கியமாக எங்கள் நிலா முற்றத்தை விட்டுத் தன்னூர் போய்விட அவசரப்படடாள். தகப்பனுர் கடிதத்தையும்போகவேணடிய அவசியத்தையும் பாம்புக்குப் பால்வார்க்கும்பயத்தோடு வற்புறுத்தி,நல்லதோர் தினத்தில் ஊரில் கொண்டுபோய் சேர்த்தேன். அதே தினம் வேறு ரயி லில் மாமியார் தன்னுடைய ஊருக்குப் போய்ச் சேர்ந்தாள்.

இரண்டு மூன்று தினங்கள் சொந்த ஊரில் காந்தி மதியை எங்கள் வீட்டில் விட்டுவிட்டு பாழும் வயிற்றுக்கு உத்தியோகம் பார்க்க வந்தேன். தான் மிகவும் சந்தோஷ மாகவும், உற்சாகமாகவும் தன் மாமியார் செய்யும், உப சரிப்பு பணிவிடை பட்சண பண்டங்கள் உள்பட, ஆனந்த லாகிரியில் மிதந்தது குறித்து யாவும் எழுதியிருந்தாள்.

எனக்கும் பெரிய பொறுப்பு விட்டது. பாம்பும் செத்தது, கோலும் முறியவில்லை என்றபடி காந்திமதியும் சந்தோஷமாக, என் தாய் தந்தையரும் சந்தோஷமாக இருப்பதைக் கடிதமூலம் அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைந்தேன்.

இடையிடையே போய் வந்தேன். கோரோசனை, குல்கந்து, குங்குமப்பூ வாங்கிக்கொண்டு போவேன் என்பது நீங்கள் ஊகித்துக்கொள்ள வேண்டும், சூடேறிய காய்ச்சிய கட்டிப் பாலில் பனங்கற்கண்டுடன் குங்குமப் பூவை போட்டுக் குடித்தால், ரோஜாவின் இதழ்பசுமை போன்று குழந்தை இருக்குமாம். யார்தான் தன் குழந்தை அழகாக இருக்க வேண்டுமென நினையாதார்? இந்த மாதிரி இன்பம் பெருகி ஓடிய சமயம் ஓர் அலை குறுக்கிட்டது.

தங்கை பாலா தாயாரின் வீட்டிற்கு விஜயம் செய்திருக்கிறாள். முதலில் காந்திமதியும் தங்கையும் மனசிற்குள் கோபத்தை அடக்கிப் பழகியிருக்கிறார்கள், எப்படியோ புகைந்துவிட்டது. தனக்கு நடைபெற்ற உபசாரங்கள் தன் மதனிக்கு நடைபெறுவதைக் காணச் சகிக்கவில்லை-அதாவது இது காந்திமதி கடிதப்படி நான் அறிந்தது-அதனால் வம்பு வளர்த்தாள் அருமைத் தங்கை. இதில் எது உண்மை, எது பொய் என்று யார் சொல்ல முடியும்?

ஒன்று, இரண்டு, மூன்று கடிதங்கள் வந்தன. ரத்தனச் சுருக்கமாக இனி கிராமத்தில் இருக்க முடியாதென்றும், இருந்தால் தனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் என்றும் உடனே என்னைப் புறப்பட்டு கிராமத்திற்கு வரும்படியும் எழுதியிருந்தாள் காந்திமதி. நான் போகத் துடித்தேன். முக்கியமாக குழந்தையுண்டான பெண் மனசிலே தெரிந்தும் தெரியாமலும் திகில் கோபதாபம் நுழையக்கூடாது பாருங்கள், ஆகவே மனச்சந்துஷ்டிக்க அப்படி நினைத்தேன்.

தகப்பனார் எழுதிய கடிதத்தை என்னால் நம்பமுடிய வில்லை. 'உன் மனைவி தன்னை ராணி என்று நினைத்துக்

கொண்டாள். 'குழந்தையிடம் ஓரே சண்டை' (ஏழு பிள்ளைகளுக்குத் தாயான என் தங்கையைக் குழந்தை என்றே அழைப்பார். அப்பாவுக்குக் குழந்தை யென்ருல் ரொம்பரொம்ப செல்லம் கொடுப்பார்.) பாலா வந்தது முதலே காந்திமதிக்கு இருப்புக் கொள்ள வில்லை. வீட்டுக்கு வந்தவளை அடித்துத் துரத்தும் தைரியம் எனக்கு இல்லை. நீயே வந்து அதைச் செய்'' என்று இன்னும் ஏதோ எழுதியிருந்தார். மருமகள் மீது சிறு குற்றத்தையும் சகிக்க மாமஞரால் முடியாது. மகள்மீது ஏற்படும் பாசம் 'ஐயோ சிறு பெண்! அறியாதது' என்ற வகையில் விழும். மருமகள் மீது 'எல்லாம் தெரிந்தவள், வம்புக்காகவே வந்தவள்' என்ற அபிப்பிராயம் விழும். இது உலகத்துப்பண்பாடு என்றேகூற வேண்டும். என்னை எதற்காக துரத்தச் சொல்லுகிருர் தகப்பஞர்? பாருங்கள்!

"வீட்டுக்கு வந்தவளை அடித்துத் துரத்தும் தைரியம் எனக்கு இல்லை, நீயே வந்து அதைச் செய்'' என்பது கட்டளை. காடுசென்ற ராமபிரானுக்குத் தன் தந்தை இப்படி ஒரு கட்டளை யிட்டிருந்தால் எப்படி நடப்பாரோ? கம்பனையும், வால்மீகியையும் கேட்க வேண்டும். நான் புழுவாய்த் துடித்துப்போனேன். எனக்கு வந்த கோபத்தில் தகப்பஞருக்கு இரண்டே வரியில் எழுதினேன், 'யார் செய்தது தவருே? அவர்களைத் தாங்களே வீட்டைவிட்டு அடித்துத் துரத்துங்கள். இம்மாதிரி சின்னக்காரியங்களில் பெரியவஞன நான் தலையிடுவது அனுசிதம்'' என்றே எழுதிவிட்டேன், எழுதியதைத் தயங்கித் தயங்கி தபாலில் போட்ட பின்பு தான் எத்தனை சின்னத்தனமாக எழுதிவிட்டோம் என வருந்தினேன். வருந்திப் பயன்? போட்ட தபாலை ந(ா)ன் கையில் திரும்பப் பெற முடியாதே! என் கடிதத்தில் தாட்சண்யம் பாரபட்சம் இருக்கவும் செய்கிறதா? யார் தவறு செய்கிருர் களோ அவர்களைத்தானே தண்டிக்கச் சொன்னேன், பலே!

காந்திமதி என்றும் போல இருந்து தொலைக்கக்கூடாதா? புதிய மாற்றங்களுக்கு ஆளாகி இவ்வாறு

குடும்ப அமைதியைக் கலைக்கவும் வேண்டுமா? என்று நினைத்தேன். வாழ்க்கையில் புதிய பிரச்னைகள் எழுந்தால் தீர்க்கலாம். மன வேதனைகள் எழுந்தாலோ அது பரம வைரி, தீராத தொத்து நோய்போல வேதனை தரும். எனக்கு எங்கேயாவது கோவில் இருந்து, அந்தத் தெய்வம் தன் சக்தியால் குழந்தையைப் பறித்துக்கொள்ளும் என்று தெரிந்தால் கும்பாபிஷேகம் செய்யலாம். உலகில் நம்பிக்கைக்குத்தான் கோவில் தருகிறார்கள். கடவுள் பிரதிஷ்டை செய்கிறார்கள். அழிவையோ, வீழ்ச்சியையோ தரும் கடவுள்களை நம் முன்னோர் சிருஷ்டிக்கவில்லை. ஏன் சிருஷ்டிக்கவில்லை? சிருஷ்டித்திருக்கக் கூடாதாவென சிந்தித்தேன்.

என் கடிதம் எப்படிப்பட்ட மன உளைச்சலை என் தந்தைக்குத் தந்ததோ? அது வேறு உள்ளூர பயம். என்றாவது பெரியவரான என் தந்தை,மனம் நொந்து என் வாசகத்தால் துர்வாசகர் ஆவாரோ என்று பயந்தேன். தப்பிதங்களைச் செய்துவிட்டுப் பிழிபடும்,ஈரத்துணிபோல வேதனைப் படுவதுதானா மனித மனம் கண்ட பயன்? குடும்பத்தில் இன்பங்கள் குலையும் சமயம், பெரிய உத்தியோகஸ்தனாக இருப்பவனுக்கு மனக்கஷ்டத்தால் ஏதும் தீங்கு விளையாது, பிறரை வேலைவாங்குவதுதானே பெரிய உத்தியோகம்? அவன் மனசிற்கு கஷ்டம் இருந்தாலும் வேலைக்குக் குந்தகம் இல்லை. ஆனால் சிறு பதவியில் வேலை செய்கிறவன் குடும்பத்தில் கோளாறுகள் விளைந்தால், அவனது ஆபீஸ் வேலைகளும் தடைப்படும், மாறுபடும். அதனால் குளறுபடிகள் விளையும்.சில சமயம் அவன் தலைக்குக் கூட கத்தி வரும்படி நேரலாம். இந்த ஆபத்தை எண்ணி எண்ணி நான் தன்னில் என்னைவிட்டு வேலை பார்த்தும் என்பாடு மிகவும் கஷ்டமாயிற்று. ஆபீஸ் துரை என் வேலையின் குறைவையும், குளறுபடியையும் பார்த்து மேலே விழுந்தான். நான் மன்னிப்புக் கோரினேன். தலையிலே

பெரிய பாரம். இதயத்திலே சுமக்க முடியாத பாரம், அன்றாட வேலைகளோ இன்னும் பாரமாக இருந்தன.

மறு வாரம் வாசலில் வண்டி சப்தம் கேட்க மாடியி லிருந்து பார்த்தால் என் தந்தையே வந்துவிட்டார். நான் இன்னும் பயந்தேன். அவருக்குப் பின்னால் சாந்த ஸ்வரூபி யாக காந்திமதி வந்தாள். என் கடிதம் அவருக்குக் கோபத்தை உண்டாக்கி இருக்கலாம் என நினைத்து மன்னிப்பு கேட்க நினைப்பேன். இம்மாதிரி விஷயங்களை நாகரிகமாக கடிதத்தோடு விட்டுவிடுவதே மேல். பேச்சுக்குள் வராத படி பார்த்துக்கொள்வதே சாதுர்யம். என் உள்ளத்து உணர்ச்சிகளை மறைத்துத் தந்தையை 'வாருங்கள் அப்பா' என்று கைகூப்பினேன். அவரும் தன்னுள்ளத்து உணர்ச்சி களை மறைத்துச் சிரித்தார்.

காந்திமதி எந்தவிதமான உணர்ச்சியிலும் படாமல் குத்து விளக்குபோல் வீட்டுக்குள்போய்விட்டாள். அதிக அதிகமான நாட்கள் பிரிந்திருந்து பின்னர் சந்திக்கும் போது திருட்டுத்தனமான கண்களின் பாஷை, புன்முறுவல் இவை ஏற்படுமே! அப்படி ஒன்றும் எங்களுக்குள் ஏற்பட வில்லை. நயன பாஷை இல்லாவிட்டால் அது வம்புக்கு வேலிகட்டுவது என்றே பொருள்.

"நான் இங்கே இவளைக்கொண்டு வந்து விட வந்தேன். உன் அம்மா பாலாவைக் கொண்டுபோய் விடுவதற்குப்போய் விட்டாள்' என்று ரத்தனச் சுருக்கமாகச் சொன்னார். இரு வரையும் ஒரே நாளில் வீட்டைவிட்டுக் காலிசெய்து விட்டார். எனக்கும் என் தங்கைக்கும், ஏன் எல்லோருக்குமே நல்ல பிள்ளையாக நடந்துவிட்டார் அப்பா.

இன்னும் என்னென்ன துயர்கள் பிறக்கப்போகின் றனவோ என்ற பயத்தினாலேயே வீட்டுக்குள் பார்வையைச் செலுத்தினேன். காந்திமதி ரோஷமுள்ள பெண் புலிபோல அடுக்களையில் பதுங்கியிருக்கிறாள்.

## 6. குழந்தையா? வேண்டாம்!

விரிகடல் அமிழ்தமும் வேலை ஞாலமுஞ்
செருமுகத்து அழலுமிழ் சிறுகண் யானையும்
எரிமணிக் குப்பையும் எளிதில் எய்தலாம்
அருமகப் பெறுதல் மற்றரிய தென்பவே

—அதிவீரராம பாண்டியர்.

எந்த வகையான துக்கத்தையும் காலமென்னும் வைத்தியன் குணப்படுத்துவதாக அறிஞர்கள் சொல்லுகிறார்கள். காலதேவனுக்கும் அப்பால், இயற்கை உரத்தை விட இரசாயன உரம் விரைவில் பலன் தருகிற மாதிரி பணத்தேவன் வழிவகுக்கக் கூடியவன். காந்திமதிக்கும் அவளது நாத்தனாருக்கும் ஏற்பட்ட பூசல் பனியைக் கண்ட சூரியன் போல் ஆகிவிட்டது. இருவருக்கும் ஒரே விலையில் ஒரே நிறத்தில் வளைகாப்பை முன்னிட்டு எடுத்த பட்டுப்புடவை இந்தமாற்றத்தைச் செய்தது. தனதுபரம வைரியாக நினைத்த பாலா, இப்போது கூடிக்குலாவி பேசி மகிழ்கிறாள். காந்திமதியும் தன்னுடைய வருத்தத்தை எப்படி மறந்தாள்? என்னிடம் பேச்செடுக்கும் போதே மூட்டைப் பூச்சியை நசுக்குவது போன்று பேசுவாள். இப்போது சுவரும் மூட்டைப்பூச்சியும் போல நாத்தியும் மதனியும் ஆகி விட்டார்கள்.

எந்தக்காரணத்தை முன்னிட்டும், வீட்டிலே சந்தோஷம் நிலவினால் குடும்ப நிர்வாகம் செய்கிறவனுக்கு பணக் கஷ்டம் ஏற்படும். மனதில் சந்தோஷம் ஏற்படும். எனக்கும் அப்படியே நேர்ந்தது. வளைகாப்பு விசேடத்தைப் பலமாக ஆடம்பரமாக கொண்டாடினாலும் எங்கள் நிலாமுற்றத்தை யடுத்த, வீட்டுக் காரர்களை அழைப்பதில்லையென முடிவு

செய்தேன். முன்பு பௌர்ணமி விரதம் கொண்டாடி, குழந்தைகளுக்கு வந்த வியாதிக்கு ஏச்சும்பேச்சும் வாங்கிக்கட்டியது மறக்கக்கூடிய சம்பவமா? ஆனாலும் திட்டிய பெண்கள் தங்கள் திட்டுதலைக்கூட மறந்து, வளைகள் போட்டுக்கொள்ள வளைகாப்பு சமயம் கை நீட்டினார்கள். காந்திமதி கல்யாணப் பெண்ணாக இருந்தபோதுகூட இத்தனை பிரபல்யம் ஏற்படவில்லை. கல்யாணத்தில் மாப்பிள்ளைக்குத்தான் கிராக்கி. அந்தஸ்து. "எங்கே மாப்பிள்ளை? இதோ மாப்பிள்ளை வருகிறார்; மாப்பிள்ளை தூங்குகிறார்; மாப்பிள்ளை கொட்டாவி விடுகிறார்" என்ற தம்பட்டங்கள் அறிவிப்புகள் நடைபெறும். வளைகாப்பு சமயம் மாப்பிள்ளை இருக்கிறானா தொலைந்துபோய் விட்டானா என யார் கேட்கிறார்கள்? பெண்ணுக்குத்தான் சகல கவனிப்பும் பராமரிப்பும் ஆசியும் அன்பும் நடைபெறும். வளைகாப்பு பெண்ணின் பெருமையை விளக்க வந்த விசேடம். அதே சமயம் ஆணின் சிறுமையை விளக்க வந்ததுபோலும்.

காசி ராமேஸ்வரம் போகாமலே பாக்கியம் கிடைத்து விட்டதால், பாவிகள் என யாரும் எங்களைச் சொல்லமுடியவில்லை. முக்கியமாக அம்புஜத்தம்மாள், அவளுக்கு அடுத்த வீட்டு குசேலத்தம்மா (முருகனின் தாயார்) இன்னும் பலரும் வெற்றிலை பாக்குப் பெறுவதற்கு மட்டுமே அழைக்கப்பட்டனர். எல்லாரையும்விட, வேலைக்கார வள்ளியும், நீ இரங்காயெனிலும் அட்டகாசம் செய்தார்கள். குழந்தைக்கு என்னபெயர் வைப்பது என்ற பேச்சும், ஒவ்வொரு பெண்ணும் தாங்கள் வளைகாப்பு அணிந்த சமயம் நடந்த கதைகளையும் பேச ஆரம்பித்தார்கள்.

என் கண்ணிலும் காதிலும் கனவு லோகக் காட்சியாக விழுகின்றன. எல்லோரும் இன்புற்று இளைப்பாறி வம்பு சண்டையில்லாது ஊர்ப்போய்ச் சேர்ந்தால், இரட்டைக் குழந்தை பிறந்தமாதிரி. ஆகவே உணவில், உடையில், வளைகள் அடுக்கும் விஷயத்தில் கவனம் செலுத்தினேன்.

வளைகாப்பு எத்தனை விமரிசையாகக் கொண்டாடப் பட்டது என்பதற்கு இது போதும்; வளையல்காரன் மூன்று முறை டாக்ஸியில் போய் வளையல் கொண்டு வந்தான்; கடைசியாக 303 ரூ. சொச்சம் பில் கொடுத்தேன் என்றால் எவ்வளவு இருக்குமெனப் பாருங்கள்.

சந்தோஷம் ஒன்றே குறியெனப் பார்த்தால் வளைகாப்பு சீமந்தம் இவை நடத்தியே தீரவேண்டும். பிள்ளைப்பேறு அத்தனை மகத்தானது உயர்வானது என்பதை சந்தோஷ மாகக் கொண்டாடினோம்.

தங்கை பாலா, தனக்குக் கிடைத்த பட்டுப் புடவை, தன் குழந்தைகள் (ஆண் குழந்தைகள் உள்பட முழங்கை வரை வளையல் அணிந்து கொண்டார்கள்) பெறும் வளையல் களை எதிர்பார்த்து, தங்க வளையல் ஒரு ஜோடி பரிசாகப் போட்டாள். (என் தங்கை போட்டிருக்க முடியாது. என் தாயார் தன் செலவாகச் செய்து மகள் பெயரில் போட் டிருக்க வேண்டும்) மதனியார் தனக்கு வளை போட்டது மாமியார் வீட்டில் வளை போட்டது இவ்வாறு தங்கவளை யல்களே, ஆறு ஏழு ஜோடி சேர்ந்துவிட்டன. குறிப்பாகச் சொன்னால், பிறக்கப் போகும் குழந்தைக்கு (மன்னிக்கவும் குழந்தை இரட்டை பிறவியாக இருந்தால் குழந்தை களுக்கு என்றே இருக்கட்டும்) நகை செய்ய வேண்டிய தங்கத்தைஇப்போதே சேர்த்துவிட்டார்கள். வளைகாப்புக்கு வந்த வெள்ளி, பவுன் வளைகளை அழித்துச் சிறிது சிறிதாகக் குழந்தைக்குப் புதிதாகச் செய்துகொள்ளலாம் என்ற முன் னேற்றந்தான் வளைகாப்பா?

சீரும் சிறப்புமாக வளைகாப்பு முடிந்தது. நெல்லிக்காய் மூட்டை போன்று பந்துக்கள் போன பின்னர், வீட்டிலே என் மாமனர் மாமியார் இருந்தார்கள், காந்திமதியை அழைத்துப்போக இருந்தார்கள், கைதி தனக்குள்ள தூக்குத் தண்டனையை எதிர்பார்த்து நாளை எண்ணுவது போல,

நான் இனங்களை எண்ணிக் கொண்டிருந்தேன். பழுத்த வேலி அத்தனை தொல்லையானது. சுயநலத்தோடும், பிற நலத்தோடுமாக மாமனாரிடம் சொன்னேன்.

"உங்கள் ஊரில் வைத்திய வசதி அவ்வளவாகக் கிடையாது, இங்கேயே காந்திமதி தங்கி இருக்கலாம்" என்றேன்.

"இங்கேயே இருக்கலாம். வைத்திய வசதிக்காக மட்டுமா? தாய் வீட்டிலே இருப்பது பெண்ணுக்குத் தனி மகிழ்ச்சி உண்டாகும்."

"அதென்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? காந்திமதிக்கு இங்கே என்ன குறை இருக்கும்? அவள் தாயாரும் தாங்களும் இங்கேயே தங்கி இருக்கலாம், அவளுக்கு எவ்விதக் குறையும் வராதிருக்க"

"மாப்பிள்ளை உங்களுக்கு உலக அனுபவம் போதாது. உங்களைப் போன்று பெண்சாதியிடம் எத்தனை பிரியம் காட்டினாலும், ஊரார் எங்கள்மீது வசவு சொல்ல இடம் ஏற்படும்"

"வசவு யார் சொல்லுகிறது?"

"முக்கியமாக எங்கள் ஊரில் சொல்லுவார்கள். நான் சென்றால் குடும்பத்திற்குள்ளாகவே, 'உன் மாமன் வீட்டில் பேறு காலம் பார்த்தார்களா?' என்று யாராவது எப்போதாவது சொல்லுவார்கள். இன்றைக்குச் சொல்லாவிட்டால் உங்களுக்கு மருமகள் வந்தால், அவள் என் மகள் மீது குறை சொல்லலாம்" என்று சிரிக்காமல் உலகத்தின் மனப் போக்கைச் சொன்னார்.

உறவினர்களிடையே ஒருவர் சௌகர்யத்தை ஒருவர் சகித்துக் கொண்டாலும், ஊரார் பல விஷயமும் பேசுவார்கள். எனக்கு முட்டாள் பட்டம் கட்டி என் மாமனாரைப் புத்திசாலி ஆக்குவார்கள். "மாப்பிள்ளை சரியென்றாலும், ஐயா பெரியவரே நீர் உலக வழக்கத்தை மறக்கலாமா? தலைச்சனுக்குப் பேறுகாலம் பார்க்க வேண்டிய கடமை உங்கள்

கடமை. பெருந்தன்மையாக மருமகன் சொன்னாலும் உம்முடைய முட்டாள் தனம் தவறுசெய்திருக்கக்கூடாது" என்றும் எதிர் கட்சி ஆடுவார்கள். இதற்குத்தான் உலகம் பயப்படுகிறது; இவ்வாறு சக்கர வட்டமாகப் பேசியவர், "நாளை உங்கள் அம்மா—அப்பாவே ஏதேனும் சொன்னால் என் மகளுக்குக் கேவலம். அதனால் நீங்கள் இந்த ஒரு தடவை எதுவும் சொல்லக்கூடாது" என்றார்.

நான் உலகம் தெரிந்தவன் என்று பெயர் பெற்றாலும் உள்ளம் தெரியாதவனா? காந்திமதிக்கு, புருஷனோடு இருப்பதைவிட, தாய் வீட்டிற்குப் போய் மழை மேகங் கண்ட மயில் போல, கலாபம் விரித்துத் தன் பெருமையைப் பறைசாற்றவே எண்ணம். என்னிடம் மேல் பேச்சாக "நீங்கள் இருக்கச் சொன்னால் இருக்கிறேன்" என்றாளே தவிர்த்து தாயாரிடம், "அம்மா ஊருக்குப் புறப்பட நல்ல நாள் பார்க்கச் சொல் ஊருக்குப் புறப்பட வேண்டும்" என்று மூட்டைக் கட்ட தயாராக இருந்தாள். பிள்ளைத்தாச்சிகள் தாய் வீட்டில் போய் தங்குவது பெண்ணின் பெருமைகளில் ஒன்று போலும். அழகு வளைகாப்பும் அடுக்குச் சீமந்தமும் முடித்த காந்திமதியை, தாய் வீடு அனுப்பி விடுவதென சாங்கோ பாங்கமாய் முடிவு செய்யப் பெற்றது. அவள் புறப்படும் நாளையும் குறித்துப் பிரயாண ஏற்பாடுகள் நடந்தன.

அவள் புறப்பட இன்னும் இரு தினங்கள் இருந்த போது என் தகப்பனார், நான் ஆபீசுக்குப் புறப்பட்டுத் தெருவில் போகும் போது என்னுடன் வந்தார். "என்னப்பா என்ன விஷயம்?" என்றேன். அவர் முகத்திலே சொல்லுவதா வேண்டாமா என்ற தயக்கம் இருந்தாலும் "சொல்லி விடுகிறேன்" என்ற உறுதியும் தெரிந்தது. "ஒன்றுமில்லை பொதுவாக பிள்ளைப் பேற்றுக்குப் போகும் போது நகை நட்டுத் துணிமணிகள் அதிகம் கொண்டு போகக் கூடாது என்பது ஐதீகம்" என்று ஆரம்பித்தார். நான் என்ன

கண்டேன்? "சரி அப்படியே உங்கள் மருமகளிடம் சொல்லி விடுங்கள்" என்றேன்.

"நீ சொல்வதுதான் முறை, நான் சொன்னதாகவும் தெரிய வேண்டாம்" என்று விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குள் போனார். எனக்கு இதன் மர்மம் விளங்க வில்லை. நேரே ஆபீஸ் போனேன், வேலை பார்த்துவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

வீட்டுக்கு வந்த சமயம், புயலுக்குப் பின் அமைதி என்ன என்பதைக் கண்டேன். நவக்கிரகங்கள் போன்று எல்லோரும் வலித்துக் கொண்டு இருக்கிறார்கள். ஒருவரோடு ஒருவர் பேச்சு வார்த்தையில்லை. நான் கூப்பிட்டும் குரல் கொடுப்பார் யார்? யாரும் இல்லை. மாடியில் காந்திமதி தனித்திருக்கவே அவளை அணுகி பூகம்பத்தின்காரணத்தை கேட்கப் போனால் எரிமலையாக இருந்தாள் அவள்.

"என்ன காரணம்?"

"காரணம் என்ன? நீங்கள் சொல்லித்தானா தெரிய வேண்டும்?"

அழுது வீங்கிய முகமும், ஆபரணமற்ற மூகமும் அடடா, பழைய புடவையல்லவா கட்டியிருக்கிறாள்.

"ஏன் இந்தக் கோலம்?"

"இப்போதாவது உங்களுக்குத் திருப்திதானே?"

"ஆமாம் இதெல்லாம் என்ன வேடிக்கை.?"

"உங்கள் மனசும், கண்ணும் திருப்தியாயிற்று?"

புரிந்து கொண்டேன். என் தந்தை எனக்குச்சொல்லிய சொல்லை யாரோ ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்து காந்திமதியிடம் சொல்லியிருக்க வேண்டும். அது தெரியவே வீட்டில் வம்புத் தீப்பற்றிக்கொண்டு எல்லோருடைய உள்ளத்தையும் கருக்கிக்கொண்டிருக்கிறது.

"நான் செத்து மடிந்துபோவேன். இதற்காகத்தானே நீங்கள் கலியாணமே செய்துகொண்டது?"

"அசடு. அனாசாரமாகப் பேசாதே. நீ சாக வேண்டு மென்று நினைப்பார்கள்?"

"பின்னே, என்னவாம்? இந்த நகை நட்டு நல்ல துணி மணி எடுத்துப் போகக்கூடாது என்றால்? அதன் அர்த்தம் என்ன?"

சற்று இரைந்தே பேசினாள். என் காதில் விழுவதற்காக மட்டுமன்று, மாடியில் நிற்கும் எனக்காக அல்ல அத்தனை சப்தம், வீட்டிற்குள் இருக்கும் என் தந்தையின் காதில் விழுவதற்காகத்தான் இத்தனை குரலேற்றம் செய்தனள்.

"ஆமாம் நீ குழந்தை பெற்றதும் போதும், குட்டிச் சுவர் ஆனதும் போதும். அறிவு கெட்டதனமாகப் பேசாதே"

"நான் சாகவேண்டும் என்பதுதான் உங்கள் எண்ணம்"

"என்னைக் கொலை செய்யாதே, நான் என்ன சொன்னேன்?"

"உங்கள் அப்பா பேச்சுக்குத் தாளம் போட்டீர்கள்"

"யார் சொன்னது?"

"சொல்லவும் வேண்டுமா? நியாயமான வார்த்தையை, எல்லோர் முன்னாலும் சொல்லலாமே, உங்களைத் தனியாக அழைத்துப் போய் ரகஸியம் எதற்கு?"

"அவர்கள் சொல்லிவிட்டுப் போகட்டும். நீ ஒன்றும் மனசில் போட வேண்டாம்."

"எனக்கு ஒரு நகையும் நட்டும் வேண்டாம். நீங்களே வைத்துக்கொண்டு அழுங்கள். நகைக்காக ஆசைப்பட்ட குடும்பம் என்பது இப்போதுதான் தெரிந்தது."

காந்திமதியை நான் பல குரல்பேதங்களிலும், அழுகை விம்மல்களிலும் சமாதானம் செய்தேன். அவள் கேட்க வில்லை. என் தாயார் தோன்றி "இந்தாப்பா உன் பாடு உன் சம்சாரம் பாடு. உங்கப்பா சொன்னார்களாம். அதை

இவள் கேட்டாளாம் நீங்கள் எக்கேடுகெட்டாலும் சரி, ஊர் உலகில் நடக்கும் சம்பிரதாயத்தைச் சொல்லக் கூடாதா? குழந்தை பெறப் போகும் பெண் நகைநட்டோடு போகக் கூடாது என்றுதான் பழக்கம்" என்றாள். சமாதானம் செய்ய வந்த தாயின் குரலில் சண்டையிடும் தொனி இருந்தது.

"நகை போட்டுக் கொண்டாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, நீங்கள் ஏன் சும்மா சண்டைபோட வேண்டும்?"

"நாங்கள் சொல்ல யார்? இந்த வீட்டில் உன் சம்சாரம் இட்டதே சட்டம். உன் அப்பாவுக்கு இதைச் சொல்லவோ எனக்கு இதைக் கேட்கவோ அதிகாரம் கிடையாது. தவறு, தப்பு"

தாய் கண்ணீர் வடிக்கிறாள். மனைவி கண்ணீர் வடிக்கிறாள். எனக்கு அழுவதா சிரிப்பதா என்று பட்டது. இருதலைக் கொள்ளியாகத் தவித்தேன். மேலே நடந்த சச்சரவைச் சமாதானப்படுத்த, என் மாமியார் சொற்கேட்டு மாமனார் வந்து விட்டார். பழைய புடவை கட்டிய மகளைக் கண்டதும் அவருக்குக் கண்ணீர் மல்கிற்று.

"இந்தாம்மா மீனா, பெரியவர்கள் எது சொல்லுகிறார்களோ அதன்படி நடப்பதுதான் முறை. நீயாகப் பிடிவாதம் செய்யக்கூடாது. உனக்காகத்தான் சொல்லுகிறார்கள்."

"நான் செத்துப் போய்விடுவேனும், நீங்கள் அத்தனை நகையையும் இவர்களுக்குக் கொடுத்துவிடுங்கள்."

மேலே வார்த்தையை முடிக்காமல் அழ ஆரம்பித்தாள். எனக்கே கஷ்டமாகப்பட்டது தலை பிரசவம், பெண்ணுக்கு ஆபத்துத் தருவது. உயிரை வாங்குவது. ஆகவே பிணக் கஷ்டத்தோடு போனாலும் கணவனுக்குப்பணக் கஷ்டம்வராதிருக்க நகையை மாமியார் வீட்டிலே வைத்துப் போகச் சொல்லுகிறார்கள் என்ற உண்மையொளி அறிவுக் கண்ணில் பட்டது.

"அம்மா, காந்திமதியே போகிறபோது அந்த நகையும், பட்டுத் துணிமணியும் நமக்கு வேண்டாம். அவள் கொண்டு வந்தவள் அவளே கொண்டுபோகட்டும்."

"ஊரிலே பழக்கம் வழக்கம் என்பது எதற்காக ஏற்படுத்தி வைத்திருக்கிறார்கள்?" என்று கேட்டாள் தாய்.

"என்னமோ வைத்திருக்கிறார்கள், பெரியவர்கள் சொல்லை நான் தட்டினதாக எண்ணிக்கொண்டாலும் சரி, அவள் பிச்சைக்காரக் கோலத்தில் இருப்பதை என்னால் சகிக்க முடியவில்லை."

"அடம் செய்தால்? கைக்கு, ஒரு வளையல் போட்டுக்கொள்வது, காது மூக்கில் நகை போடட்டும். கழுத்துக்கு ஒரு வடம் சங்கிலி. நல்ல துணிமணி நாலு கொண்டுபோக வேண்டாம் என்று யார் சொன்னது?"

"எனக்கு எதுவுமே வேண்டாம். எல்லாம் இன்னொருத்தி வாழ வருவாளே அவளுக்காக இருக்கட்டும்" என்றாள் காந்திமதி. கோபமும் தாபமும் வரும்போது பேச்சுக்குப் பேச்சு புருஷனுக்கு இன்னொருத்தியைக் கட்டி வைக்க சொல்லுவதுபோல, ஆண்கள் பதிலுக்குச் சொல்லும் பண்பு தமிழ் நாட்டில் இல்லை.

"மீனா நீ செய்வது தப்பு. உன் மாமியாரும் மாமனாரும் ஒன்றுமே சொல்லவில்லை. நீயாக இத்தனை மனக்கஷ்டமும் அடைகிறாய். அவர்கள் சொற்படி நட. மனோவியாகூலத்தால் உன் உடம்புக்குக் கேடு" என்றார்.

"சொல்லவில்லையா? மகனைச் சந்தித்து, ரகசியமாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்த முருகன் அம்மா வந்து சொன்னாளே. ஜன்னல் வழியாகக் கேட்டாளாம். அவங்க அப்பா தன்னிடம் கூறவில்லையென்று உங்கள் மகனைச் சொல்லச் சொல்லுங்கள் அத்தை?"

"ஏண்டாப்பா, உங்கப்பா உன்னிடம் சொன்னார்களா?"

"ஆமாம், அம்மா. அப்பா சொன்னதும் சரி"

"உன் பெண்சாதி சொல்வதும் உனக்குச் சரிதானே?"

"என்னை ஏன் இப்படி வதைக்கிறீர்கள். அவரவர்கள் இஷ்டப்படி எதை வேண்டுமானாலும் செய்யுங்கள். இந்த வீடே எனக்கு வேண்டாம்" என்று எரிச்சல் தாங்காது வெளியே வந்தேன். என்னை இடைமறித்து என் தகப்பனார், "ஏண்டாப்பா எனக்கென்ன வந்தது? உங்கம்மா சொன்னதாலே நான் சொன்னேன். உன்பாடு உன் சம்சாரம் பாடு. காந்திமதி இதற்காகச் சண்டைபோட வேண்டாம்" என்று அதற்கு மேலாகவும் ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தார். நான் எதைச் சொன்னாலும் கோபம் வரலாம். ஆகவே மௌனமாக அங்கிருந்து கிளம்பி விட்டேன். தெருவில் இறங்கிய சமயம், புத்தர் தம் அரண்மனையை விட்டு இறங்கியபோது என்ன மன நிறைவில் இருந்திருப்பாரோ அந் நிலையில் இருந்தேன்.

கால் போன போக்குப்படி நடக்க ஆரம்பித்தேன்.

அதிவீரராம பாண்டியன் மிக நன்றாகத்தான் சொன்னார். கடலினைக் கடைந்து அமிழ்தமும், இந்த உலகமும் அடைந்து விடலாம், பகைவர் மத்தியிலே நெருப்புப் பந்தங்களை எரியும்யானையும் அடைந்து விடலாம், மாணிக்கங்களையும் அடைந்து விடலாம், ஆனால் எளிதாகக் கிடைக்கும் தொல்லைகள் யுத்தங்கள், கடலின் கோஷங்களைவிட, மிகப் பிரமாண்டமானதுஎது ஒருமகவுபெறுதல் என்றானே! எவ்வளவு உயரிய அனுபவம்...என்று சிந்தித்தேன். சிரித்தேன். அழுகையே கண்ணை இறுக்கிற்று.

குடும்பத்தொல்லை சச்சரவு இல்லாது ஏழு வருஷ காலம் வாழ்ந்தவன் நான், மனக்கசப்பு ஏற்பட்டு வீட்டை விட்டு வெளியே நடக்கும் எண்ணத்தைச் செய்கையில் கடைப்பிடிக்கும் படியாகவும் நேர்ந்தது. யார் மீது கோபம் கொண்டாலும் முடிவில் தவறு செய்தவன் நான் என்றுதானேபலரும் சொல்லுவார்கள். மனைவி பக்கம் பரிந்தும், பெற்றோர் பக்கம் சாய்காலாகவும் என்றால் இருக்க

முடியவில்லை. வீடும் வேண்டாம் விளக்கும் வேண்டாம் என்று புறப்பட்டேன். தெருவைக் கடந்து போகிறபோது டம்படி வீட்டுக்காரியான முருகன் அம்மாவை குத்திக் கொன்றால்என்ன என்ற எண்ணம் தோன்றியது. அவள் தானே எங்கள் குடும்பத்து அமைதியைக்கலைத்துவிட்டவள். உடனே வீடு புகுந்து, "ஏ பொம்பளே உன்னால் எனது குடும்பம் கெட்டது? எங்கள் குடும்பத்தைப் பாழ்படுத்திய பாவி!..." என்று திட்ட அந்த வீட்டுக்குள் நுழைய இருந்தேன்.

இரவு நேரம், என் சிற்றம் பலரையும் பலவிதமான ஏச்சுக்கும் துணையழைக்கும், அதே சமயம் யாரோ பயல், "இன்னா செய்தாருக்கும் அவர் நாண, நன்னயம் செய்து விடல்" என்ற குறளைச் சொல்லிக் கொண்டிருக்கவே, என் கோபத்தை மறந்தேன்.

இருளோடு இருளாகப் போய்க்கொண்டிருந்தேன்.

# 7. தனிக் குடித்தனம்

**கடவுள் எங்கும் நிறைந்திருக்க முடியாத காரணத்தால், தாய்மார்களை அவர் சிருஷ்டித்தார்**

—யூதப் பழமொழி

தாய்மார்கள் அன்பின் இருப்பிடம், பிரியத்தின் சுனை என்று உலகத்து அறிஞர்கள் சொல்லி விடுகிறார்கள். குழந்தையின் பள்ளிக்கூடம் தாயின் இதயம் என்றும் சொல்வார்கள். என் கதியைச் சொல்லுங்கள். தாய் தந்தை தாரம் இவர்களை நொந்து இருளுக்கு இருளாய் அநாதையாய் போய்க் கொண்டிருந்தவன் நகரத்தின் முக்கிய பகுதியில் பசிக்கு இடந்தேடி நுழைந்தேன். கையில் பணம் இருக்கும்போது இரவில்தங்கும் இடமும் பிடித்தேன். என் வாழ்நாளில் இதுவரை உள்ளூரில் ஓட்டலில் தங்காதவன், இன்று தங்கிவிட்டேன். தூக்கம் வரவில்லை. வீட்டில் என்னைக் காணாது, காந்திமதி தவிக்கலாம், பெற்றோர்கள் தவிக்கலாம்.

எனக்கென்ன! அவர்கள் எக்கேடும் கெட்டுப் போகட்டுமென மனசைத் திடப்படுத்திக்கொண்டு, அறைக்கு வெளியே வந்து நின்றேன். அன்று அந்த ஓட்டலில் அதிசயமான கூட்டம் நெருக்கடி. காரணம் பிறகுதான் தெரிந்தது. பிரபல நாட்டியக்காரி ஒருத்தி அதே ஓட்டலில் தங்கியிருக்கிறாள். அவளது தரிசனத்தைக்காண அத்தனை குதூகலம் உத்சாகம். நான் அறைக்குள் நுழைய இருந்த சமயம் கோடி அறையிலிருந்துஓர்உருவம் தெரிந்தது. எல்லா அறையிலிருந்தும் தலைகள் நீட்டின. ஒரு தலையைக்கண்டு பயந்து போனேன். அத் தலைக்குடையவன் நீ இரங்காயெனில், அவன், என்னைப் பார்த்துவிட்டான்.

என் அறைக்குள் தலையை இழுத்துக்கொண்டேன். பூனை, கண்ணை மூடினால் சூரியன் அஸ்தமனம் ஆகிவிடுமா? நாட்டியக்காரி ரயிலுக்குப் புறப்பட்டுக் கலீர் கலீர் எனப் போனாள். பிறகு ஒருவாறு அங்கே அமைதி நிலவியது. புதிய இடத்தில் நான் தூங்க முயன்ற சமயம், என்னறைக் கதவு தட்டப்படவே, "யாரது?" என்றேன். நாட்டியக் காரியின் பெயர் சொல்லப்படவே, நான் திடுக்கிட்டேன். எவ்விதமான கெட்ட நோக்கமுமில்லாத கோழையாகிய என்னைச் சோதிக்க வேண்டுமா? நான் பயந்துகொண்டே கதவைத் திறக்க முயன்றபோது, உடல் வியர்த்துக் கொட்டியது. விளக்கைப் போடலாமா, வேண்டாமா என்ற தயக்கத்தில் இருந்தபோது, போட்டேன். கதவின் தாழ் திறந்தது. எதிரே பொய்யான குரல்கொடுத்த நீ இராங்கா யெனில் நிற்கிறான். படுபாவி, பெண்குரலில் அதுவும் நாட்டியக்காரியின் குரலில் என்னை என் உயிரைப் பிழிந்து விட்டானே.

"தரிசனம் ஆயிற்று அப்பேன். டேய் இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமா யென்பதாக இங்கேயா வந்து ரூம் எடுத்திருக்கிறாய்?" என்று வழக்கத்திற்கும் அதிகமான குரலில் கூச்சலிட்டான்.

"கத்தாதே"

"பார், பார், வீட்டுக்குப் போய் மீனு அக்காளிடம் சொல்லுகிறேன்.

"சொல்லிக் கொள்" என்று கதவை நான் சாத்த முயன்றபோது அவன் உள்ளே வந்து படுக்கையில் அமர்ந்தான்.

"நீ இங்கே எதற்காக ரூம் எடுத்தாய்?"

"நான் எடுக்கவில்லை, என் நண்பர் ரூம் இது"

"உன் நண்பர் இருப்பது இந்த அறையா? இப்படியே கன்னத்தில் நாலு அறைக் கொடுத்தால்? நீ ஏதாவது கயிறு

திரிப்பாய் என்று தெரிந்தே கீழேபோய் இந்த அறையில் யார் தங்கியிருக்கிறார்கள் என்று பெயர் பலகையைப் பார்த்தேன். தேவரீர் திருநாமம் பொறிக்கக் கண்டேன். அன்பரே வணக்கம். தாங்கள் நாட்டியக்காரியின் தரிசனம் பெற்றீர்களா?"

"டேய் நீ இராங்காயெனில் நீ சும்மா இரு. உன்னைப் போல் நான் தடிப்பிரமச்சாரி கட்டையல்ல. போய்ச் சேர்."

"தடிப் பிரமச்சாரி கட்டைகளைவிட, கல்யாணமானவர்களே சபலச் சித்தம் உள்ளவர்கள்."

"கத்தாதே" என்று நிறுத்தினேன்.

"உத்தரவு."

அவன் வெளியே புறப்பட்டதும் அவனை அழைத்து நடந்த விபரங்களைச் சொல்ல ஆசைப்பட்டேன். ஆனால். மனம் துயரத்தில் இருந்தபோது நான் ஓட்டலில் தாமதித்ததை வேறு வகையாக அர்த்தம் செய்தபோது அவனிடம் பேசுவதைவிட வாய்மூடி மௌனமாக இருப்பதே மேல் என்று இருந்துவிட்டேன். ஓட்டல் சந்தடி வரவர அடங்கி, கெடிகாரம் 12 அடித்த சமயம் என்னறையின் பக்கம் ஒரு கூட்டத்தின் காலடியோசை கேட்கவே, கதவு தட்டப்படவே நான் விழித்தேன். கண்விழித்தால் எங்கள் குடும்பத்தோர் அத்தனை பேரும் (என் தாயாரைத் தவிர்த்து) என்னைக் காணவந்து விட்டார்கள். ஓட்டல் முதலாளி நான் தற்கொலை செய்துவிட்டேனோ என்ற பயத்தில் அலறினார். பையோ, பெட்டியோ படுக்கையோயின்றி கையை வீசி வந்ததால் நான் இதற்குள் உத்திரத்தில் தொங்கிக் கொண்டிருப்பதாக நினைத்துப் பயந்தார். என்னை உயிரோடு கண்டதில் எல்லோருக்கும் மகிழ்ச்சி. அந்தப் பொது இடத்தில் வம்புப் பேச்சு வளராதிருக்க எல்லோரும் மௌனம் சாதித்தனர்.

'சரி புறப்படு' என்று என் தந்தை உத்தரவு கொடுக்கவே, நான் அறையைப் பூட்டாமலே கிளம்பி விட்டேன்.

பேசுவதற்குரிய இடம் அது அல்லவே. வெளியே வந்ததும் ஓட்டலில் தங்கியதற்குரிய பில் கொடுக்க முயன்ற போது என் மாமனார் அந்தப் பணத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தார். மௌன ஊர்வலமாக இரு குதிரை வண்டிகள் புறப்பட்டன. எனக்குஏற்பட்ட துணிவு மனப்பான்மை எந்தப் பாடுபடுமென்று இன்று தெரியாது. போகப் போக தெரியும்; என்றாவது காந்திமதி சொல்லம்பு எய்வது உண்மை.

நான் செய்த காரியத்தால் வீட்டில் நிலவிய நவக்கிரக மனப்பான்மை மாறி எல்லோரும் என் இஷ்டத்திற்கு விட்டு விட்டனர். நான் எது சொன்னாலும் அதன்படி எவரும் நடக்கச் சித்தமானார்கள். எந்தையும் தாயும், மாமியும் மாமனாரும் எல்லாருக்கும் முன்னதாக காந்திமதி, "நீங்கள் எது சொல்லுகிறீர்களோ அப்படியே நான் செய்கிறேன். உங்கள் மனசைக் கோண வைத்தது தவறு" எனத் தாள் பணிந்தாள். என்னிடமுள்ள இரக்க சுபாவம் குடும்பத்தில் எல்லோருக்கும் தெரியும். பணிந்து போகிறவர்கள், தவறு செய்ததை ஒப்புக் கொண்டால் நான் கண்ணியமாய் நடத்திவிடுவேன். காந்திமதி என் ஆக்ஞையை ஏற்க, தலைமீது கரங்கூப்பிக் காத்திருந்தாள். தந்தை சொல் மிக்க மந்திரமில்லை யென்பதைக் காப்பாற்ற, "நகை நட்டைக் கழற்றி வைத்துப் போ" என்றாலும் காந்திமதி அடக்க ஒடுக்கமாகச் செய்வாள். நான் அத்தனை ராட்சத மனப்பான்மை உள்ளவனா? மேலும் தாம்பத்ய வாழ்வில் தாய் தந்தையுடன் கொள்கையில் மாறு கொண்டால், பிள்ளைப் பாசத்தால் அவர்கள் மன்னித்து விடுவார்கள். மனைவியுடன் மாறுபாடு கொண்டால், மேல் போக்காக சத்தம் சச்சரவைக் குறைக்க அவள் ஒத்துப் போவதாக நடித்தாலும், பாசியுள்ள குளம் போலவே சிறிது விலகி மீண்டும் மனத்தளவுள்ள பாசி மூடிக்கொள்ளும். அதனால் காந்திமதியின் மனம் புண்ணாகாமல் இருக்கவும், வாழ்நாள் முழுவதும் அவச் சொல்லை வாங்கிக் கட்டாதிருக்கவும்

சர்வ அலங்கார ஆபரண பூஷிதையாய் தாய்வீடு போக காந்திமதிக்கு அனுமதி கொடுத்தேன் நான்.

முதற் பிரசவத்தில் பிழைக்கவேண்டுமே என்று எண்ணும் புருஷர்கள் கூட்டத்திற்கு நான் தலைமை வகிக்கக் கூடியவன், ஒருவேளை கஷ்ட பிரசவம் ஏற்பட்டு இறந்தே போனால்? இவ்வாறு எண்ணும் சக்தியே எனக்கு இல்லை. வரப்போகிற ஆபத்தை எண்ணி, இப்பவே நரக வாதனை யடையும் பெருந்தன்மை ஒரு சில ஆண்களுக்கே உண்டு. என் தகப்பனாரும் முன் ஜாக்கிரதையாக நகை நட்டு என் வீட்டில் இருக்கட்டுமென நினைத்தாரே தவிர, அருமை மருமகள் காந்திமதி சாக அவர் விரும்பவில்லைதான்.

ஒரு வழியாக நல்ல நேரத்தில் என்னைத் தனியே விட்டு எல்லோரும் போய்ச் சேர்ந்தார்கள்.

ஒரு வாரம், பத்துநாள் தனி வாழ்க்கை நடத்திய எனக்கு, ஆறுமாத காலம் தனிவாழ்க்கை நடத்தும் வாய்ப்பு அல்லது வாதனை கிடைத்தது. நீ இரங்காயெனில் சரியான சமயத்தில் என்னை ஓட்டலில் கண்டு பிடித்து உதவியதற்காக என் மாமனார் அவனுக்கு ஒரு பெண்ணைப் பார்த்துக் கட்டி வைக்கக் கங்கணம் கட்டியிருப்பதாகச் சொன்னார். நீ இரங்காயெனில் துணையும், வீட்டிலே மனக் கஷ்டமும் இல்லாமல் இல்லறத் துறவியாக வாழ்வதிலே தான்மகிழ்ச்சி இருக்கிறது. இது போன்ற மகிழ்ச்சி நீடித்து நிற்பதுதான் கஷ்டம்.

ஆண்கள் தவறுவார்கள்; முக்கியமாக கல்யாணமான வர்கள் நீண்டநாள் மனைவியைப் பிரிந்து தனித்து வாழும் காலத்தில்தான், தவறி விழுகிறார்கள் என்று சொல்லக் கேள்வி. நான் தவறுதல் பக்கமே தலைவைத்துப் படுக்காதவன். வாரா வாரம் நான் செய்யும் காரியங்களை யும் காந்திமதி தனக்குள்ள மகிழ்ச்சியையும் கடிதங்கள் மூலம் பரிமாறிக் கொள்வோம். உப்பு சப்பற்ற விஷயங்

கலை எழுதிக்கொள்வதில் எத்தனை கொள்ளை இன்பம்

காந்திமதி, குழந்தை பெற்ற பின்பு, எனக்கு வேளா வேளைக்கு முன்னைப் போல ஆகாராதிகள் சௌகரி யங்கள், கிடையா. இதை நானும் யூகிக்கவில்லை. பிள்ளை பிறந்தநண்பர்கள் வீட்டிலே அவர்கள் படும் குடும்பத்துயர் மூலம் அறிந்தவன். ஆகவே, காந்திமதி வருவதற்குள் வீட்டுக் காரியங்களை, என் வழிகளை நானே நன்கு நிர்வகித் துக் கொள்ளும் பழக்க வழக்கங்களைக் கையாண்டேன். சுற்றி வளைத்து நான் சொல்ல முயற்சிப்பதை, நேரிடை யாகவும் பச்சையாகவும் சொன்னால், ருதுபர்ண மகாராஜா வீட்டில் நளன் செய்த தொழிலைச் செய்தேன்.

மடைத்தொழில் எனப் புலவர்களால் சிறப்பிக்கப் பெற்ற மடவார் தொழில் சமையல் காரியத்தைச்செய்தேன். இக்கலைக்கு நீ இரங்காயெனில் எனது குரு. புதியபொழுது போக்கு ஏற்பட்டதனால் முக்கியமாகப் பிள்ளைப் பேறு அடைந்த மனைவியைப் பற்றிய கவலை குறைந்தது. அதாவது சதா மீனாளின் நினைவுக்கு இடம் ஏது? காப்பி போடும் கலையில் இடம்பெற்ற என் சிந்தனை பரிபூரணமாக பால் காய்ச்சி சுவைக்காக டிக்காஷன் சேர்த்து ஜீனியையும் போட்டு சுடச்சுட சாப்பிட பழகுவதற்குள், மாதம் ஒன்றுக்கு மேல் போய்விட்டது. காப்பிக் கலையில் கைதேர்ந்த பெருமையில் வீட்டிலே யார் வந்தாலும் காப்பி என் கையால் தயாரிக்கப்பட்டது எனப் பெருமை பேசு வேன். டின் பாலை எவ்வாறு கறந்த பாலாக்குவது என்பதை ஒரு வாரத்தில் கற்றுக்கொண்டேன். அதிகம் சொல் வானேன்?

என் சமையல் அறை பிராபல்யம் என் ஆபீஸ் வரை எட்டிற்று. காந்திமதியே எழுதியிருந்தாள். "நல்ல சுபயோக சுப முகூர்த்தத்தில் தாங்கள் தயாரிக்கும் காப்பி வாசனை படித்து அறிந்தேன். முன் எச்சரிக்கையுடன் சமையல்

கலையைக் கற்றுக்கொண்டு என் சமையலைக் கோளாறு சொல்லும் அளவிற்கு ஆண்டவன் தங்களுக்கு அருள வேண்டும். உங்கள் மறதியின் காரணமாக மண்ணெண்ணெய் டின்னை அடுப்புப் பக்கம் வைத்துக் கொண்டு அடுப்புக் காரியங்கள் செய்ய வேண்டாம்.

'மேல் அங்கவஸ்திரம், புல்ஹாண்டு ஷர்ட், போட்டுக் கொண்டு அடுப்பங்கரை போய் விடாதீர்கள். நெருப்புக்கு பரம விரோதி ஆடைகள். வெங்கலபானை, ஈயச்சட்டி இவைகளில் தண்ணீர் ஊற்றியதாக எண்ணிக் கொண்டு ஒன்றை இரண்டாக்கிவிட வேண்டாம். அல்லது ஈயம் உருகி அடுப்பிற்குள் விழுந்துவிடப் போகிறது. உங்கள் மறதி எனக்குத் தெரிந்தது. ஆகவே இத்தனையும் சொன்னேன். தாங்கள் என்னைப் பார்க்க வரும்போது தாங்கள் தயாரித்த காபியை பிளாஸ்க்கில் ஊற்றிக் கொண்டு வாருங்கள். இங்கே யாரிடமும் காபியென்று சொல்லாமல் சாப்பிட்டுவிடுகிறேன். தாங்கள் கிண்டிய உப்புமாவின் பெருமையை ருசியை ஏழு பக்கம் எழுதியிருக்கிறீர்கள். எனக்காகச் சொல்லுகிறேன். சமையல்காரரின் பிள்ளை யென்ற பட்டம் வந்து என் குழந்தைக்குத் தந்துவிட வேண்டாம். ரகசியமாகவே உங்கள் சமையல் நடக்கட்டும்......'' என்று கிண்டலாகவும் அன்பாகவும் எழுதியிருந்தாள்.

சமையல் செய்வது நல்ல பொழுதுபோக்கு. முக்கியமாக தாரத்தைப் பிள்ளைப் பேற்றுக்கு அனுப்பிய கணவனுக்கு இது நல்ல பொழுது போக்கு. உபயோகமான பொழுது போக்கு. ஆனால் பணச் செலவான பொழுது போக்கு என்றும் சொல்லிவைக்கிறேன். என் சிந்தனை பெரும்பாலும் ஆபீஸ் வேலை—வீட்டுச் சமையல்—குழந்தை வளர்ப்பு முறை பற்றிய படிப்பு இவ்வாறு சென்றது. முக்கியமாக குழந்தைகளை எவ்வாறு எடுப்பது, அதன் மனத் தத்துவம் என்ன, அதற்கு நோய் நொடி வந்தால் என்ன மருந்துகள் தேவை? பலப்பல விஷயங்களை நான் சேகரம் செய்து

வந்தேன். மலிவான விலைக்கு மைக் ஒன்றும் லவுட்ஸ்பீக்கரும் கிடைத்தால் வாங்க வேண்டும் எனத் திட்டமிட்டேன.

என் எண்ணங்களைக் கலைக்க நீ இரங்காயெனில் வந்தவன், "டேய் மணி, அருமையான தொட்டில் விலைக்கு வந்திருக்கு. உயரிய வேலைப்பாடு. கருங்காலி கடைசல்உள்ளது. நீ வாங்கிப் போடு" என்றான். குழந்தை வந்ததும் அதற்குத் தொட்டில் அவசியம். துணித் தொட்டிலைவிட மரத்தொட்டிலே காற்றோட்டம் நிறைந்தது. குழந்தை தூங்குகிறதா விழித்திருக்கிறதா, குப்புறக் கிடக்கிறதா என்று துணித் தொட்டிலில் பார்க்கமுடியாது. அவசியம் ஏற்பட்டு அதனைப் பார்த்தாலோ ஆபத்து. துணி அசங்குவதன் மூலம், தூங்கினால், குழந்தை விழிக்கும். விழித்திருக்கும் குழந்தை பயத்தாலோ பாசத்தாலோ அலறும்! ஆகவே பல கோணங்களிலும் மரத் தொட்டில் போன்று சாலச் சிறந்தது குழந்தைக்கு வேறில்லை என்ற முடிவுக்கு வந்தோம்.

"நாளையே போய் வாங்கலாம்."

"இல்லை. இன்னும் இரண்டு மூன்று நாள் சென்று வாங்கலாம். இன்றைக்கு நீ ரஸம்-மைசூர் ரஸம் வைக்கும் வழியை வகுத்துக்கொடு" என்றேன். மைசூர் ரஸம் வைக்கும் வழியை அவனிடம் கற்றுக்கொண்டேன். இப்படி நாளொரு கறியும் பொழுதொரு குழம்புமாக சமையலை நான் கரைகாண முயன்றேன். தொட்டில் வாங்கும் உத்தேசத்தைக் காந்திமதிக்கு எழுதியது எவ்வளவு நல்லதாகப் போய்விட்டது.

"தொட்டிலை தயவு செய்து வாங்கிவிடாதீர்கள். என் கடிதம் சேருமுன் வாங்கியிருந்தாலும் யாருக்கேனும் விற்றுவிடுங்கள். தொட்டில் போடுவது நமது குடும்பத் தொட்டிலாக இருக்க வேண்டும். யார் வீட்டுத் தொட்டிலையும் வாங்கப் போக பழிபாவம் குழந்தைக்கு வரும். தொட்டிலில்

கூடவா மூட நம்பிக்கை' என்று எண்ணிவிடாதீர்கள். தொட்டிலை விற்பவர்கள் கஷ்டநிலையில் விற்கிறார்கள். எத்தனை சீருஞ் சிறப்பும் ஆகச் செய்யப்பட்டதோ. அவர்கள் பாசத்தைக் கொண்டு வந்து நாம் தொங்கவிடக் கூடாது என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். உங்கள் வீட்டிலே பழைய தொட்டில் இருக்கும். நீங்கள் தூங்கிய தொட்டில் என்னவாச்சு எனக்கேளுங்கள். இல்லையென்றால் எங்கள் வீட்டிலே இங்கே பழைய நாள்தொட்டில் இருக் கிறது. இதுவே போதும். நம் வீட்டு ஆகி வந்த தொட் டில்கள் வேண்டாமென்றால்...புதிய தொட்டிலை வாங்க லாம். பிறர் வீட்டுத் தொட்டிலைத் தொடாதீர்கள் .வாங்கி யிருந்தாலும் உடனே அப்புறப்படுத்திவிடுங்கள். தொட் டில் இவ்வாறு நிற்க,

பால்காரனோடும் வேலைக்கார வள்ளியோடும் சண்டை போட வேண்டாம். நான் வந்து சமாதானம் செய்து கொள்ளுகிறேன். உங்கள் பேச்சை அவர்கள் சட்டை செய்யமாட்டார்கள். அடிக்கடி எண்ணெய் ஸ்நானம் செய்துகொள்ளுங்கள். கருங்காலி பீரோவில் தேனில் ஊறிய நெல்லிக்காய் இருக்கிறது. மண் ஜாடியில் எலு மிச்சம் பழ ஊறுகாயும், மாவடு ஊறுகாய் பீங்கான் ஜாடி யிலும் இருக்கிறது, இன்னும் நாலே மாதம் பல்லைக் கடித் துக்கொண்டு ஓட்டல் படுக்கையோ கைச்சமையலோ கவனி யுங்கள். அதற்குள் நான் வந்து கவனிக்கிறேன், லீவு எடுக்க முடிந்தபோதெல்லாம் வர முயற்சி செய்யுங்கள். மற்றவை நேரில்.

தங்கள் பிரியை

மீனு."

நல்ல வேளையாக தொட்டிலை வாங்காமல் விட்டது புத்திசாலித்தனமாகப் போய்விட்டது. பெண்களுக்கு எத்தனையோ நம்பிக்கைகள், கொள்கைகள், சம்பிரதாயங் கள். பிறர் வீட்டுத் தொட்டிலை வாங்குவது தவறென

எனக்குத் தெரியவில்லை. தன் கருத்துப்படி மரத்தொட்டில் வாங்காத என்னிடம் நீ இரங்காயெனில் கோபங் கொண்டான். அவனை சமாதானம் செய்து தீர்ப்பது கஷ்டமாகிவிட்டது. பேச்சுத்துணைக்கும், சமையல் உதவிக்கும் அவனை எதிர்பார்க்கும் பழக்கம் வந்துவிடவே, அவன் இல்லாமல் என் வாழ்வுச் சக்கரம் சுற்றாது. நீ இரங்காயெனில் பரம ரசிகன். உணவு முதல் உயரிய கவிதைவரை நன்கு ரஸிக்கக் கூடியவன். ஆகவே எனக்கு எப்போதும் உத்சாகம் குன்றா வண்ணம் கை கொடுக்கிறவன்.

நான் சமையல் செய்ய ஆரம்பித்த பின்பு, வீட்டிலே அதிகமான பணச்செலவு ஏற்பட்டதை உணர்ந்தாலும் நான் செய்யும் செலவு நியாயமாகத்தானே படும். அப்படியிருந்தும் உணவுப் பொருள்கள் எப்போதாவது ருசியாக உண்பதைவிட வீணாகப் போகும் உணவுப் பண்டமே அதிகம். ஆரம்பநிலையில் எல்லா கலையிலும் வீணாகும் பகுதி தான் அதிகம். போகப் போக சிக்கனமாகவும் சிறப்பாகவும் செய்யும் பக்குவம் நமக்குப் பிடிபடும். சில நாள் சமையலைச் செய்துவிட்டு எந்தவித அறுசுவைக்குள்ளும் அடங்காத உணவு அமைப்பின் காரணமாக ஓட்டலிலிருந்து 'தாட்'எடுக்க நேரிடும். இப்படி உணவுப் பண்டங்களாகவும் ஓட்டல் செலவாகவும் அதிகத் தொகை மாதாமாதம் செலவானதை மாதக் கடைசியில் பார்க்கும்போது மனம் துடிக்கும். பிறகு, "எல்லாம் ஒரு ஜீவன் பிறக்கப் போவதால் நேரிடும் செலவுதானே" என்ற நல்வகை திருப்தி ஏற்பட்டு மகிழ்ச்சியடைவேன்.

என்னுடைய சமையல் வேலைக்கு உலைவைக்கும் நோக்கத்தில் ஆபீஸில் மாறுதல் வந்தது. எனக்கு மேலான பதவியில் இருப்பவர் இரண்டு மாதம் லீவு எடுக்கவே எனக்கு அந்த நாற்காலி, (உட்கார வசதியானது முக்கியமாக இடுப்பொடிய வேலைசெய்ய வேண்டியதில்லை), கிடைத்தது. போதாக்குறை சம்பளத்திலும் அதிகம் வர

இருந்தது. எந்த உத்தியோகத்திலும் தானாக வேலை செய்வதைவிட, பிறரை வேலை வாங்கும் உத்தியோகமே வெகு சௌகர்யமானது. பெயரை வாங்கித் தருவது. இத்தனை சிறப்புள்ள உத்தியோக உயர்விலே ஒரு குறை இருந்தது. நான் எந்தக் காரணம் கொண்டும் தாமதித்துப் போகவே முடியாது. பத்து மணி ஆபீசுக்கு 9½ மணிக்கே நான் இருக்கவேண்டும். ஆகவே, சமையல் கலைக்கும் என் ஆராய்ச்சிக்கும் விடுதலை கொடுத்து எடுப்பு சாப்பாட்டில் வந்து நின்றேன். ஆனாலும் ஆறு நாள் செய்யாத லூட்டிகளை ஏழாவது நாள் ஞாயிற்றுக்கிழமை அன்றே செய்து வருகிறது!

நான் பொறுமையுடன் அடுப்பை எரியவிட்டும் சாமான்களை நறுக்கியும் வெந்தும் வேகாமல் செய்து, என் ஊதியத்தை உழைப்பை வீணாக்கினால் வேலைக்கார வள்ளிக்கு தன் சொத்து பாழானது போலத் தோன்றும். காட்டுக் கத்தல் கத்துவாள்.

"இந்தாங்க ஐயா. இனிமேல் நான் வரமுடியாது. வீட்டிலே வேலை செய்யமுடியாது" என்பாள். இவள் சலசலப்புக்கு நான் பயந்தாலும் நீ இரங்காயெனில் அஞ்சா நெஞ்சன்.

"நீயில்லாவிட்டால், உங்கம்மா வருகிறாள்."

"இந்தாய்யா அவரு தருமதுரை. அப்பாவி! வீட்டை நாற அடிக்கிறது உங்க குணமாப் போச்சு. பானை பானையா அரிசி பஞ்ச காலத்திலே வடிச்சிப் போடுறீங்களே. ஈசன் படியளக்கும் இதிகாச காலம் இல்லே. ரேஷன்படியளக்கும் ரெண்டும் கெட்டகாலமய்யா."

"அது எங்கள் இஷ்டம். உனக்கு இஷ்டமிருந்தால் எடுத்துப்போ. இல்லாவிட்டால் நாய்க்குப் போடு."

தெரு நாய் வெள்ளையன் ஒருவனே என் சமையலை உண்டு வந்தது. நாய் நன்றியுள்ளது என்பதை, நான்

சமைத்ததை உண்டும் என்னைக் கண்டால் வாலைக் குழைக்கும். ஆகவே நீ இராங்காயெனில் அதன் தலையில் சுமையைப் போட்டான்.

"எந்த நாய்க்குப் போடுறது?"

"வெள்ளையன் எங்கே? அதுதான் வருமே. அத்தனை சாதத்தையும் குழம்பையும் கறியையும் போடு" என்றான்.

"வெள்ளையன் போய் நேரமாச்சு" என்றாள்.

"வெள்ளையன் போய் விட்டதா? ஐயோ பாவம்" என்றேன்.

நீ இராங்காயெனில், "சும்மா அழாதேடா. வள்ளி நம்மைப் பயமுறுத்துகிறாள்" என்று ஆறுதல் சொன்னான். வள்ளி, "நிஜமாய்யா. அது போயிட்டது. நேத்தே போயிட்டுது. அதனாலேதான் சொன்னேன், இனிமேல் சமையல் செய்ய வேண்டாமுன்னு" அவள் விளக்கம் தெரிவிக்கவே நானும் பயந்து போனேன். வெள்ளையன் எவ்வளவு நல்ல பிராணி. என் கைப்பட்டுச் சாகவேண்டுமா? தனிக் குடித்தனம் தடிக் குடித்தனமாய் முடியவே, "டேய் அப்பனே நீ இரங்காயெனில் ஒருவரைக் கொன்ற பாவம் போதும். உனக்கும் உன் சமையல் பாடத்திற்கும் விடுதலை. வணக்கம்" என்றேன்.

நீ இரங்காயெனில் சிரித்து, "அட அப்பாவி வள்ளிக்கு இந்தப் பத்துப் பாத்திரத்தை விளக்குவது, தண்ணீர் எடுப்பது, கூட்டிப் பெருக்குவது மிக மிக கஷ்டமாக இருக்கிறது. ஆண்கள் குடித்தனம் செய்வதை எந்தப் பெண்ணும் சகிக்க முடியாது. அந்த உணர்ச்சியில் இவள் பேசுகிறாள். நாய் இறக்கவில்லை. அது முனிசிபாலிடிக்குப் போயிருக்கிறது" என்றான்.

வள்ளி, "அட அது போனதை எங்கே பார்த்தீர்கள்? செத்துப் போச்சுன்னு சொல்லி வைச்சா சமையல் நிற்குமுன்னு பார்த்தா..." என்றாள்.

"அப்படியா, டேய் வா. நேரே முனிசிபாலிடிக்குப் போய் அதை விடுதலை செய்துகொண்டு வரவேண்டும்."

"ஞாயிற்றுக் கிழமையடா இன்று."

"அப்படியானால்?"

"நாளை நீ ஆபீஸ் போ. நான் முனிசிபாலிடிக்குப் போகிறேன்."

வள்ளி, "அந்த சனியனை இங்கேயேன் கொண்டு வரப் போறீங்க. இன்னும் உப்பு பருப்பு, அரிசிக்குச் சனி பிடிக்கவா?" என்று கேள்விக் குறியைப் போட்டாள்.

"இல்லே வள்ளி, வெள்ளையன் நான் உழைத்த உணவை உண்டதற்காக அல்ல. வரப்போகும் குழந்தைக்கு விளையாட்டுக் காட்டுவதற்காக."

"அப்போ இனிமேல் சமையல் கிடையாதே."

"கிடையாது" என்று உத்திரவாதம் பெற்ற சமயம் நீ இரங்காயெனில் அடாணா ராகத்தில், பாரதியார் பாப்பா பாட்டைப் பாடிக்கொண்டு இருந்தான்.

## 8. தந்தி வந்தது

**மாதா உதரத்து**

ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்
ஒருமதித் தான்றின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புனி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொரு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைந்தும்

*ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள்.*

*ஆபீஸ் கெடுபிடிகள் மும்முரமாய் இருக்கவே வீட்டைச் சரிவரக் கவனிப்பதில்லை. நேரான நேரத்திற்கு வீட்டில் இருப்பதும் இல்லை. வேலைக்கார வள்ளி வருகின்ற நேரம் எனக்கு அசௌகர்யம்; அவள் அசௌகர்யப்படும் வேளையோ எனக்குச் சௌகர்யம். இவ்வாறு வீடு கந்தர் கோளமாக இருக்கவே, வெளுத்த வெள்ளையை வாங்கி வைப்பதோ, அழுக்குப் போடுவதோ பரம கஷ்டமாக இருக்கிறது. ஞாயிறு அன்று சலவைத் தொழிலாளியை எல்லோரும் வரச் சொன்னால் ஒரு மனுஷன் எங்கே தலை காட்ட முடியும்?*

*வீட்டுக்குள் வந்தவள் பாட்டி, "இது என்னடாப்பா பூகம்பம் வந்த வீடுமாதிரி" என்று கேட்டாள். அழுக்குத்*

துணிமணிகள் தோரணம் தொங்க, பாத்திர பண்டங்கள் கருத்துக் கரியாகி கண்ணைக் கெடுக்க, ரோட்டுப் புழுதியெல்லாம் வீட்டிலே மெத்தை விரித்திருக்க, சாமான்கள் திக்குக்கு ஒன்ருய் சிதறிக் கிடக்கவே, பாட்டி "கொடுப்பா பெருக்கமாற்றை. நானுவது பெருக்குகிறேன். உன்னை என்னமோ கெட்டிக்காரன், தானுகச் சமையல் செய்கிருன் சமையற் புலி யென்று பம்படிப் பக்கம் பேச்சு நடக்குதே" என்ருள்.

"இல்லை பாட்டி. சமையல் வேலை செய்ய ஆசைதான். முடியவில்லை. மேலும், ஆபீஸ் வேலையோடு இதையும் சேர்த்துப் பார்த்தால்?...."

"பொம்பளை இல்லாத வீடு ஒரு வீடாகாது. சும்மாவா வீட்டுக்கு லட்சுமி பெண்ணென்று சொன்னுங்க. சலவைக் காரன் வந்தான்"

"வாங்கி வைத்தீர்களா?"

வந்து கொண்டிருந்த நீ இரங்காயெனில் "எத்தனை நாளாக பாட்டி வெளுத்து வாங்குகிருர்கள்?" என்று பரிகாசம்செய்யவே, "டேய் உன் வாலை என்னிடம் காட்டாதே" என்ருள் பாட்டி.

"சலவைக்காரன் என்ன சொன்னுன்?"

"உன்னிடமே சலவை கொடுப்பானும்; எங்கள் வீட்டினர்மீது நம்பிக்கை யில்லையாம், நாங்கள் துணிமணியைக் கிழித்து விடுவோமா? இல்லை எடுத்துக் கொள்ளுவோமா?"

"அப்படி யில்லை பாட்டியம்மா. எங்கேயோ, ஒரு வீட்டில் நடந்ததாம் இது. பக்கத்துவீட்டில் இவ்வாறு சலவையைக் கொடுத்துவைக்க, அவர்கள் மோசம்செய்யவே யார் வீட்டுக்கும் யார் வீட்டுச் சலவையும் இனி கொடுப்பதில்லையாம் இவன்."

"அப்படியா? மீனுவுக்கு இதுதானே மாசம்?"

"அப்படித்தான் இருக்கணும்."

"பெத்துப் பெருகி தீர்க்காயுசாக இருக்கவேண்டும்."

"உங்கள் ஆசீர்வாதம் பாட்டி" என்றேன்.

"கடிதாசி வருகிறதோ?"

"நேற்று வந்தது."

"என்னடா எழுதியிருக்கிருள் மீனு அக்கா?" என்ருன் ஸ்ரீயிரங்காயெனில்.

"இதுதான் கடிதம்." மீனுவின் கடிதத்தை வாங்கிய ஸ்ரீ இரங்காயெனில் "அப்பா சொல்லுகிருர்கள் பிறக்கப் போவது பையன்; இவனுக்கு தன் பெயரை இட வேண்டும் என்று அம்மா சொல்லுகிருள். பிறக்கிறது பெண்; என் பெயரை இட வேண்டுமென்று நான் சொல்லுகிறேன். ஆணும் பெண்ணுமாகப் பிறந்துவிட வேண்டும்; இருவர் பெயரையும் இட முடியாதென்று பரம்பரையான பழக்கம் எது? தகப்பனாரின் தகப்பனர் பெயரை அல்லது தாயார் பெயர் குழந்தைக்கு இடுவதுதானே? என் மாமனர் மாமியார் பெயரை இடுவதென நான் முடிவுசெய்திருக்கிறேன்..." என்று கடிதத்தை பாதியில் நிறுத்தினுன்.

"ரெட்டைக் குழந்தையோட தொல்லையை இவள் எங்கே கண்டாள். ஒரு குழந்தையை வளர்ப்பதே உடலைப் பிழிந்துவிடும். இரண்டும் அழ ஆரம்பித்தால்......"

"இரட்டை நாயனம் மாதிரி இருக்கும்" என்ருன் ஸ்ரீ இரங்காயெனில்.

"பிறந்தால் தள்ளிவிடப் போகிறேமோ, நம் கையில் என்ன இருக்கிறது பாட்டி?" என்றேன்.

"குழந்தை தனியாக வளரவேண்டும். வீட்டில் ஆள் மாகாணம் நிறைய இருந்தால் நீ சொல்லுகிறபடி ஒரு பிரசவத்தில் நாலு பிறந்தாலும் கவனிக்க முடியும்."

"இன்னொரு கஷ்டமும் இருக்கிறது. இரண்டும் பெண்; இரண்டும் ஆண் என்ருல் எந்தக் குழந்தை சாப்பிட்டது

எந்தக் குழந்தை சாப்பிடவில்லை யென்றே குளறுபடிகள் வரும். இதனால் சாப்பிடாத குழந்தைபட்டினியாக இருக்க, உண்டது மேலும் மேலும் உண்ட வண்ணமாய் இருக்கும். இரட்டைக் குழந்தைகளில் ஒன்று விளக்கெண்ணெய் குடித் திருக்கலாம்; இனம் காண முடியாதபடி மறுபடியும் அதற்கே விளக்கெண்ணெய் போடும்படி நேர்ந்துவிடும். இரட்டைக் குழந்தைகளின் தொல்லையும் ஆள் மாருட்டம் தரும் பரம தொல்லையும் பரம வேதனையானது."

"போடா முட்டாள். தாய்க்கும் தந்தைக்கும் குழந்தைக ளிடம் வித்தியாசம் தெரியாமல்போகாது. பள்ளிக்கூடத்தில் வேண்டுமானால் நீ சொல்லும் கஷ்டங்கள் ஏற்படலாம்."

"அப்படியானல் இரட்டைக் குழந்தை பிறந்தால் நீ சமாளித்துக்கொள்வாய்" என்று பாட்டி சிரித்தாள்.

எங்கள் பேச்சில் தடங்கல் செய்ய, "மா...ஆம்...மா..." என்ற குரல் கேட்டது. புதிதாகக் கேட்கிறவர்கள் ஏதோ பசு வந்துவிட்டதென நினைக்கும்படியாக அத்தனை இனிமை யான குரலாக இருக்கும்.

"மாட்டுச் சத்தம் கேட்கிறதே" என்ருள் பாட்டி.

"இல்லை...வாடாப்பா உள்ளே" என்றேன். "மா... ஆம்...மா..." உள்ளே வந்தால், கையில் சொம்பும் ஆழாக்கு மாக நிற்கிருன்!

"என்னய்யா ரொம்ப நல்லா இருக்குது நீ கத்தறது."

"நீ இந்த உலகத்தில் தானு இருக்கிறே? அமாவாசைக் கும் ஆடிக்குமாகத் தலை நீட்டுவதாக எண்ணமா?"

"பால் இப்போ அவசியமா உனக்கு?" என்று நீ இரங் காயெனில் பிரச்சனையைக் கிளப்பினுன்.

"மோருக்காகவாங்கி உரைக்குத்திவைக்கிருயா, மணி?" என்ருள் பாட்டி.

"மோரோ பாலோ அதுக்கு இப்போநேரம் இல்லையே."

"இவங்களுக்கு நேரம் ஏது? சில நாளைக்குப் பாலே கொண்டாங்கிறது; வந்தா ஆள் இருக்கிறதில்லே. வரவர மோசமாய்ப் போச்சு இந்தவூடு. மீனு அம்மா போனது மூதலே வீடு வீடாக இல்லே" என்று குறைப்பட்டான் பால்காரன்.

"டேய், மீனு அம்மா வந்தா, இப்போ வாங்காததையும் சேர்த்து வாங்குவாங்க. அரைக்கால் படிக்கு ஆரம்பத்திலே ஒரு நபர் வரும்."

"டேய் நீ இரங்காயெனில் சும்மா இரு, பால்கார முனியாண்டி."

"பேசாதிங்க. என்னய்யா திடீர்னு பால் வேண்டா முன்னு சொன்னு, நான் என்ன செய்யறது?" என்று என்மீது எரிந்து விழுந்தான்.

"எனக்குத் தேவையில்லையே?"

"தேவையிருபபதையும் இல்லாததையும் முன்கூட்டி சொல்ல வேண்டாம்? மிஞ்சின பாலே சாக்கடையிலே கொட்டவா..."

பால்கார முனியாண்டியின் கோபத்தை அமர்த்தி வைக்க எண்ணிய நான், "இந்தப்பா வீட்டிலே பாலுக்குச் செலவு இல்லே?" என்றேன்.

"இல்லேங்கிறதை முன்கூட்டிச் சொல்லாதது உங்க தப்பு".

"தப்புத்தான்" என்றேன். நீ இரங்காயெனில் காப்பி போட ஆசை கொண்டு, "கால்படி பால் கொடப்பா" என்றான்.

"நான் பால் ஊற்ற வரவில்லே; பால் ஊற்றிய பணத்தைக் கறக்க வந்தேன். கணக்குத் தீர்க்க வந்தேன்" என்றான்.

"கணக்கா? எனக்குத் தெரியாது. காந்திமதி வரட்டும். போப்பா. ஏதோ ரெண்டொண்ணு பணம் வாங்கிக்கோ.

கணக்குத் தீர்த்தா, அப்பாலே பால் ஊத்த யார் வருவா இங்கே?''

''நான் புது வாடிக்கை பிடிச்சாச்சு. கேளுங்க பெரியம்மா. ஐயா ரொம்ப கருமி ஆகிவிட்டார். கருமியின்னு அளவு சொல்ல முடியாத கருமி. அம்மா, மீனு இருந்தாங்கன்னு எதனுச்சும் பார்த்தும் பாராமலும் தீனி கொடுக்கும். இவரு பிறக்கிற பிள்ளைக்கு மிச்சம் வைக்கிறுரு! வாயையும் வயிற்றையும் கட்டி மிச்சம் வைக்கிறுரு.''

''அவனுக்கு இருக்கிற கஷ்டத்தை நீ எங்கே கண்டே முனிசாமி'' என்று பாட்டி எனக்காகப் பரிந்து பேசினுள்.

''ஆமடாப்பா முனியாண்டி. இவன் மிச்சம் வைத்து நிலா முற்றம் வீட்டுக்குத் தங்க ஓடு போடப்போறுன்'' என்றுன் நீ இரங்காயெனில்.

''என்னமோ இவர் அரும்பாடுபட்டுச் சேர்த்துச் செலவைக் குறைச்சு மிச்சம்வைக்கிறதை நாளை பொறக்கும் பிள்ளை ஒரு நாளையிலே பூ பூ பூன்னு காத்தா ஊதிடும். அதனுலே வயத்துக்கு வஞ்சனை இல்லாமே பாலும் தயிருமா சாப்பிடுங்க'' என்றுன் பால்காரன்.

''நீ சும்மா போக மாட்டே?''

என் கோபம் பொய்க் கோபம் என்றறிந்ததும், ''ஏன் சார் நாளை முதல் பாலுவேணுமா வேண்டாமா? கண்டிசனு சொல்லிடுங்க'' என்று கேட்கவே சமாதானத்தோடு மீனு வரும் வரை பால் வேண்டவே வேண்டாமென்றும், அவள் வருவதற்கு ஒருவாரம் முன்னதாகத் தாக்கல் கொடுப்பதாயும் சொன்னேன். பால்காரன் வந்து சத்தம் போட்டதற்குக் காரணம், புதிய வாடிக்கையை நான் பிடித்துவிடக் கூடாது என்ற நோக்கத்தோடு தான் பயமுறுத்தி வைத்தான். பால்காரன் போய்க் கொண்டிருந்த சமயம், வேலைக்கார வள்ளி, எள்ளும் கொள்ளும் முகத்திலே வறுத்தெடுக்கிற மாதிரி வந்தாள். ஏன் கோபம் இருக்காது? ஒரு

வாரத்திய குப்பை வாரி எடுக்க வேண்டும்; ஒரு வாரத்திய துணிமணி துவைப்பு, ஒரு வாரத்திய தம்ளர் லோட்டா சேகரம் செய்தல் இவ்வாறு இடுப்பொடிய வேலை இருக்கும் போது தாமதித்துதான் வள்ளி வருவாள்.

"நானு வேலையை விட்டு நின்னுக்கிறேன். எப்ப வந்தாலும் சரியானபடி என்னாலே வேலை செய்ய முடியலே" என்றாள் வள்ளி.

பாட்டி "ஏனம்மா வள்ளி, உனக்குக் காந்திமதி இருக்கிறபோது எவ்வளவு வேலை இருந்துச்சுது. இப்போ என்ன வேலை செய்து மொறிக்கிறே? அதே சம்பளம் வாங்கிக்கப் போறே? சம்பளத்திலே குறைவா?" என்றாள்.

"இந்தாம்மா அன்றாடம் வந்தோம்; வேலையைப் பார்த்தோமின்னு சௌகர்யமா இருக்கும். இதோ பாருங்க, போன ஞாயிற்றுக்கிழமை காப்பி குடிச்ச தம்ளர். இதை விளக்கினா லேசிலே போகுமா? என் விரலில் பாதியை ஒடிச்சாத்தான் போகும். தம்ளரைப் பாருங்க அடியிலே கருப்பு வரை கிடக்குது. அம்மா வந்தா இதுதான் பார்த்த லட்சணமான்னு என்னைத் திட்டும்."

"வாஸ்தவந்தான். ஏதோ இன்னும் மூணு மாசம் உன் கணக்குப்படி 12 ஞாயிற்றுகிழமை வந்து விடும்" என்று பாட்டி சொல்லுவதற்குள் முற்றத்துக் குழாயடியில் வீட்டுப் பாத்திரங்களை எடுத்துப் போட்டு ஒரு வீசை புளியையும் எடுத்துப் போனாள். அவள் பெருக்க வந்தால் வீட்டுக்குள் இருக்க முடியாது. ஆகவே மாடிக்கு ஓட வேண்டும். வீடு, கண்ணாடி போல, ஆயிற்று. பாத்திரங்கள் மினு மினுப்பாக இருப்பதில் மிகுந்த அக்கறையுள்ளவள். காலையில் பால்காரன், சலவை ஆள், வேலைக்காரி மூவர் தொல்லையும் முடிந்தது என்று நான் சந்தோஷப்பட்ட சமயம் என் ஆபீஸ் தோழர் எம். எஸ். எஸ். ஏஸ் (எத்தனை எஸ். என்பது மறந்துவிட்டது) ராஜன் வந்தார். அவர்

தோரணையில் எனக்கு ஏதோ படுகிற சிரமத்திற்குப் பண உதவி செய்ய வந்த மாதிரி அத்தனை சௌடாலாக வந்தார். ஆனால், அவர் இரட்டைக் குழந்தை பெற்றவர்; அனுதாபத்திற்கு உரியவர். என்றாலும் பண உதவி செய்ய வேண்டுமென எதிர்பார்ப்பது தவறாகும். நம்மிடையே அனுதாபம் என்றால் பண உதவி என்பதுதானே எழுதாத சட்டமாக இருக்கிறது!

வந்ததும் வராததுமாக, 'என்ன குழந்தை சார்?' என்றார்.

"இன்னும் தெரியலே" என்றேன்.

"நம்மைப் போல இரட்டை யோகம் அடித்து விடாதீங்க. வீட்டிலே ஒன்று ஒன்றாகப் படுத்தவில்லே. இரண்டும் சேர்ந்து இரண்டாயிரம் குழந்தையாகப் படுத்துகின்றது" என்றார் ராஜன்.

"இங்கிலாந்தில் இரட்டைக் குழந்தை எத்தனை பிறந்தாலும், யார் வீட்டில் பிறந்தாலும் ராஜா பண உதவி செய்கிறார்" என்றான் நீ இரங்காயெனில்.

"இது, ஜனநாயக நாடு சார். மேலும் இங்கே இரண்டு குழந்தை பெற்றவன் முகத்தில் முழிப்பதே பாவம் என்று நினைக்கும்படி யாகிவிட்டது" என்றார்.

"அப்படிச் சொல்ல வேண்டாம். அது புண்ணியம் செய்தவர்களுக்குத் தான் கிடைக்கும்" என்று பாட்டி ஆறுதல் சொன்னாள்.

"புண்ணியமோ பாவமோ. இப்போ மணிக்கு யாராவது இரட்டைக் குழந்தை பிறக்க வேண்டுமென்று சொன்னால், கூடாது என்று பிரார்த்தனை செய்கிறவன் நானாக இருப்பேன். சொல்லுகிறவர்களுக்கு என்ன? வாய் நோகிறதா? வயிறு நோகிறதா?"

"உங்களுக்கு என்ன கஷ்டம் அதிலே?" என்றான் நீ இரங்காயெனில்.

"அப்படியானால் சார் நீங்கள் கல்யாணம் ஆகாதவர் என்று நினைக்கிறேன்."

"நினைப்பதென்ன ராஜன், இவன் தடிப்பிரமச்சாரி" என்றேன்.

"அப்படிச் சொல்லுங்கள் மணி. குடும்பமே ஒரு சாகரம்; கவலைகள் நிறைந்த அலைகள். பணக் கஷ்ட மென்னும் திமிங்கலங்கள், வியாதி யென்ற விஷப் பாம்பு கள், வாழ்க்கை யென்னும் கரைமீது எட்டிப் பார்க்கும்..." என்றார். அவர் சொல்லச் சொல்ல எனக்கு கோபம் பிடித் கொண்டது.

ஆனால் நீ இரங்காயெனில், "அதென்ன அத்தனை பயங் கரமான சாகரமா? நாமாகச் செய்து கொண்ட முட்டாள் தனம் தானே. என்னைப் போல தனிக்கட்டையாக இருந் தால், வாழ்க்கை யென்னும் கரையில் வியாதித் திமிங் கலமோ, கஷ்டமென்னும் விஷப் பாம்புகளோ தலை நீட்டுமா? ஆனந்தமென்னும் காற்றல்லவா வீசும்" என்றான்.

"சொல்வீர்கள் சார். நானும் தனிக் கட்டையாகவே காலத்தைப் போக்குவதாகச் சொன்னேன். இந்தக் கட் டையை யெடுத்து தாம்பத்திய மென்னும் அடுப்பிலே எரித்து விட்டார்கள். வேகிறேன். பற்றி எரிகிறது. எரிந்து சாம்பலாகவில்லையே நான். இன்னும் எத்தனை யுகம் எரிய வேண்டுமோ இந்தக் கட்டை!"

"வருத்தப்படாதீர்கள்" என்று ஆறுதல் சொன்ன சமயந்தான என்னிடம் கைமாற்றாக எம். எஸ். எஸ். ராஜன் ஐம்பது ரூபாய் கேட்டார். உண்மையாகவே என்னிடம் பணம் இல்லை. ஆனால் என்னிடம் பணம் இல்லையெனச் சொன்னால் என்றுமே பிறர் நம்புவது கஷ்டம்,

"கொடுக்கப் பணம் இல்லை. அதனால் பரவாயில்லை, திடீர்ச் செலவுக்காக வைத்திருப்பீர்கள் என்று எதிர் பார்த்தேன்."

"இல்லை மிஸ்டர் தவறாக என்னை எண்ண வேண்டாம்."

"எனக்குக் கடன்கொடுப்பவர்களைத்தான் நான் தவறாக எண்ணுவது" என்றவர், "என்ன இருந்தாலும் தலைச்சன் பிரசவத்தைப் பற்றி நீங்கள் பயப்படுவதை அறிகிறேன். ஆபீசில் கூட பைத்தியம் பிடித்த மாதிரி இருப்பீர்கள்" என்று தமது காரியம் தோற்றும் என்னைப் புகழ்ந்தார். இம் மாதிரி தோல்வியைப் பற்றி எண்ணாதவர்கள் வாழ்க்கையில் என்றும் இனிமை நிலவுவதைக் காணுகிறேன்.

"உங்களுக்கு உதவி செய்ய..." என்று வார்த்தை முடிவதற்குள். "பரவாயில்லை சார். 'உம்' என்று சதா கவலைப் படுவதால் என்ன செய்யமுடியும். ஒன்றும் நேரிட்டு விடாது. என்னைப் பாருங்கள். சம்பளம் வாங்கிய ஏழு தேதி வரை சிலர் சந்தோஷமாக இருப்பார்கள். நான் என் றைகருமே சந்தோஷி. ஜாலியாக சினிமாவுக்குப் போகலாம் வாருங்கள். இன்று என்னுடைய செலவு சார்" என்று கூப்பிட்டார் ராஜன்.

பணக்கஷ்டமெனக் கடன் வாங்கவந்தவர், என்னைச் சினிமாவுக்கு அழைக்கிறார்.

"சார் மன்னிக்கவும்" என்று நான் தயங்கவே நீ இரங்காயெனில், "சார், மிஸ்டர் ராஜன், அவர் வர மாட்டார். இன்னும் சில விநாடியில் அவரது கரண்டி ஆபீஸ் திறக்கப்படுகிறது. ஆகவே வரமாட்டார். போய் வாருங்கள். உங்களுக்குத் தனித்து சினிமாவிற்குப் போக பயமாக இருந்தால், அடியேன் காலிபர்ஸ் துணைக்கு வருகி றேன்" என்றான். எல்லோரும் சிரித்தோம். இதனால் வெகு நேரமாக வெளியே கேட்ட சைக்கிள் மணிச் சத்தம்

வேலைக்காரி வள்ளி காதில் விழுந்து, அவள்போய் வந்து, "ஐயோ, தந்தி வந்திருக்குதே" என்றாள்.

"சார் சார் தந்தி" என்றதும், எல்லோரும் "தந்தி தந்தி தந்தி" என்றோம்.

எல்லோருக்கும் பரபரப்பு ஏற்பட்டது. "தந்தியா? என்ன தந்தி?" என்றேன். நீ இரங்காயெனில் தந்தியை வாங்கிக்கொண்டு "டேய் மணி 16-ம் நம்பருக்கு நேராக கையெழுத்துப்போட்டு ஆளை அனுப்பு" என்றான். நான் தந்தியை ஆவலோடு படிக்க ஆசைப்பட்டேன். பாட்டி அழுகையா சந்தோஷமா எனத் தெரியாத நிலையில் நிற்கிறாள்.

"ஏண்டா உன் கண் கலங்குகிறது. அசடு அழலாமா?" என்றாள். அவன தந்தியை சாவகாசமாகப் பிரித்துப் படித்தான்.

"என்னடா?"

"முதலில் நாலணாவை எடுத்து வைத்துக்கொண்டுவந்து தந்திச் சேவகனுக்கு கொடு" என்றான். புரிந்துபோயிற்று. குழந்தை பிறந்துவிட்டது.

"என்ன சார் நாலணாத்தானா. ஆண் குழந்தை பிறந்திருக்கிறதே?" என்றான் தந்திச் சேவகன். என் மனம் இன்னும் எவ்விப் பறந்தது. ஒரு ரூபாயை எடுத்துக் கொடுத்தேன். நல்ல சுபச் செய்தி கொண்டு வந்தால் அதிலுள்ள வாசகம் தந்தி சேவகனுக்குத் தெரியும்; ஆசாமி உடனே போகாமல் நிற்பான். ஆகவே சுபச் செய்தியிலும் இது உயர்வான சேதியென அறிந்தேன். என்னை ராஜன், நீ இரங்காயெனில், பாட்டி, வள்ளி எல்லோரும் வாழ்த்தினார்கள்.

உத்சாகமாத என் முதுகில் நீ இரங்காயெனில் ஒரு குத்து விட்டான். அது வலிக்கிறதா? "இன்னொரு குத்து கொடுங்கள் சார்" என்றார் ராஜன். எனக்கு நிலைகொள்ள

வில்லை. கடிகாரத்தைப் பார்த்தேன். இன்னும் அரை மணியில் ரயில் ஏறலாம்.

"டேய் நீ இரங்காயெனில், ஒரு லீவு லட்டர் தருகிறேன்."

"வயிற்றுவலி என்றுதானே? உனது ஆபீசில் சேர்த்து விடுகிறேன்."

"பாட்டி, சலவைக்காரன் வந்தால்...?"

"நீ சொன்னதாகச் சொல்லி வாங்கி வைக்கிறேன். அவன் நம்ப வேண்டுமென்பதற்காக, அழுக்குத் துணியை எண்ணி எழுதிப் போட்டுவிட்டுப் போ, மணி" என்றாள் பாட்டி.

"நீ இரங்காயெனில் கவனிப்பான். வேலைக்கார வள்ளி வீட்டைச் சுத்தம் செய்தபின் நீ பூட்டி சாவியை எடுத்துப் போ. நான் இரண்டு நாளில் வந்து விடுகிறேன். மற்றபடி காரியங்கள்...சௌகர்யப்படி யோசித்துச் செய்வாயாக" என்றவன், பெட்டியைத் திறந்து துணிமணி எடுத்தேன். அவசரச் செலவுக்காக இருந்த பணத்தை எடுத்தேன். ராஜனின் கண் பணத்தில் விழுந்தது. சற்றுமுன் "ராஜனே நீர் கஷ்டப்படும்" என்று இறுமாந்திருந்த உள்ளத்தில் கருணை வேர் விட்டது. பாவம் மனுஷன் கஷ்டப்படுவார் என்ற அனுதாபங் கொண்டேன். "வைத்துக் கொள்ளுங்கள்" என்று பணத்தைக் கொடுத்த சமயம், "டேய் எனக்கு பணம் இல்லையா? ராஜா மாதிரி ஆண் குழந்தை பிறந்திருக்கு. என்ன பரிசு எனக்கு?" என்றான். பத்து ரூபாய் பிடுங்கிக் கொண்டான் நீ இரங்காயெனில். வள்ளிக்கு இனாம் ஐந்து ரூபாய் கொடுத்தேன். ஆண் பிள்ளை பிறந்து விட்ட மகிழ்ச்சியில் தலைகால் புரியவில்லை; பணம், பிறருக்குக்கொடுக்கக்கூடிய பொருளாகக்கூட என் அறிவில் தோற்றம் தருகிறது.

பாட்டி, "இங்கே நமக்குத் தெரிந்தவர்கள் எல்லோருக்கும் தாம்பூலமும் பழம் சீனைகற்கண்டு வழங்க வேண்

டாமா?'' என்றாள். பத்து ரூபாய் கொடுத்து எல்லோருக்கும் தாம்பூலமும் கொடுக்கச் சொல்லிக்கொண்டே, பெட்டியுடன் ரயில்வே ஸ்டேஷனுக்கு ஓட்டம் பிடித்தேன். குழந்தையைப் பார்க்க அத்தனை ஆசை. ஆபீசிக்கு லீவு கடிதத்தில் ஒரு வியாதியைக் குறித்து மறக்காமல் எழுதி விட்டேன். இனியென்ன?

ரயில் நகர்ந்தது. எத்தனை முறை ரயிலில் போயிருக்கிறேன்? இன்று போகும்போது அது சொர்க்க புரிக்கு அழைத்துச் செல்லும் இன்பத் தூதனாக நகர்ந்தது. என் மனக் குதிரை போலவே ஓட்டமும் பிடித்தது, வந்த தந்தியை எத்தனை முறை படித்தேன்?

நானும் அம்மாவும் சௌக்கியம். ஆண்குழந்தை, சுகப் பிரசவம், சௌகர்யப்பட்டால் வரவும்.

இப்படிக்கு உங்கள் பையன்,
மாஸ்டர் மணி.

இவ்வாறு வேடிக்கையாகத் தந்தி கொடுத்திருந்தார் மாமனார். என் பிள்ளையே எனக்குத் தந்தி கொடுத்திருந்தால் எத்தனை முறை பார்த்தாலும் படித்தாலும் அலுக்குமா? சில விநாடிகளில் என் உடல் ரயிலில் இருக்க என் உள்ளம் அங்கே போய்விட்டது.

## 9. நாமகரணம்

சொன்ன கலையின் துறையனைத்துந் தோய்ந்தாலும்
என்ன பயனுத்தாம் இன் முகத்து - முன்னங்
குறு குதலைக் கிண் கிணிக்கால் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி.

—புகழேந்திப் புலவர்

மாமனார் வீட்டில், எப்போதும் ஜே ஜே என்று வருவோரும் போவோருமாக இருந்தனர். பிள்ளையைப் பார்க்க வந்தவர்கள் எல்லோருமே நான் யார் என்பதை மறந்து விட்டார்கள். பையனின் நலம், அவனைப்பெற்ற மீனுவின் நலம், அப்பால் அவனது அம்மா பாட்டியின் நலம் அடுத்தாற்போல அம்மாவின் தந்தை பாட்டனார் நலம் என்று விசாரித்தார்களே தவிர, என்னையோ என் குடும்பத்தாரையோ கவனிப்பார் இல்லை. உள்ளூற வருத்தம் இருந்தாலும், நாளை உலகம் என்ன சொல்லும்? இன்னார் குமாரன் என்றுதானே சொல்லும்? பிராம்சேரி நோட்டில் கடன் வாங்கப் போகும்போதும், அக்ஷராப்பியாசம் நடக்கும்போதும், இன்னார் குமாரன் என்றுதான் சொல்லுவார்கள். வள்ளுவர் கூட, இவன் தந்தை என் நோற்றான் கொல் என்னுஞ்சொல் என்றார். இன்று என்னைக் கவனியாமல் போனால் போகட்டும்.

பெண்கள் ஆணுக்குச் சரிநிகர் சமானம் என்று கோஷமிடுகிறார்கள்; நாமும் ஒப்புக் கொண்டோம். ஆண்கள் சமமெனக் கோஷமிடுங்காலம் வந்தாலும் ஒரு காரியத்தில் சமானமாக இருக்க முடியாது. குழந்தையை மூன்று மாதக் குழவியை இடித்த அப்பளமாவை குழவி செய்து, அதை வளையாமல் பிடித்துக் கொண்டாலும் கொள்ளலாம்— கையிலே ஆண்களால் மனிதக் குழந்தையை வைத்துக்

கொள்ள முடியாது. கையில் எடுத்தவுடனேயே நழுவிவிட வேண்டும்; நழுவி விடும் என்ற உணர்ச்சி ஏற்படுகிறது. அப்படி விழாதவாறு பார்த்துக் கொள்ள ஆரம்பித்தால், குழந்தைக்குத் தலைகால் தெரியாதபடி மாறுசெய்து விடுகிறேன்.

"ஐயோ குழந்தையைத் தூக்கிய அழகைப் பாருங்கள். தலை கீழாகப் பிடித்தால்?" என காந்திமதி அலறினாள். நான் தலை உசத்தினேன்—குழந்தையின் தலையை அல்ல; என் தலையைத்தான். குழந்தையின் தலையை உயர்த்தினால் கழுத்துச் சுறுக்கிட்டுக் கொள்ளுமோ எனப் பயம்.

"வாங்கு மீனா. சீக்கிரம் வாங்கு" என மாமியார் கத்தவே, என்னிடமிருந்து குழந்தையை வாங்கினாள் காந்திமதி. அவள்வாங்கும்போதே,"இப்படிக்கொடம்மா..." அவர்களுக்கு குழந்தையை வைத்துக் கொள்ளத் தெரியாது என்று மாமனார் வாங்கவே, அவரும் என்னைவிட அதிக மான பரிகாசத்திற்குப் பெண்களிடம் ஆளானார்.

"எல்லாம் எனக்குத் தெரியும்" என்று நெஞ்சோடு அணைத்துக் கொண்டார் பேரனை.

"அது என்ன தலையணையா அப்படிப் போட்டு அமுக்கி றீங்க. மதலை...அதன் தலை, கீழாகப் போவுது...அதென்ன வாத்துக் குஞ்சியா?" என்றாள் மாமியார்.

"அப்பப்பா கால் தொங்குகிறது...கழுத்திலே தாங்க லாக வைத்துக் கொள்ளுங்கள்" என்றாள். காந்திமதி.

மகளும் மனைவியும் சேர்ந்து தமக்குக் குழந்தையைத் தூக்கத் தெரியாத அப்பாவியென்று படாதாபாடு படுத்து வதை அவரால் சகிக்க முடியவில்லை; மூன்று பிள்ளைக்குத் தந்தையான மாமனார் பாடு அப்படியென்றால் நான் எம்மாத் திரம்? என் கையில் குழந்தையிருந்தால், ஹாஸ்ய நடிகனைக் கண்டு சிரிக்காத அழுகிணியும் சிரிப்பார்கள். அத்தனை உடற் கோணலில் நான் குழந்தையை வைத்துக் கொண்டி

ருப்பேன். மண்ணுழிப்பாம்பை, பிடாரன் தூக்கிய மாதிரி பிள்ளையை நான் தூக்குவதாகச் சொன்னார்கள். ஆறுமாசம் வரை, குழந்தையை எட்டயிருந்து பார்க்கிறது; கையில் எடுப்பதில்லையென முடிவு செய்கிறேன்.

பெண் தெய்வங்கள், ஆண் சிங்கங்களை மட்டந்தட்டி மடக்கி, அடித்துத் திணற அடிக்க ஒரு குழந்தையை கையில் கொடுத்தாற்போதும். ஆடாமல் அசையாமல் வைத்துக்கொள்ள அது என்ன கல்லுப் பிள்ளையார் மாதிரி இருக்கிறதா? வெண்டைக்காயில், கத்தாழைச் சேற்றைக் கொட்டி விளக்கெண்ணெய்யால் தாளிதம் செய்த மாதிரி இருக்கிறது. பூப்போல எடுத்து பூப்போல மேனி நலுங்காமல் வைக்கும்போது சோம்பல் முறிக்கும்! அப்போது பாருங்கள் வெகு ஜாக்கிரதையாக நாம் இருக்கவேண்டும்— அது சோம்பல் முறித்தால் தலை கொழக்கென விழாமல் எப்படித் தாங்குவதோ அதையும் அறியேன் பராபரமே. என் அனுபவத்தில் குழந்தையை மடியிலே வைத்துக் கொள்வதைவிட, அதை எடுத்துக் கொடுக்கும்போதுதான் மிகவும் கஷ்டம். அப்பள உருளையாக இருந்த குழந்தையின் உருவம் திடீரென அரைவட்டம் ஆகும், இத்தனை வட்டம் வான் நோக்கியும் வளையும் தரை நோக்கியும் வளையும். இந்த வேளையில் குழந்தையை எடுப்பவனும், கொடுப்பவனும் ஆண்களாக இருந்தால், குழந்தைக்கு ஆயுசு வெகு உறுதியாக இருக்கவேண்டும்.

அனுபவத்தில் சொல்லுகிறேன். ஆறுமாதம் வரை குழந்தையைப் பெண்களே எடுக்கவும், கொடுக்கவும் முடியும். குழந்தையின் உச்சந் தலையை உள்ளங்கையில் பிடித்து முழங்கையிலே குழந்தையை படுக்க வைத்து விடுவாள் பெண். நமக்கு பத்து கைகள் இருப்பினும் முடியாது; இயலாது; நடவாது. இதனால் தான் நூறு ஆண்கள் இருக்கும் கலியாணப் பந்தலிலும் விசேஷ இடங்களிலும், நாலு வயதுப் பெண் குழந்தையிடம் கைக் குழந்

-தையைக் கொடுக்கிறார்களே தவிர, அனுபவமுள்ள கிழவரிடம் கூட கொடுக்கமாட்டார்கள். நிச்சயமாகச் சொல்லுகிறேன். பெண்களே குழந்தையை எடுப்பது கொடுப்பது என இருந்துவிட்டால் குழந்தைகளுக்கு எலும்பு என்ற வஸ்து வளராது. என்போன்ற ஆண்கள் அதை எடுத்தும் வைத்துக் கொள்ளத் தெரியாமல் வளைத்தும் நிமிர்த்தும், அசைத்தும் கொடுக்கிறபோது பலங்கொள்ளுகிற பாகங்களே எலும்பாக மாறுகின்றன. இதற்காகத்தான் வலுக்கட்டாயமாக ஆண்களிடம் கைக் குழந்தைகளை ஓரோர் சமயம் கொடுக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

"புண்ணியாக வாசனம்" முடிந்துவிட்டபோது தான் தவறு தெரிந்தது. குழந்தைக்கு ஒருமாதம் ஆகிறபோது என்ன அளவு சட்டை தேவை? அதிகம் பத்துச் சட்டைகள் இருக்கலாம்! கொடுத்த பேர்கள் எல்லோரும் பட்டுச் சட்டை கொடுத்தனர். அத்தனையும் வீண் செலவு. ஒரு சிலர் குழந்தைக்கு பிஸ்கோத்து, பப்பர்மெண்டு பரிசாக கொடுத்தனர். முன்யோசனை உள்ளவர்கள் பிஸ்கட் கடையை வீட்டுக்குத் திருப்பியிருந்தனர். சட்டை துணிமணிகள் தவிர்த்துப் பாக்கிப் பரிசுப் பொருள்கள் குழந்தைக்கு உபயோகமானவை சட்டை துணிமணிகளின் பரிசு எண்ணிக்கைப் பயன்பட வேண்டுமானால், தொடர்ந்து பத்துப் பன்னிரண்டு கைக் குழந்தைகள் மற்றொருவர் வீட்டில் இருக்கவேண்டும்.

குழந்தைக்குப் பெயர் வைத்து அந்தச் சடங்கையும் முடித்து விடுகிறது நல்லதென்று தீர்மானம் வரு முன்னதாகவும், அவனுக்குப் பல பெயர்கள் வந்துவிட்டன. அவரவர்களுக்கு அபிமானமான பெயரை இட்டார்கள். இதனால் முடிவாக ஒரு பெயரைக் கொடுத்துப் பையனுக்கு இம்சை இல்லாது பார்க்க வேண்டுவது தந்தையான என் கடமை.

காந்திமதி எவ்வளவு தெம்பாகவும் பளபளப்பாகவும் தளதளவென வெள்ளரிப் பிஞ்சு போலவும் இருந்தாளோ, அதற்கு எதிராக கத்தரி வற்றலாகப் போகவே என் மனம் திடுக்குற்றது. பிள்ளை பெற்றவர்கள் வற்றிப்போவது இயல்பென்றும், மீண்டும் மூன்று மாதத்தில் பழைய நிலைமைக்கு வருவார்கள் என்றும் தைரியம் ஊட்டினார்கள். இதனால் என் மனசிற்குள் அவனுக்குப் பெயர் "அம்மா உறிஞ்சி" என ஊடாடினாலும் வெளியே அப்பெயரைச் சொல்ல பயம். வெட்கம் வேறு கேடு.

நான் பெயரைப் பற்றி யோசித்த சமயம், குழந்தையின் அழுகுரல் கேட்டதும், "கண்ணனை எடுத்துத் தொட்டியில போடு" என்றேன்.

"அது யாரய்யா கண்ணன்; மூக்கன்; காதன்? நல்லாப் பேர் வைச்சீங்களே மாப்பிள்ளே" என்றார் என் மாமனார்.

"நம்ம தங்ககட்டி ராஜுவைத்தான் கண்ணன் என்று சொல்லுகிறாங்க" என்று விளக்கினாள் காந்திமதி.

"ராஜுவா, சே, சே, நம்ம புளியங்தோப்பு இடக்கியம்மன் கோவிலுக்கு நான் நேர்ந்திருக்கேன். அம்மா நல்லபடியா பெத்துப் பிழைத்தால் உன் பெயரை வாங்கிக் கோன்னு. நீ என்னமோ ராஜு என்கிறாயே?"

"இசக்கியாம், ஏன் உங்கப்பா பேரு இசக்கி. அதுபோல என் பேரனுக்கு இசக்கி என்று பேர் இடணும்?"

எனக்கு அந்தப் பெயர் இ...ச...க்...கி...யென்பது பரமகஷ்டமாக இருந்தது. அவன் குடிக்கும் விளக்கெண்ணெயை நான் குடித்தவனாக முகத்தை வைத்துக்கொண்டு, "அவன் பெயர் கண்ணன்தான்" என்றேன். என் பேச்சுக் குரலை வெளித்திண்ணையில் கேட்ட தந்தை, "யாரு பேருடா கண்ணன்" என்று கேட்டார்.

"இல்லே பேர் உங்க பேருதான். செல்லப்பேர் என்னன்னு தீர்மானம் ஆகலே" என்று என் மாமியார் நிலைமையைச் சமாளித்தாள்.

ஸ்ரீ இரங்காயெனில் "கண்ணன் இசக்கி, ராஜு ஒன்றுமே சரியில்லே. நான் சொல்லும் பெயரே சரி. ரைட். இவனுக்குப் பெயர் கோழி" என்று கூவிக் காட்டினுன்.

எல்லோரும் சிரித்தார்கள், என்னைத் தவிர, "போடா கோழி, குருவி, காக்கை, நண்டு, பீப்பாய் இது ஆங்கிலேயர் வைத்துக்கொள்ளும் பெயர்கள். நாம் அவர்களைப் பின்பற்றலாம்! அவர்கள் வைக்கும் பெயரைப் பின்பற்ற வேண்டாம்" என்றதும், "பொற்கோழி நல்ல பேருடா. காலையிலே விழிக்கிருன் பாரு, கோழி கூவும் வேளையிலே" என்ருன்.

ஸ்ரீ இராங்காயெனில் சொல்லும் தமாஷில், ஊறிப் போன என் மாமனுர், "பொற்கோழியைவிட, அலாரம் டைப்பீஸ் என்று வைக்கலாமே" என்ருர்.

"என் இசக்கியை என்ன சொல்லுறீங்க?"

"இந்தா மீனு, உங்கம்மாவை இனி அந்தப் பெயரை உச்சரிக்கச் சொல்லாதே. நாராசம் ஒரு படியைக் காய்ச்சி ஊத்தின மாதிரி இருக்கு" என்றேன்.

என் தந்தை, "ஏண்டா இசக்கி என்ருல் முழுப்பெயர் தெரியுமா? இசைக்கு ஆடும் பெருமான்-தாண்டவ மூர்த்தி-இசையில் கனிந்த நடராஜன் என்பதின் மறுபெயர் இசக்கி என்று ஆனந்தமாக விளக்கம் செய்தும், எனக்குப் பிடிக்கவில்லே.

"அப்போ" என்று ஆரம்பித்த ஸ்ரீ இராங்காயெனில், "பொற்கோழி இல்லாது போனுல், பூபாளம் என்று வைக்கலாமே. பயல் உதய ராகம்தான் பாடி எழுகிருன்" என்ருன்.

"பூபாளம்" என்று எல்லோரும் சொல்லப் பார்த்தார்கள். குழந்தையின் கிண்டல் பெயருக்குப் பூபாளம்

நல்ல பெயர். அருமைக்கும் செல்லத்துக்கும் பெயர் அது வன்று. கண்ணன்என நாக்குச் சுழலச் சுழலச் சொல்லலாம்; வெண்கல மணியின் நாதம் பெயரில் தொனிக்கிறது. நான் சொல்லி முடிக்குமுன் தாளமாலிகன்; அல்லது சதங் கையன் எனப் பெயர் சூட்டலாம்'' என்றாள் ஒன்றும் புரியவில்லை.

''என்ன மீனு உளறுகிறாய்?'' என அவள் தாயே கேட்டாள்.

''உங்களுக்குப் புரியாது; அவர்களுக்குப் புரியும்'' என ஓரக் கண்ணில் குறும்பு மிதக்க என்னைப் பார்த்தாள்.

''என்ன மீனு? சதங்கையன் என்றால் என்ன?''

''அதுதான் தாளமாலினி என்ற நாட்டியக்காரி நம்மூர் ஓட்டலில் தங்கினாளே அவள் ஞாபகார்த்தமாக இருக் கட்டுமே.''

''சபாஷ்'' என்று துரித காலத்தில் ஒரு ஷொட்டுக் கொடுத்தான் நீ இரங்காயெனில், என் முகத்தில் அசடு வழிந்தது. நான் நாட்டியக்காரியைக் காணும் நோக்கத் தோடு ஓட்டலில் தங்கவில்லை யென்று தெரிந்தும் நாலுபேர் முன்னால் மூக்கையறுத்து விட்டாள் காந்திமதி.

என் முகம் கருத்துப் போவதைக் கண்ட மாமனார், ''என்ன மீனு விளையாட்டாகப்பேச்சு. இது என்ன பேச்சு?'' என்று கடிந்து சொல்லி நிலைமையை சமாளித்தார்.

''சில பேருக்கு பிறந்த வருஷப் பேரையே வைப்பது கூட வழக்கம், அந்த மாதிரி...'' என்றான் நீ இராங்கா யெனில்.

''சே, சே. வருஷமாவது. வருஷப் பேரே கூடாது'' என்றார் என் தந்தை.

வீர ரசத்திலே மோகங்கொண்ட, என் மைத்துனன் ''பிருத்வி ராஜ்'' என்றான். அவனுக்கு வீரன் சிவாஜி, பகவத் சிங், பிருத்வி ராஜன், அக்பர், நெப்போலியன்,

நெல்சன் இம்மாதிரி பெயர்கள் பிடிக்கும். மகமது கோரி யைக்கூட வீரன் பட்டியலில் சேர்த்திருந்தான்!

"அப்பனே பிருத்வி, அப்பு தேயு, வாயு, நெருப்பு... இதுவா பெயர். இதைவிட..." நான் வார்த்தை கிடைக் காமல் திகைத்தேன். நீ இராங்காயெனிலும் மற்றவர் களும் பெயர்களை அடுக்குவதில் இருந்தனர். குழந்தைக்குப் பெயரிடும்போது அது பிற்காலத்தில் மிகவும் பொருத்த மாக இருக்கும்படி அமையவேண்டும். பெயர் பொருத்தம் இல்லாமல் நம்மிடையே பலர் அவதியடைகிற மாதிரி என் கண்ணும் அவதியடையக்கூடாது. என் தங்கை பாலா வந்தவள் "என்ன சொல்லுகிறான், கல்லுளி மங்கன்" என்றாள். இது அவளது பங்குக்கு உரிய பெயர். கல்லுளி மங்கன் என்று பெயர் வைத்தாச்சு!

"சுந்தரத்தைப் போய் கல்லுளி மங்கன் என்றால் எனக்குக் கோபம் வரும் பாலா."

பாலா, "உங்க பெயர்தான் இடணுமா? சுந்தரத்தை நான் கல்லுளி மங்கன் என்றுதான் கூப்பிடுவேன்" என்று சிரிக்கிறாள். என் மாமனார், "விநாயகத்தை அப்படிச் சொல்லாதீங்க. பலவிதத்திலேயும் பார்த்தா விநாயகம் ரொம்ப பொருத்தம். என் பெயருக்காகச் சொல்லலே. முழுமுதற் கடவுளுக்குப் பெயர் விநாயகம். நம் வீட்டிலே இவன் முதல் பிள்ளை. அதனால் விநாயகம் பிள்ளையார் சூட்டாக இருக்கட்டும்" என்று தன் பெயரை, பேரன் தலையில் வைத்தார். என் தந்தையும் தமது பெயரைச் சூட்டினார். ஆகப் போக இருவருக்குள்ளும் தங்கள் பெயரை ஸ்தாபிக்கும் எண்ணம் வேரூன்றி விட்டதை அறிந்தேன்.

"சுந்தரம் என்றால் ஆள் அழகு; குணமும் அழகு. அதனால்தான் சுந்தரம் பொருத்தம்" என்றார்.

"என் மக காந்திமதி அழகுதான் இருக்குது. அதனாலே சுந்தரமாக இருந்தாலும் விநாயகம் என்பதே

பொருத்தம்" என்று சாதிக்கவே, நீ இரங்காயெனில் "முதற் பிள்ளைக்கு விநாயகம். இரண்டாம் பிள்ளைக்கு ஆறு முகம், மூன்றும் பிள்ளைக்கு உங்கள் கிரமப்படி" என்று மடக்கினன்.

என் மாமியார், "நீங்க சும்மா இருங்க" என்று மாமனைக் கண் கொண்டு அடக்கி, "வழக்கம் தகப்பனரின் தகப்பனர் பெயர் இடறதுதான். ஆகவே அந்தத் தாத்தா பெயர் சுந்தரமே சரி. இன்னொரு பேரன் பிறந்தால் உங்கள் பெயர் இடலாம்" என்ருள் மாமியார்.

மனைவி குறுக்கிட்டும், அவர் "விநாயகம் விநாயகம்" என்று கத்துவதை நிறுத்தவில்லை. "அப்பா அவனுக்குத் தூக்கம் வருது. எல்லோரும் திண்ணையிலே போய் உட்கார்ந்து பெயரை யோசியுங்கள்" என்று காந்திமதி உத்தரவிடவே பின் வாங்கினேம்.

"உங்களைமாதிரி அவனுக்கும் தொந்தி விழவேணு மாய்யா" என்று பரிகாசம் செய்தார் என் தந்தை, சம்பந்தியைப் பார்த்து.

"ஆனல் யானை நடை நடப்பானே! போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் செய்வாளே ஒரு கள்ளி" என்று சிரித்தார்.

"ஐயா மீனுவோட அப்பா"

"உம்" என்று திருப்பினர்.

நீ இரங்காயெனில், "நீங்க விநாயகம் என்ற பெயரை வைக்கப்போக பையனுக்குக் கல்யாணம் ஆகாமல் போய் விட்டா அது வேறெ வம்பு; வேண்டாம். விநாயகம் என்ற பேரு" என்று குதர்க்கம் பேசினன்.

"கலியாணம் ஆகும். எனக்கு ஆகலையா?" என்ருர் பெருமையுடன். உள்ளேயிருந்து, "ஆகுமே. என்னை மாதிரி ஒரு பைத்தியக்காரி அகப்பட்டா; வேறெ ஒருத்தி உங்களோடு அஞ்சு நிமிஷம் இருந்திட முடியுமா?" என்று

கேட்டபோது விநாயகம் என்ற பெயரிலே நரசிங்கமும் இருக்கக் கண்டேன்.

"நிறுத்து உன் பேச்சை" என்று இரைந்தார். எல்லோரும் கலங்கிவிட்டோம். அதாவது பொய் கோபம் என்பதை அறிந்துகொண்டவர்கள் காந்திமதியும் அவள் அம்மாவுந்தான்.

"ஏன் கோபம் வருது, உள்ளத்தைச் சொன்னால், உங்க குரலே சொல்லுதே யானை பிளிறுவதுபோல" என்றாள் மாமியார். விநாயகத்தின் குரல் யானைப் பிளிறல்தானே.

"பயலுக்கு வருஷப் பெயர் இடலாமென்றால், நல்ல வேளைதான், வெகுதான்ய நந்தன இல்லாமல் விஜய வருஷத்திலே பிறந்தான். விஜயன் விஜய் இரண்டும் அருமையான பெயர். என் சிநேகிதர் இப்படித்தான் பாருங்கள் ஆனந்த வருஷத்தில் பிறந்த பையனுக்கு ஆனந்தன் என்றார். அப்பாலே பெயர் இடுவதற்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்."

"எதற்கு முற்றுப்புள்ளி? வருஷத்துக்கா? பிள்ளைக்கா?" என்றேன்.

"நண்பருக்கு பெயர் வைக்கும் கஷ்டமில்லாமல் குழந்தை பிறக்கலாம். மறு குழந்தைகூடப் பிறக்கலாம் ஆனால் மறு வருஷம் பிறந்ததுபெண்."

"அதற்கும் வருஷப்பெயர் வைக்கலாமே"

"அந்த வருஷம் ராக்ஷஸ வருஷம். தம் மகளுக்கு அப்பெயர் வைப்பதை நிறுத்திவிட்டார்" என்றதும் என் மாமனார் மாமியாரைப் பார்த்து "ஏனம்மா மீனா? உன் அம்மா பிறந்தது அந்தவருஷந்தானே? உன் அம்மாவுக்குப் பொருத்தமான பேர் அதுதான்" என்றார்'

"நீங்கள் பிறந்தது விரோதியா இருக்கணும்" என்றாள் மாமியார்.

இவ்வாறு சண்டை எழவே, வருஷப் பேரே வேண்டா மென முடிவு செய்தோம். முடிவிலே, வந்தவள் என் அம்மா "தாத்தாவிலே எந்தத் தாத்தா சாயல் இருக்கிறதோ அந்தப் பெயர் இடலாம்" என்ருள்.

"சுந்தரம் என்று பெயர் இட நல்ல வழி கண்டு பிடித்தாய்" என்று பாராட்டினுர் அப்பா.

"இப்போ என்ன சாயலே கண்டுபிடிக்கிறது? பயல் வளர்ந்தால் அல்லவா சாயல் தெரியும்" என்று வாதுக்கு நின்ருர் மாமனுர்.

"அதுவரை பெயர் வேண்டாமா?"

"வேண்டும் வேண்டும் வேண்டும்" என எல்லோரும் ஆமோதித்தோம்.

"சாயலாவது மண்ணுங்கட்டியாவது. ஒருத்தரிடம் 'பையன் யாரு சார் உங்கள் பேரனு?, என்று கேட்டால், கடைக்குட்டி பையன் என்கிருர்! இன்னெரு அம்மாளிடம் 'இந்தப் பிள்ளை உன்னையே உரிச்சி வைச்சுருக்கு' என்று சொல்லப்போக, இது என் தத்துப் பிளளையம்மா என்ற பதில் வந்ததாம்.ஆகவே சாயல் வேண்டாம். தாத்தாக்களும் சண்டைபோடவேண்டாம்" ...எனபதாக நீ இரங்காரெனில் விளக்கம் சொல்லி வந்த தோரணையில் என் மூளையில் ஒளி மின்னிற்று.

"விநாயக சுந்தரம்" என்றேனே இல்லையோ, என் மாமனுர் துள்ளிக் குதித்தார், சிறு பிள்ளைபோல என் முதுகைத் தட்டியவர், "பேஷ், பேஷ் மாப்பிள்ளை பேஷ், இன்னெருபெண் இல்லையே?" என்று தம்மகிழ்ச்சியைக்காட்டினுர். என் தலையில் ஒரு மகளைக் கட்டியது போதாதா? அவருக்கு அத்தனை மகிழ்ச்சி. நான் முன்பின் யோசிக்காமல் இரு பெயர்களையும் முன்னுள் நாவலாசிரியர்கள் பெயர் வைப்பது போலச் சொன்னதில் மகிழ்ச்சி. ஆனல் என் தந்தையின் பெயர் இருந்ததில் மகிழ்ச்சி; இடம்மாறி இருந்தது

தான் பிடிக்கவில்லை. ஆகவே, அவர், "சுந்தர விநாயகம்" என்று சொன்னார்.

"ஆமாம் சுந்தர விநாயம்" என்றேன்.

"சே, சே. விநாயக சுந்தரம் என்பதிலே உள்ள சுகம் இதிலே இல்லை" என மறுத்தார் மாமனார்.

"அப்போ இனிமேல் இசக்கியின் பேரு என்ன?"

"சுந்தர விநாயம்"

"சே, சே. விநாயக சுந்தரம்"

"சுந்தர விநாயகந்தான்."

"விநாயக சுந்தரமே"

இவ்வாறு இருவரும் கத்தத் தொடங்கவே, தூங்கிய குழந்தை அலறவும், "பூபாளம் பேரு என்ன?" என்றான் நீ இரங்காயெனில்

சொல்லிப் பார்த்த சமயம், "தப்பு. சுந்தர விநாயகம் எனச் சொல்" என்றார் தந்தை.

என் அம்மா "இது என்னத்துக்கு அவங்க அவங்களுக்கு இஷ்டமான பெயர் சொல்லுங்க" என்று மத்தியஸ்தம் செய்து வைத்தவள் "திருட்டு நாய் அழறதைப் பார்" என்றபெயரைச்சூட்டினாள்.வீட்டிலேபலர் பலநாமகரணம் செய்தார்கள். கடவுளுக்குத் திருநாமம் பல இருந்தாலும் ஒருவனே என்ற தத்துவப்படி பல பெயர்கள் எழுந்தன. எது நிலைக்குமோ யார் கண்டது? கண்ணன், ராஜா பூபாளம், பொற்கோழி. சுந்தர விநாயகம், விநாயக சுந்தரம் கல்லுளி மங்கன், திருட்டுப் பயல், பிருத்விராஜ் என்று பயலைக் கூப்பிட்டார்கள்.

வள்ளி சொல்லிய பெயர்தான் எல்லாவற்றிற்கும் மேலான ப்பெயர்கள். "சின்ன எஜமான்" என்றும் "கண்ணுட்பயல் சிங்கக்குட்டி" என்றும் பெயர் இட்டாள். பெயரில் என்ன இருக்கிறது என்ற ஷேக்ஸ்பியர் கண்ணனை

அழைக்கும் நாமகரணங்களைக் கேட்டால் உண்மையில் திண்டாடிப்போவார். குசேலர் வீட்டைப் போல 27 குழந்தைகள் என் வீட்டில் இல்லாவிட்டாலும் ஒரே குழந் தைக்கு 27 திருநாமம் இருந்த அதிசயத்தை வேறெங்கும் கண்டிருக்க முடியாது!

## 10. வியாதியும் வியாதியும்

மதலையைப் பெறுநாள் துன்பம்
வளர்த்திடும் நாளும் துன்பம்
விதலை நோய் அடையில் துன்பம்
வியன் பருவத்தும் துன்பம்
கத முறக் காலர் வந்து
கைப்பற்றில் கணக்கில் துன்பம்
இதமுறல் எந்நாள்? சேயால்
என்றைக்குந் துன்ப மாமில்.

—பழம் புலவர் பாடல்

குழந்தை பிறந்து மூன்று மாதம் ஆவதற்குள், இந்தப் பாட்டைப்பாடும் அளவிற்கு என்பாடுவந்துவிட்டது கண்டு வாசகர்கள் சிரிக்கலாம். மகாத்மா காந்தியே என் கண்ணன் பயலைக் கண்டால் தமது வாசகத்தை மாற்றிக் கொள்வார்; அஹிம்ஸை முறை வேண்டாமென்று உலகத்திற்குப் பிரகடனம் செய்தாலும் ஆச்சர்யப்பட வேண்டும். "குழந்தைகளுடன் கலந்து கொள்ளுவதில் இருந்த இன்பம் வட்ட மேஜை மகாநாட்டில் கலந்து கொண்டதில் இல்லை" என்ற சொற்களை மாற்றிச் சொல்லியிருப்பார் காந்திஜீ. அரசியலைவிட குழந்தை இன்பம் மேல் என்று காந்திமகான் சொல்லிவிட்டார்; அரசியலைவிட அத்தனை ஆர்ப்பாட்டம், தம்பட்டம், குளறுபடி, உள்ளொன்று வைத்து வெளியொன்று வேஷம் போடுவதில் குழந்தையான இவன் எமப் பயல்.

இவனை நம்பி ஒரு காரியத்தில் இறங்கி அவமானம் அடைந்தேன்; பெரியகாரியமா? ஒன்றுமில்லை. சுண்டுவிரலை ஒரு அடிக்கு அப்பால் வைத்து 'கொன்னு போடுவேன்

கொன்னு' என்றால் வயிறு குலுங்கக் குலுங்கச் சிரிப்பான். முகம் அன்றலர்ந்த செந்தாமரையாகமலரும். சிரிப்பு, முகங் கொள்ளாது. அத்தனை மருட்சியும் மயக்கமும் தரும்படி கண்கள் சுடர்விடும். இவ்வகை விளையாட்டை நான் செய்து வருவதைக் காந்திமதி தடுத்தாள். 'கொன்னு விடுவேன் கொன்னு' என்று ஆரம்பிக்கிறது சுடு சொல் என்றும், அதைச் சொல்லக் கூடாதென்றும் கட்சி கட்டிவிட்டாள், இவ்வார்த்தைகள் தவிர்த்து வேறு எதைச் சொன்னாலும் அவன் சிரிக்கமாட்டான். குழந்தையைத் திருட்டுப் பயலே, முட்டாள் பயலே, கள்ளப் பயலே, போக்கிரிக் கழுதை யென்றும் கொஞ்சுகிறோம். அத்தோடு 'கொன்னு போடு வேன் கொன்னு' என்று சிரிப்புக் காட்டுவதும் ஒன்றென நான் வியாக்யானம் செய்தேன். நான் எந்தவேளையில் சுட்டு விரலை உயர்த்தி இதைச் சொன்னாலும் சிரிப்பான்.

என் நண்பர் வந்த சமயம் மூன்று மாதக் குழந்தை யின் புத்திசாலித்தனம், என் கெட்டிக்காரத் தனத்தால் பழக்கிய சாதுர்யம் இரண்டையும் காட்டுவதற்கு விரலை உயர்த்தி, "கொன்னு போடுவேன் கொன்னு" என்றதும் அந்தக் கல்லுளி மங்கன் மண் பொம்மையாகக் கிடந்தான். நண்பரிடம் அவன் சிரிப்பு வெண்கல மணியோசையாகும், முகம் செந்தாமரையாக மலரும் என்று வாய் கிழிய வர்ணித்தது அத்தனையும் பொய்யாகிப் போனதோடு, என் முகத்திலும் கரியைப் பூசிவிட்டான். இவன் தந்தை என்னேற்றான் கொல் என்னும் சொல்லுக்கு இப்போதே அஸ்திவாரம் போட்டுவிட்டான். நண்பர், "பாவம் சின்னப் பயல் அவனை விட்டுவிடுங்கள்" என்றார். எனக்கு ஆத்திரம் வந்தது.

நண்பர் போய்ச் சேர்ந்ததும், உண்மையிலேயே வெகு கோபத்தோடு "உதைப்பேண்டா பயலே" என்றதும் அவன் வானமே குலுங்கச் சிரித்தான். சுத்தப் போக்கிரிப் பயல். இவனை நம்பி எந்தக் காரியமும் நாம் செய்யக்

கூடாது என்று முடிவு கட்டினேன். மருந்து விஷயங்களில் அவ்வாறு முடியுமோ?

அவனுக்கு விளக்கெண்ணெய் கொடுக்கலாம், கொடுக்கக்கூடாது என்று இருகட்சி; எந்த மாதிரி விளக்கெண்ணெய் என்றெல்லாம் கட்சிகள் வளரும். இந்நாளில் பேதி மருந்துக்குச் சொல்லவேண்டியதில்லை. பல கம்பெனிகள் குழந்தைகள் டானிக், குழந்தைகள் மாந்தம், பாலர்கள் ஔஷதம், பாலர் மாந்தம், பாலகர்கள் கட்டி என்றே பறை சாற்றுகின்றன. பெரியவர்களுக்கு உரிய மருந்துகளைவிட, குழந்தைக்குக் கொடுக்கப்படும் மருந்துகளுக்குக் கிராக்கி அதிகம். பெரியவர்கள் தங்கள் நோயைத் தாங்கும் சக்தியுடையவர்கள். குழந்தைகள் நோய்க்கு ஆளாகிவிட்டால் அவைசொல்லவும்முடியாது;ஓயாத அழுகையும்ரோதனமும் ஏற்படும். பணத்தை ஒட்டாஞ்சல்லியாக மாற்றி டாக்டருக்கும் மருந்துக்கும் வீசுவது பெற்றோர் கடமையாகிவிட்டது. தொல்லையில்லாதிருக்கவும் குழந்தைகளைக் கவனிப்பது அவசியமாகிவிடவே ஒவ்வொருத்தர் வீட்டிலும் பேதி மருந்து முதல் கக்குவான் வரை எத்தனை வில்லைகள், வேர்கள், கஷாயங்கள்! திரவ ரூபத்தில் மருந்துகள் எத்தனை எத்தனை கோடி உண்டோ அத்தனையும் இருக்கும். எங்கள் வீட்டில் குழந்தை மருந்துக்கென எத்தனை அலமாரிகள் இருக்கின்றன தெரியுமோ? கஸ்தூரி, கோரோஜனை மாத்திரைகள் வகைக்குச் சொல்லிமுடியாது. ஆயுர்வேத யூனானி சித்த வைத்தியம் முதல் ஆங்கிலேய டாக்டர் ஊசி மருந்து வரை எல்லாம் பார்த்தாகிவிட்டது. குழந்தைகளுக்குத் தும்மல் வந்தாலும் கஷ்டம் வராவிட்டாலோ, "எண்ணெய் தேய்த்துக் குளித்தும் தும்முவானே; இன்று தும்மவில்லையே. என்னமோ ஏதோ?" என்று கலங்குவாள். உடனே ஓடு, வைத்தியர் வீட்டுக்கு. அவர் மருந்துக் கடைக்கு விரட்டுவார். பணம் மருந்தாகும்; குழந்தையின் உடம்பில் மருந்து சமாதியாகும்.

மதலையைப் பெறும் நாளில்பட்ட துயரங்களைவிட, வளர்த்திடும் நாளில்ஏற்படுகிற துன்பம் பெரிது. இதைவிட விதலை நோய் அடையும் நாளில் ஏற்படும் துன்பம் இன்னும் பெரிது என்பதை நான் அறிந்தேன். இத்தனைக்கும் பழமொழி சொல்லுகிறபடி "நாலு மாதம் நாய் கூட பிள்ளை வளர்க்குமாம்" அதாவது குழந்தைக்கு அறிவு உதயமாகாத காலம். பசித்தால் அழுவது, தூக்கம் வந்தால் தூங்குவது என்ற இரண்டைத் தவிர, வேறு தேவையே கிடையாத பருவம் இது. நாய்கூட நாலு மாதம் வரை குழந்தை வளர்க்கும் என்கிறார்கள்.

கண்ணன் விஷயம் இதற்கு மாறானது.

ஒரு வியாதி யென்றால் என் தாயாருக்குள்ள இஷ்டத்திற்காகத் தமிழ் முறையில் வைத்தியம் நடக்கும்; தகப்பனார் இஷ்டத்திற்காக யூனானி. காந்திமதிக்குள்ள இஷ்டத்திற்காக இங்கிலீஷ் முறை; அவளது அம்மாவின் திருப்திக்காக மாந்திரீகம், தண்ணீர் ஓதி எறிதல் ஆகியவை நடைபெறும். எந்த வியாதிக்கும் மருந்து வகைகள் பல; வியாதியைக் குறித்து விளம்பரம் செய்யப்படுகிற மருந்துகள், அக்கம் பக்கத்து விட்டார் அனுபவப்பட்டு சிபார்சு செய்கிறவை, நண்பர்கள் மருந்து பற்றிச் செய்யும் சிபார்சு முறைகள் இவை இவையென்று ஒரே வியாதிக்கு மருந்துகள் பல வாங்கி வைத்திருக்கிறேன். இவ்வாறு பல மருந்துகளைக் கொடுப்பது தவறு; ஆயினும் ஏதாவது ஒரு மருந்தினால் வந்த வியாதி குணமாகிவிடும் என்று நம்பிக்கை இருக்கிறதே!

குழந்தைக்குக் காலாகாலத்தில் பாலும் கொடுத்து ஓய்வும் கொடுத்து விட்டால் வியாதி வராது என்கிறார்கள். தாய்க்குத்தான் வியாதி வரலாம்; வந்தால் அவை பால் குடிக்கும் குழந்தையைப் பாதிக்கும் என்கிறார்கள். உண்மை. காந்திமதியை எந்த வியாதிக்கும் மருந்து சாப்பிடச்

சொல்ல முடியாது. ஆகவே, குழந்தைக்குத்தான் சதா மருந்துகள் கொடுத்தாகவேண்டும்.

குழந்தை, மருந்தையும் வியாதியையும் சமமாகப் பாவிக்கிறது. அதற்குப் பாலும் தூக்கமும் ஒன்றே. ஆனால், அழுகை மட்டும் எதற்காக என்பதை என்னால் இன்றும் அறிய முடியவில்லை. அதன் அழுகைக்குப் பல அர்த்தங்களைக் காந்திமதி சொல்லுவாள். தூங்கவும் அழுகை, தூங்கி எழுந்தும் அழுகை, உண்ணவும், உறங்கவும் அழுகை, அழுகை. முன்பு ஒலி பெருக்கி வாங்கி இதன் குரலை அக்கம்பக்கத்தாருக்குப் பரவவிட நினைத்தேனே, அது எவ்வளவு பெரிய தவறு. ஒலி பெருக்கி இல்லாமலேயே பீரங்கிக் குரலில் அக்கம்பக்கத்தார் காதுகளில் தாக்கும் படியான குரல் வலிமை அமைந்துவிட்டது.

வேலை செய்யாத கள்ளிக்குப் பிள்ளை மேலாகப் பிணை என்ற பழமொழிக்கு சாக்ஷாத் காந்திமதியே உருவம். கண்ணன் பயலை மடியிலே வைத்துக்கொண்டு, காலத்தைப் போக்கிவிடுவாள். சமய சந்தர்ப்பத்தில் என் வேலையும் கெடும்.

"அடுப்பில் வெந்நீர் கிடக்கிறது. ஒரு செம்பில் கொண்டு வாருங்கள். குழந்தை மடியில் இருக்கிறது" என்ற உத்திரவு வரும்.

நான் பேசாது இருப்பேன். "குழந்தையைத் தூங்க வைத்துவிட்டு சமையல்செய்ய வேண்டும்" என்று ஆரம் பித்தால் அதன் பொருள் இதுவே. குழந்தைக்கு சுத்தம் செய்ய தண்ணீர் கொண்டு வராவிட்டால், 'உனக்குச் சாப்பாடு கிடையாது. ஏகாதசி விரதத்தோடு ஆபீஸ் போ' என்று அர்த்தம். சொல்வனவற்றைச் செய்து முடிக்கிறேன்.

மீண்டும் "பாலாடையை எடுங்கள்" என்பாள்.

"நீ முன் கூட்டியே பாலாடை, சீனிபாட்டில், கரண்டி, கெண்டி, அதன்பின் வாய் சுத்தம் செய்ய வெந்நீர்,

கைதுடைக்கத் துண்டு இத்தனையும் எடுத்து வைத்துக் கொண்டு உட்காரவேண்டும்''

''இவன் எங்கே விடுகிறான்? கீழே கிடக்கிறானா? பாலாடையை எடுங்கள். நாளைமுதல் நானே எல்லாம் எடுத்துக் கொண்டு உட்காருகிறேன்.'' என்பாள்.

''நீ என்றைக்குத்தான் செய்வாயோ?'' என்று சொல்லி மாடியிலிருந்து இறங்கிவந்து எடுத்து வைத்துவிட்டுப் போவேன். பிறகு ஏதாவது வேலைவரும். அதாவது அவனுக்குச் சேவகனாகவும், அவளுக்கு கையாளாகவும் என்னை ஆக்கிக் கொண்டிருந்தார்கள்.

''சட்டையை எடுங்கள்; பனிக் குல்லாவைக்கொண்டு வாருங்கள்; பவுடர் டப்பாவை எடுங்கள்'' இவ்வாறு எதையாவது எடுக்கச் சொல்வதும் எனக்குக் கோபம் வருவதும் சகஜமாகிவிட்டது.

''ராணி மாதிரி அதிகாரம் செய்துகொண்டு இருந்த இடத்தைவிட்டு அசையாமல் ஆடாமல் கொட்டம் அடிக்கிறாயா?''

''கேளுடா கண்ணு. உங்கப்பாதான் உழைக்கிறாங்களாம். நீயே கேளு.''

''போதுமே கொஞ்சல்''

''சரி. நீங்கள் இவன் பக்கமே வரக்கூடாது'' என்பாள். எனக்கு எதனால் கோபம் வருகிறது? குழந்தைக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துவிட்டு அதனைச் சுத்தமாகக் குளிப்பாட்டி பவுடர் போட்டு அழாமல் சிரிக்கும் போது என்னிடம் கொண்டுவந்தால் நானும் சிரிப்பேன். சிரிக்க வைப்பேன். பணிவிடையும், பாதுகாப்பும் செய்வதில் பங்கு கொள்ளச் சொன்னால் எரிச்சல் வருவது சகஜம்தானே. எனது ஆபீஸ் வேலையை இடுப்பொடிய எழுதிக்கொண்டு இருக்கும்போது குழந்தையை குளிப்பாட்ட உட்கார்ந்தவள், ''கொஞ்சம் வாசனைத் தூளும்

தலை துவட்டத் துவாலைத் துண்டும் எடுத்து வாருங்கள்" என்றால் நான் சொல்லும் பதில் என்ன?

"இதோ விறகுக் கட்டையை எடுத்து வாரேன். அப்போதான் சும்மா இருப்பாய்."

"விறகுக்கட்டை கொண்டு வருகிற கையோடு வாசனைத் தூளும் எடுத்து வரலாமே" என்பாள். நான் சிரிக்கவா? அழவா? நான் வாசனைத்தூள் எடுத்துப்போனால் "அடுப்பிலே சூடான வெந்நீர் இரண்டு செம்பு கோரி வாருங்கள்" என்பாள். எடுத்துக் கொடுத்தால் "சிறிது சாம்பிராணி தூள் தட்டி எடுத்து வாருங்கள். அத்தோடு நெருப்புத் தணலை ஒரு தட்டில் போட்டு இங்கேயே எடுத்து வந்து விடுங்கள். இவ்வளவுதான்" என்பாள்.

என்னுடைய சட்டை, டவல், அங்கவஸ்திரம்கூட குழந்தை மெத்தெனப் படுத்திருக்கும் கைங்கர்யத்தைச் செய்யப் போய்விடும். சிறு குழந்தைகள் படுத்திருக்கும் துணியில் உள்ள நிற பேதங்கள், வாசனைகள் சொல்லுக்கு அடங்கா. இது குடும்பஸ்தர்களுக்குத் தெரியும்.

"உனக்கு மூளை இருக்குதா. ஏன் எப்படி என் துணி மணிகளை எடுத்துப் போட்டே?"

"அடடா, எம்பிள்ளைக்கு மட்டும் பதில் பேசத் தெரியணும், அப்போ உங்களுக்கு நல்ல பதில் சொல்லும்"

"நான் உன்னைத்தான் கேட்டேன்"

"மூளை இருக்குதா"

இந்த வேளைபார்த்து மாமனார்வந்து சேர்ந்தார். மகளை நான் கோபிப்பதாக எண்ணிக்கொண்டு, "என்ன மாப்பிள்ளை என்ன கூச்சல்?" என்பார்.

"அப்பா, இந்த ராஜு பயலுக்கு மூளை இருக்கா இல்லையான்னு இவனோட அப்பாவுக்குச் சந்தேகம்" என்று பாதையைத் திருப்புவாள்.

"நான் உன்னைக் கேட்டேன்" என்று கத்துவேன்.

"என்னைப் பக்கத்திலே வைச்சுக்கொண்டு எம்மகனைப் பார்த்து இந்தக் கேள்வி கேட்கலாமா?"

"பின்னே என்ன பாருங்க, மாமா. என் வேஷ்டி துணிமணி, அங்கவஸ்திரம் இதுவா பையனுக்கு மெத்தை விரிப்புத் துணி! அவனுக்குத்தான் அகலமான ரப்பர் ஷீட் வாங்கி இருக்குதே"

"இருக்குது, யார் இல்லை யென்று? தனி ரப்பர் சூடு. அதிலே ஒரு துணி போடவேண்டாமா" என்பாள்.

"உன் புடவையை எடுத்துப் போடணும்" என்று எகிறிப் பாய்வேன்.

"மாப்பிள்ளை நான் சொல்லுகிறேன். குழந்தை குட்டிகளுக்குப் பழந்துணி வேணும் என்பதற்காகத்தான் நம்மை ஆண்களை பட்டும் பட்டாடையும் சில்க்கும் எடுக்க விடுவதில்லை பெண்கள். அவர்களிடம் குழந்தைக்குப் போடுவதற்குப் பழந்துணி ஏது? அவர்கள் வைத்திருப்பன எல்லாம் பட்டுப் புடவைகள். ஆகவே தகப்பனுர் கிழித்த துணிதான் குழந்தையின் முதற் சொத்தாக இருக்கிறது. பிறகு தகப்பனுருக்குக் கிழிந்த துணியே முழுச் சொத்தாகி விடும்" என்று சிரித்தார். அனுபவமான உண்மை இது.

'என்னமோ மாமா என் உடமைகள் பறிபோகிறதையும், நான் படுகிற சிரமத்தையும் ."

"ஆமாம் மாப்பிள்ளை. குடும்பம் என்றுல் இதுதான். பிள்ளைகள் பிறப்பது நம்முடைய உடமையைக் குறைக்க; ஆனல் உள்ளத்தை மகிழ்விக்க" என்றூர்.

நாளொரு மருந்தும் பொழுதொரு வியாதியுமாக வளர்ந்து, பல டாக்டர்களையும் பணக்காரன் ஆக்கிக் கொண்டிருந்தான் கண்ணன். சில சமயம் யாராவது "ஏன் சார் உங்கள் பயல் உங்களை மாதிரி இல்லை. அம்மா போல" என்பார்கள். வேறு சிலர் "அம்மா மாதிரி இல்லை அப்பா மாதிரி" என்பார்கள். என் கண்களுக்குச் சில நாள்

என்னைப்போலும், வேறு சில நாட்களில் காந்திமதிபோலும் தோற்றம் தருவான். ஆங்கில உலகம் புகழும் டிக்கென்ஸ், "தாயின் நற்குணங்களும் தந்தையின் பாவங்களும் குழந்தைகளிடம் வருகின்றன" என்று சொல்லியதை நினைக்கும்போது என் நெஞ்சம் திக்கென்று அடிக்கும். நான் சில சமயம் குழந்தையால் மகிழ்ச்சியும், சில சமயம் கோபமும் கொள்ளுகிறேன். ஆனால் காந்திமதிக்குக் கோபமே வருவதில்லை. அது அழுதாலும் சிரித்தாலும் அதைப் பாராட்டுவதும் சீராட்டுவதும் பொட்டிடுவதும் சிங்காரிப்பதுமாகவே இருக்கிறாள். பெண்களுக்குச் சகிப்புத் தன்மை உண்டென்பதைக் குழந்தை வளர்ப்பு வழியே அறியலாம். சிறுபான்மையினரே, பெரும்பான்மையினரை ஆட்டிப்படைக்க முடியும் என்பதற்குக் குழந்தைகளே சான்று.

குழந்தை குப்புற வீழ்வதைக் காண்பதிலே எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா? குப்புற வீழ்வதையும் தலை தூக்க முடியாமல் தத்தளிப்பதையும், ஆயுள் முழுவதும் பார்த்துக் கொண்டிருக்கலாம். எங்கே நேரம் இருக்கிறது? ஆபீசில் நம்மை புரட்டிக் கொடுக்கத்தான் மேலானவன் ஒருவன் இருக்கிறானே. ஆகவே நான் கொடுத்து வைக்காதவன். காந்திமதி கொடுத்து வைத்தவள். குழந்தை தவழ ஆரம்பித்தால், ஓடுகிற பாம்பை பிடிக்கிற மாதிரி. தவழத் தெரியும் வரை போட்ட இடத்தில் கிடக்கிற மண் பொம்மை. ஒரு அனுபவஸ்தர் "குழந்தையிடம் அதிகமாய்பாசமும் ஆசையும் காட்டித்தான் நோயை உண்டாக்குகிறார்கள். சதா குழந்தையைத் தூக்கி வைத்துக் கொஞ்சினால், வளர வளர அது தன்னை எடுத்து வைத்துக்கொள்ளச் சொல்லியழும். குழந்தையின் உடம்புக்கு வலி தரும்படியோ, சுகந்தரும்படியோ பழக்கங்களைச் செய்துவருவது தவறு" என்றார்.

இதை நாங்கள் வெகுவாக வரவேற்றோம். பின்னர் பையனை அதிகமாக கையில் வைப்பதோ, எடுத்து இடுப்பில்

இடுக்கிச் சுகம் கொடுப்பதோ கிடையாது. வியாதியும் பறந்துவிட்டது; குழந்தை மொழு மொழுவென வெண்ணெய்க் கட்டியாக, மூக்கும் முழியுமாக இருந்த சமயம், எல்லாக் குழந்தைகளுக்கும் வருகின்ற ஆபத்து அதற்கும் வந்தது.

"இதுதானு மணியின் வீடு" என்று ஒரு குரல் கேட்டது.

"ஆம்"

"இங்கே குழந்தையிருக்கிறதா?"

"யாரய்யா நீ?"

"இருக்கிறதா இல்லையா?"

"இருக்கிறது. உனக்கென்ன?"

"பிடியுங்கள். இந்த நோட்டீஸைப் பிடியுங்கள்" என்றான். படித்துப் பார்த்தால், முனிசிபாலிடியார் அனுப்பியிருந்தார்கள். என்னை, ஏதோ ஒரு செக்ஷன்படி பிராசிக்கூயூஷன் ஏன் செய்யக்கூடாதென்று கேட்டிருந்தார்கள்? குழந்தைக்கு அம்மை வைக்கத் தவறிய குற்றத்திற்காக முனிசிபல் ஆபீசில் ஹெல்த்ஆபீஸர் முன் ஆஜராகும்படியும் ஆக்ஞை இட்டிருந்தார்கள்.

"ஐயோ என்ன செய்கிறது?" என்று காந்திமதி பயந்தாள். நானும் திடுக்கிட்டேன். எனக்கு அம்மை குத்தியதாலேயே உடம்பு பலஹீனம் ஆகிவிட்டதென்று என் தந்தையார் அடிக்கடி சொல்லுவார். பொதுவாகப் பிள்ளைகளைப் பெற்றவர்களுக்குப் பிடிக்காத பொது விரோதி இந்த அம்மைக் குத்துகிறவர்கள். அம்மைகுத்திய பின்னர் பிள்ளைகள் இளைத்துத் துரும்பாகி விடுவதும் உண்மைதான்.

"இதற்காக அழுவானேன்?" என்றாள் காந்திமதி.

சம்மன் சார்பு செய்த வார்டு சேவகன் "அதுக்கென்ன சார். டாக்டர் ஸர்டிபிகேட் வாங்கிக் கொடுத்துவிடுங்கள்." என்றான். அப்பாடா கவலைவிட்டது. எங்கள் கண்ண

தலை துவட்டத் துவாலைத் துண்டும் எடுத்து வாருங்கள்" என்றால் நான் சொல்லும் பதில் என்ன?

"இதோ விறகுக் கட்டையை எடுத்து வாரேன். அப்போதான் சும்மா இருப்பாய்."

"விறகுக்கட்டை கொண்டு வருகிற கையோடு வாசனைத் தூளும் எடுத்து வரலாமே" என்பாள். நான் சிரிக்கவா? அழவா? நான் வாசனைத்தூள் எடுத்துப்போனால் "அடுப்பிலே சூடான வெந்நீர் இரண்டு செம்பு கோரி வாருங்கள்" என்பாள். எடுத்துக் கொடுத்தால் "சிறிது சாம்பிராணி தூள் தட்டி எடுத்து வாருங்கள். அத்தோடு நெருப்புத் தணலை ஒரு தட்டில் போட்டு இங்கேயே எடுத்து வந்து விடுங்கள். இவ்வளவுதான்" என்பாள்.

என்னுடைய சட்டை, டவல், அங்கவஸ்திரம்கூட குழந்தை மெத்தெனப் படுத்திருக்கும் கைங்கர்யத்தைச் செய்யப் போய்விடும். சிறு குழந்தைகள் படுத்திருக்கும் துணியில் உள்ள நிற பேதங்கள், வாசனைகள் சொல்லுக்கு அடங்கா. இது குடும்பஸ்தர்களுக்குத் தெரியும்.

"உனக்கு மூளை இருக்குதா. ஏன் எப்படி என் துணி மணிகளை எடுத்துப் போட்டே?"

"அடடா, எம்பிள்ளைக்கு மட்டும் பதில் பேசத் தெரியணும், அப்போ உங்களுக்கு நல்ல பதில் சொல்லும்"

"நான் உன்னைத்தான் கேட்டேன்"

"மூளை இருக்குதா"

இந்த வேளைபார்த்து மாமனார்வந்து சேர்ந்தார். மகளை நான் கோபிப்பதாக எண்ணிக்கொண்டு, "என்ன மாப்பிள்ளை என்ன கூச்சல்?" என்பார்.

"அப்பா, இந்த ராஜூபயலுக்கு மூளை இருக்கா இல்லையான்னு இவனோடை அப்பாவுக்குச் சந்தேகம்" என்று பாதையைத் திருப்புவாள்.

"நான் உன்னைக் கேட்டேன்" என்று கத்துவேன்.

"என்னைப் பக்கத்திலே வைச்சுக்கொண்டு எம்மகனைப் பார்த்து இந்தக் கேள்வி கேட்கலாமா?"

"பின்னே என்ன பாருங்க, மாமா. என் வேஷ்டி துணிமணி, அங்கவஸ்திரம் இதுவா பையனுக்கு மெத்தை விரிப்புத் துணி! அவனுக்குத்தான் அகலமான ரப்பர் ஷீட் வாங்கி இருக்குதே"

"இருக்குது, யார் இல்லே யென்று? தனி ரப்பர் சூடு. அதிலே ஒரு துணி போடவேண்டாமா" என்பாள்.

"உன் புடவையை எடுத்துப் போடணும்" என்று எகிறிப் பாய்வேன்.

"மாப்பிள்ளை நான் சொல்லுகிறேன். குழந்தை குட்டிகளுக்குப் பழந்துணி வேணும் என்பதற்காகத்தான் நம்மை ஆண்களை பட்டும் பட்டாடையும் சில்க்கும் எடுக்க விடுவதில்லை பெண்கள். அவர்களிடம் குழந்தைக்குப் போடுவதற்குப் பழந்துணி ஏது? அவர்கள் வைத்திருப்பன எல்லாம் பட்டுப் புடவைகள். ஆகவே தகப்பனார் கிழித்த துணிதான் குழந்தையின் முதற் சொத்தாக இருக்கிறது. பிறகு தகப்பனாருக்குக் கிழிந்த துணியே முழுச் சொத்தாகி விடும்" என்று சிரித்தார். அனுபவமான உண்மை இது.

'என்னமோ மாமா என் உடைமைகள் பறிபோகிறதையும், நான் படுகிற சிரமத்தையும் ."

"ஆமாம் மாப்பிள்ளை. குடும்பம் என்றால் இதுதான். பிள்ளைகள் பிறப்பது நம்முடைய உடைமையைக் குறைக்க; ஆனல் உள்ளத்தை மகிழ்விக்க" என்றார்.

நாளொரு மருந்தும் பொழுதொரு வியாதியுமாக வளர்ந்து, பல டாக்டர்களையும் பணக்காரன் ஆக்கிக் கொண்டிருந்தான் கண்ணன். சில சமயம் யாராவது "ஏன் சார் உங்கள் பயல் உங்களை மாதிரி இல்லே. அம்மா போல" என்பார்கள். வேறு சிலர் "அம்மா மாதிரி இல்லே அப்பா மாதிரி" என்பார்கள். என் கண்களுக்குச் சில நாள்

என்னைப்போலும், வேறு சில நாட்களில் காந்திமதிபோலும் தோற்றம் தருவான். ஆங்கில உலகம் புகழும் டிக்கென்ஸ், "தாயின் நற்குணங்களும் தந்தையின் பாவங்களும் குழந்தைகளிடம் வருகின்றன" என்று சொல்லியதை நினைக்கும்போது என் நெஞ்சம் திக்கென்று அடிக்கும். நான் சில சமயம் குழந்தையால் மகிழ்ச்சியும், சில சமயம் கோபமும் கொள்ளுகிறேன். ஆனால் காந்திமதிக்குக் கோபமே வருவதில்லை. அது அழுதாலும் சிரித்தாலும் அதைப் பாராட்டுவதும் சீராட்டுவதும் பொட்டிடுவதும் சிங்காரிப்பதுமாகவே இருக்கிருள். பெண்களுக்குச் சகிப்புத் தன்மை உண்டென்பதைக் குழந்தை வளர்ப்பு வழியே அறியலாம். சிறுபான்மையினரே, பெரும்பான்மையினரை ஆட்டிப்படைக்க முடியும் என்பதற்குக் குழந்தைகளே சான்று.

குழந்தை குப்புற வீழ்வதைக் காண்பதிலே எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா? குப்புற வீழ்வதையும் தலை தூக்க முடியாமல் தத்தளிப்பதையும், ஆயுள முழுவதும் பார்த்துக் கொண்டிருக்கலாம். எங்கே நேரம் இருக்கிறது? ஆபீசில் நம்மை புரட்டிக் கொடுக்கத்தான் மேலானவன் ஒருவன் இருக்கிருனே. ஆகவே நான் கொடுத்து வைக்காதவன். காந்திமதி கொடுத்து வைத்தவள். குழந்தை தவழ ஆரம்பித்தால், ஓடுகிற பாம்பை பிடிக்கிற மாதிரி. தவழத் தெரியும் வரை போட்ட இடத்தில் கிடக்கிற மண் பொம்மை. ஒரு அனுபவஸ்தர்"குழந்தையிடம் அதிகமாய்பாசமும் ஆசையும் காட்டித்தான் நோயை உண்டாக்குகிருர்கள். சதா குழந்தையைத் தூக்கி வைத்துக் கொஞ்சினுல், வளர வளர அது தன்னை எடுத்து வைத்துக்கொள்ளச் சொல்லியழும். குழந்தையின் உடம்புக்கு வலி தரும்படியோ, சுகந்தரும்படியோ பழக்கங்களைச் செய்துவருவது தவறு" எனருர்.

இதை நாங்கள் வெகுவாக வரவேற்ரேறும். பின்னர் பையனை அதிகமாக கையில் வைப்பதோ, எடுத்து இடுப்பில்

இடுக்கிச் சுகம் கொடுப்பதோ கிடையாது. வியாதியும் பறந்துவிட்டது; குழந்தை மொழு மொழுவென வெண் ணெய்க் கட்டியாக, மூக்கும் முழியுமாக இருந்த சமயம், எல்லாக் குழந்தைகளுக்கும் வருகின்ற ஆபத்து அதற்கும் வந்தது.

"இதுதானே மணியின் வீடு" என்று ஒரு குரல் கேட்டது.

"ஆம்"

"இங்கே குழந்தையிருக்கிறதா?"

"யாரய்யா நீ?"

"இருக்கிறதா இல்லையா?"

"இருக்கிறது. உனக்கென்ன?"

"பிடியுங்கள். இந்த நோட்டீஸைப் பிடியுங்கள்" என்றான். படித்துப் பார்த்தால், முனிசிபாலிடியார் அனுப்பி யிருந்தார்கள். என்னை, ஏதோ ஒரு செக்ஷன்படி பிராசிக் கூயூஷன் ஏன் செய்யக்கூடாதென்று கேட்டிருந்தார்கள்? குழந்தைக்கு அம்மை வைக்கத் தவறிய குற்றத்திற்காக முனிசிபல் ஆபீசில் ஹெல்த்ஆபீஸர் முன் ஆஜராகும்படியும் ஆக்ஞை இட்டிருந்தார்கள்.

"ஐயோ என்ன செய்கிறது?" என்று காந்திமதி பயந்தாள். நானும் திடுக்கிட்டேன். எனக்கு அம்மை குத்தியதாலேயே உடம்பு பலஹீனம் ஆகிவிட்டதென்று என் தந்தையார் அடிக்கடி சொல்லுவார். பொதுவாகப் பிள்ளைகளைப் பெற்றவர்களுக்குப் பிடிக்காத பொது விரோதி இந்த அம்மைக் குத்துகிறவர்கள். அம்மைகுத்திய பின்னர் பிள்ளைகள் இளைத்துத் துரும்பாகி விடுவதும் உண்மைதான்.

"இதற்காக அழுவானேன்?" என்றாள் காந்திமதி.

சம்மன் சார்பு செய்த வார்டு சேவகன் "அதுக்கென்ன சார். டாக்டர் சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்துவிடுங்கள்." என்றான். அப்பாடா கவலைவிட்டது. எங்கள் கண்ண

னுக்கு எத்தனை வைத்தியர் சிகித்சை செய்திருக்கிறார்கள். டாக்டர் சர்டிபிகேட் வாங்கினாலும், மூன்று மாதம் ஆறு மாதம் கழித்து எப்படியும் அம்மை குத்தாது முனிசிபால்டியார் விடமாட்டார்கள் என்றும் தெரியவந்தது. அம்மை குத்துவதிலுள்ள நன்மை தெரிந்ததும், இடைக் காலத்தில் அதனால் சிலநாட்கள் குழந்தையை இளைக்கவைக்குமே யென்ற பாசத்தால் நாளைக் கடத்தப் பார்த்தோம்.

எப்படியும் குழந்தைக்கு கைதூக்கி தன்னை அசைக்கத் தெரியுமுன் அம்மை குத்துவதின் லாபத்தை வாக்ஸினேட்டர் சொன்னார். ஒருநாள் அம்மையேகுத்திவிட்டார். நானும் காந்திமதியும் அந்தக் காட்சியைக் காணச் சகிக்காமல் மாடியில் போய்நின்றோம். பையனின் அம்மாத்தாத்தா தம்மடியில் வைத்துக் கொண்டு, இரு கைகளிலும் அம்மை குத்தும்படி அடக்கிப் பிடித்துக்கொண்டார். அப்பாடா, என்ன கூச்சல் என்ன அமளி.

நல்ல வேளையாக அம்மை வைத்தது எவ்வளவு நல்லதாகப் போய்விட்டது! அடுத்த வாரம் நாலாவது வீட்டில் அம்மை நோய் வந்து அந்த வீட்டுக் குழந்தை குட்டிகளுக்கு தக்காளித் தக்காளியாகக் கொப்பளித்திருந்தது. ஊரில் எங்கும் அம்மை பரவ ஆரம்பித்தது. கண்ணனுக்கு அம்மை வியாதி வராமல் தடுத்துவிட்டோம். நன்மையான காரியங்களை மன வருத்தத்துடன் செய்துவிட்டோம். பிறகு சந்தோஷமாகச் செய்யவில்லையென மனம் வருந்தினோம்.

கண்ணனின் உடலும் உள்ளமும் கவர்ச்சியடைந்துவிட்டது. ஆறு மாதத்தையும் தாண்டிவிட்டதற்கு அடையாளமாகத் தொட்டிலை உதைத்தும், ஊர்ந்தும் தனக்கு வேண்டிய பொருளைப்பார்த்து அழுதும், ஆட்டிசெய்தான். மற்ற வீடுகளில் ஆறுமாதக குழந்தைகள் எப்படியோ? இவன் மாசத்திற்குத் தகுந்த வளர்ச்சியும் அறிவும் பெற்றிருக்கவில்லை. அதீதமான புத்திசாலியாக வளர்ந்தான் என்றே நாங்கள் நினைத்தோம்.

நினைத்தபடி நடக்கவிடுகின்ற உலகம் இதுவா?

## 11. தாலாட்டு

காராரும் வானத்தில் காணும் முழு நிலவே
நீராரும் தண்கடலில் கண்டெடுத்த நித்திலமே
ஆசை தவிர்க்கவந்த ஆணழகே சித்திரமே
ஓசை அளித்து மலர் உண்ணுகின்ற தேன் வண்டே
மானிடரின் தோளின் மகத்துவத்தைக் காட்ட வந்த
தேனின் பெருக்கே, என் செந்தமிழே கண்ணுறங்கு

—பாரதிதாசன்

குழந்தைகளுக்கு ஏற்படும் செலவையும் தொல்லையையும் பார்த்தால் ஏழையால்தான் குழந்தைகளைக் காப்பாற்ற முடியும்—என்ற முடிவுக்கு ஒரு அறிஞர் வந்திருக்கிறார். நான் ஏழைதான் என்றாலும் என்னால் தாங்க முடியவில்லை; செலவைத் தாங்கிவிடலாம். தொல்லை... அம்மம்மா...அதோ நிலா முற்றமே இடிந்து விடும்படி என் காது இடிபட, அண்டம் வெடிபட முழங்குகிறான் கண்ணன். அழுகையென்றால் இதைப்போல அழுகை வேறு கிடையாது. குழல் இனிது, யாழினிது என்ற வள்ளுவர், நம்ம பையன் குரலைக் கேளாது போய்விட்டவர். இரண்டாயிரம் வருஷங்கள் கழித்து இடி இனிது, அணுகுண்டு அதினும் இனிதுஎன்பர் தம்மக்கள் அழுகையைச் செவி மடுத்தார் என்று பாடவேண்டும். அழுகையை அமர்த்தத் தாலாட்டு என்பதாக ஓர் இசையும் பிறப்பித்துள்ளார்கள். இந்த இசை பாலர்களுக்காக மட்டும் ஏற்பட்டாலும், பெரியவர்களும் கேட்டுச் சகிக்கவேண்டுமே.

"இந்தாருங்கள்; மாடியிலே என்ன செய்கிறீர்கள். இவன் குரல் கேட்கிறதா?" இவ்வாறு படல் இடியோசையைத் தாண்டிவரும் காந்திமதியின் குரல் எப்படியிருக்கும்?

"முடியாது மீனு, வரமுடியாது, இறங்கவும் முடியாது நான் படித்துக்கொண்டிருக்கிறேன்"

"குழந்தை அழுகிறது காதில் விழவில்லையா? ரோம் நகரம் பற்றி எரியும்போது நீரோ பிட்டில் [பிடில் என்றால் சுகம் தரும் வாத்தியம். ஆகவே அழுத்தமாக பிட்டில் என உச்சரிப்புக் கொடுத்தாள்.] வாசித்தானாம், அதுமாதிரி இருக்கிறதே உங்கள் போக்கு"

"அதற்காக நான் என்ன செய்ய?"

மாடிக்கே ஏறிவரும் கண்ணன் குரல். அழும் குழந்தையைக் கொண்டுவரும்போது கண்ணகிமாதிரி இருப்பாள். சிலம்பொடு ராஜசபை அடைந்த கண்ணகியின் கோபக் கனலை, அழும் குழந்தையுடன் மாடிக்குவரும் காந்திமதி முகத்திலே காணலாம். குழந்தை, பால் மட்டும் உண்ணும் பாத்திரமன்று. பாலோடு, பாவும் (தாலாட்டும்) உண்ணு கின்ற பாத்திரம்; பாலைவிட, பாட்டே குழந்தையை வளர் கிறது என்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள். பாரதியாரே,

காட்டில் விலங்கறியும் கைக்குழந்தை தானறியும்
பாட்டின் சுவையதனைப் பாம்பறியும் என்றுரைப்பார்

எனச் சொல்லும்போது குழந்தைக்குப் பாட்டுப் பிடிக்காது என்பதை யாரே மறுக்க வல்லார்? கண்ணன் பயலுக்குப் பாட்டிலே மோகமுண்டு. ஆனால் அது தூங்குவதற்கன்று. அவன் தூங்க வேண்டுமானாலும் பல மிருகங்கள் வருவதாகவும், கத்துவதாகவும், நாம் சொல்ல வேண்டும். குரங்கு, நாய், பூனை, எலி போன்ற ஜந்துக்கள் எப்படிக் கத்தும் குலைக்கும் உறுமும் என்பதைச் சொன்னால்தான் அவன் தூங்குவான். சமயாசமயங்களில் பூச்சாண்டி, இரண்டு கண்ணன், பேபே இவர்கள் வந்து பிடித்துப் போவதாகச் சொல்லவேண்டும். இசைக்குப் பயந்து தூங்குகிற பயல், இவன் அன்று; பிறரது குரல் இம்சைக்குப் பயந்து தூங்கும் பயலாக்கும் இவன். அவனுக்குப் பொழுது போகாவிட்டால்,

தாலாட்டுமட்டுமன்று எந்தப் பாட்டும் கேட்டுக்கொண்டு கொட்ட கொட்ட விழித்திருப்பான். அழுகையை நிறுத்துவதற்கு அவன் குரலைவிட அதிகமான சப்த ஜாலங்கள் செய்யும் தம்பட்டங்கள் [தோல் வாத்தியம், மெல்லிய தகரம், பிளாஸ்டிக் வாத்தியம் இவ்வாறு பல வகையில் பல தம்பட்டங்கள் இருக்கின்றன] ஓசை செய்யும். விளையாட்டுச் சாமான்களை நாங்கள் அடித்து ஓசை செய்வதில் அவன் அழுகையொலி மங்கிக் கொள்ளும். பூர்வ காலத்தில் எதிரியின் படையை இசையுடன் ஆடிப்பாடி போர் புரிந்த கதைப்படி இவன் அழுகையை அமுக்க வேண்டுமேயன்றி, சாத்வீக முறையில் அழுகையை நிறுத்துவது கடினமான காரியம்.

ஆரம்பத்தில் கண்ணன் அம்மாவுக்கும் [அருமை மீனு அன்புள்ள காந்திமதி என்பன போய்விட்டன; யார் வந்தாலும்; "கண்ணன் அம்மா எங்கே?" கண்ணன் அம்மா?' என்றார்கள்] எனக்கும் பல அபிப்பிராய பேதங்கள் இருந்தது போலவே தாலாட்டைப் பற்றியும் எங்களுக்குள் நிறைய அபிப்பிராய பேதங்கள் இருந்தன தலைச்சன் பெற்றவளுக்குத் தாலாட்டும், தாயைப் பறி கொடுத்தவளுக்கு பிலாக்கணமும் தானே வருமாம். காந்திமதிக்கு இவ்வாறு வரவில்லை; தனக்குத் தாலாட்டுவராது என்று சாதித்து என் தலையில் கட்டப் பார்த்தாள்.

"நீ தாலாட்டேன் கண்ணனுக்கு அம்மா."

"ஐயோ எனக்குத் தெரியாது"

"உங்கம்மாவைக் கூப்பிட்டுத் தாலாட்டுப் பாடச் சொல்வது"

"நீங்கள் பேசுகிறதைப் பார்த்தால், ஏதோ உங்கள் பிள்ளைக்கு நலுங்கு பாட அழைக்கிற மாதிரி என் அம்மாவைக் கூப்பிடச் சொல்லுகிறீர்களே?"

"பின்னே? நான் எப்படி என் வேலையைக் கவனிக்கிற தாம்; தாலாட்டும் பாடுகிறதாம். கூப்பிடு உன் அம்மாவை"

"அம்மா, ஆற்றுக்குப் போயாச்சு"

"அடடா, பேரனுக்குப் பயந்து ஆற்றிலே குளத்திலே விழவா போய்விட்டாள் உன் அம்மா?"

"நீங்கள்தான் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டு அம்மிக் குழவி மாதிரி என் அருகே உருட்டி விட்டுப் போய் விடுவாள். அவன் சிரிக்கச் சிரிக்க நான் ஏதாவது உளரவேண்டும். அவனுக்குப் பொழுது போக்காக நான் இருக்கவேண்டும். இவ்வளவும் சமாதான மாக இருக்கிறபோது எங்களுக்குள் நடக்கும் பேச்சு.

கண்ணன் அழ ஆரம்பித்தால், "என்ன செய்து விட்டீர்கள்? ஏன் அவன் அழுகிறான்?" என ஆர்பாட்டம் செய்தபடி வந்துவிடுவாள். உடனே "நீயாரோ நான் யாரோ? ஆர் ஆரோ? ஆர் இராரோ?? ஆர் இருப்பார் களோ???" என்ற தத்துவத்தைப் பொதிந்துள்ள "ஆராரோ ஆரிரரோ" ஆரம்பிப்பாள். இரண்டடிக்கு மேலே அவளுக்குத்தெரியாது. கீறல் விழுந்தகிராமபோன் பிளேட் போல சொன்னதையே சொல்வது எத்தனை எரிச்சல் வரும். அதுவும் பாலகனிடம் போய் "நீயாரோ நான் யாரோ" என்று பாடலாமா? மேலும் கொட்டாப் புளியாக நான் இருக்கும்போது இவ்வாறு சொன்னால் என் கோபம் எவ்வளவு டன்நிறை இருக்கும்?

"பள்ளிக்கூடத்திலே சயன்ஸ், தரித்திரம் பூகோளம் சொல்லி வைக்கிறமாதிரி நாலு தாலாட்டு சொல்லி வைக்கக் கூடாதோ. நூல் பின்னல், மண்ணாங் கட்டிசொல்லி வைக்கி றாங்களே எதுக்காக?"

"தரித்திரம் இல்லை. சரித்திரம் சொல்லி வைப்பாங்க"

"வாயைமூடு, ஏய் கண்ணனுக்கு அம்மா."

"நீங்கதான் இந்த ஊரிலே, காலேஜ் பெண்களுக்குத் தாலாட்டுப் பாடசாலை ஒன்று ஆரம்பித்து வையுங்கள். நல்ல வருமானம் கிடக்கும்."

"என்ன சொன்னே அவமானமா?"

"வருமானம் என்றுதான் சொன்னேன். உங்க காதுக்கு அவமானம் என்பதாக இருக்குதோ?"

அழுகிற பயல், எங்கள் தர்க்கத்தைக் கண்டு சிரிப்பான். பிறர் சண்டையைக் கண்டு சிரிக்கும் மனோபாவம் சிறுபிள்ளையிலேயே பிறந்து விடுகிறது. சிரித்துப் பேசும் பெண், புருஷன் தலையில் குடித்தனத்தைச் சுமக்க வைக்கிற மாதிரியே என் கையில் தூளியைக் கொடுத்துவிட்டு அவள் அன்னநடை நடந்து அடுக்களைக்குப் போய்விடுவாள். நான் தொட்டிலை இழுத்துவிட்டால் தூங்குமா?

"தொட்டிலைக் குலுக்கி ஆட்டினால்தான் தூங்குவான் ராஜு" என்ற உத்தரவு பல கட்டுகளைத் தாவிவரும்.

"ராஜு மந்திப் பயல். இவன் தூங்குகிறனா?" என எரிந்து விழுகிற குரலோடு என்னையும் ஒத்துப்பாடும். குழந்தைத் தொட்டிலை, குடை ராட்டினத்தில் கிடக்கும் மரத்தொட்டில் சுழன்று அலை மோதுமே அவ்வாறு அலை மோதும்படிச் சுற்றுவேன். "ஐயைய்யோ. அப்படி ஆட்டினால் குடலேறி மாந்தம் விழும். அது என்ன குழவிக் கல்லவா? தங்கக் கட்டி வேண்டாண்டா..." என்று ஆறுதல் சொல்லி, மீண்டும் கீறல் விழுந்த கிராம்போன் பிளேட் போல இரண்டடி "ஆராரோ ஆரிரரோ" என்பாள். இது வெகு நேரம் நீடிக்காது. அதற்குள் அடுப்பிலே கிடக்கும் பாலோ, பருப்போ ரஸமோ "இங்கே வா, இங்கோ வா" என்று அடுக்களைக்கு அழைக்கும். காந்திமதி குழந்தையை விட்டு அடுப்படிக்குள் போகும்போது "தொட்டிலை இழுத்து விடுங்கள்" என்ற உத்திரவு பிறக்கும். தொட்டிலை இழுத்து விடுவதைவிட அவன் கன்னத்தில் நாலு இழுப்பு இழுக்க

லாமேயெனத் தோன்றும். செய்ய முடிகிறதா? குழந்தை பெற்றபெண், கணவனைவிட மூத்தவள் ஆகிவிடுகிறாள்!

நான் தொட்டிலை இழுத்தாலும், அம்மாவின் ராகம் கேட்கவேண்டும். சினிமாவில் இரவல் குரல் போலவே, நான் தொட்டில் ஆட்ட, காந்திமதி பாடவேண்டும்! தாயாரே நேரில் நின்று ஆட்டுவதாகப் பயல் எண்ணம். திடீரெனப் பாட்டு நிற்கும். ஏதாவது தண்ணீர் எடுக்க காப்பிகுடிக்க, அல்லது தோட்டப் பக்கம் விறகு எடுக்க மீறு போனால் பயல் எம்பிக் குதிப்பான்!

"பாடுஊ" எனக் கத்துவேன்.

"நீங்கள் ஏதாவது சொல்லுங்கள்"

"வராது"

"அரியானை சொல்லுங்கள். மாதர் பிறைக் கண்ணி யானைஏதாவது ஒரு பாடல்சொல்லுங்கள்"

எனக்கு அரைவரியும் குறைவரியுமாகப் பாட வரும். சமயா சமயங்களில்படித்ததைச் சொல்லுவேன். எல்லாம் அரைகுறையான பாடல்கள். எனக்கு மறதி வரும் வரை வாய் மூடி மௌனியாக இருக்கிற பயல் கத்துவான்.

"அட ஆத்திச்சூடி கொன்றைவேந்தன் மூதுரை நல்வழி எதையாவது சொல்லுங்களேன்"

கண்ணன், தமிழ் பாடல்கள் பல கேட்டு வளர வேண்டும் என்று நினைத்தாள்போலும். தொட்டிலின் அருகாக நடமாடும் புத்தகஸ்டாண்டு நிறுத்தி ஆத்திச் சூடி. கொன்றைவேந்தனில் ஆரம்பித்து பதினெண் கீழ் கணக்கு வரை படித்தேன், பாடினேன். அவனைத் தூங்க வைக்கத் தனிப்பாடல் போதாது. உலா, அந்தாதி இவை தேவை என்றாகிவிட்டது, தொட்டிலை ஆட்டும் கரத்தோடு தமிழை யும் பாடித் தெரிந்து கொள்ளலாம் என்ற ஆசையால் நான் ஒப்புக்கொண்டேன். நளவெண்பா, நைடதம், கம்பராமா யணம்,இவை வாங்கினேன். பயல் நாளாகஆகத் தொட்டிலை

வீசி ஆட்டும்படியும் குலுக்கி ஆட்டக்கூடாதென்றும் அழு தழுது சொன்னான். அதனால் தொட்டில் அருகாக ஸ்டாண்டு நிறுத்தி அதிலே புத்தகம் வைத்து நான் பாடும் பழக்கம் நின்றது. தமிழ் நயம் தெறித்த பாடல்களின் கருத்தைவிடத் தாயின் குரல்தான் அவனுக்குத் தேவையாக இருந்தது! கருத்து வேண்டாம்; இனிமை இனிமை இனிமை தேவை யென அந்தப் பயல் தெரிந்துகொண்டதுதான் ஆச்சர்யம். ஆனாலும், நான் தொட்டிலை இழுத்துவிடும் சந்தர்ப்பங்களில் எனக்கு முடிவில் உதவியது வாய்ப்பாடு. "ஓரொண்ணு ஒண்ணு" என்ற வாய்ப்பாடு முதல், இருபது வரை சொல்லிவைத்தோ வதைத்தோ அவனைத் தூங்க வைக்க முடிந்தது. மற்றப் பாடல்கள் மறந்தன; வாய்ப்பாடு தான் மறக்க முடியாததாக இருந்தது. நான் வாய்ப்பாடு ராகம் போட்டுச் சொல்வதைக் கேட்ட, அண்டை அயல் வீட்டுச் சிறுவர் சிறுமியர் வேடிக்கை பார்க்க வந்து என்னோடு முறை வைக்கவும் ஆரம்பித்தார்கள். தெருவெங்கும் வாய்ப்பாட்டின் முழக்கம் பிறக்கும். தாலாட்டாக ஆரம்பித்தது பள்ளிக்கூடம் போல வாய்ப்பாடுஓசை நாலாபக்கமும் சிதறிக் கேட்கவே, அக்கம்பக்கத்தார் சிரிப்புக்கும் கேலிக்கும் ஆளாக நேர்ந்தது. தொட்டிலை ஆட்டச் சொல்லுமுன், வெளிக் கதவைச் சாத்திவிட்டு வாய்ப்பாடு ஒப்புவிக்கத் தொடங்கினேன். கதவு சாத்தப்பட்டது தெரிந்தும் முக்கியமானவர்கள் தேடிக் கொண்டு வருவதால் வீட்டுக் கதவைத் திறப்பதும் கஷ்டமாக இருக்கவே, இனி தொட்டிலை தொடுவதும் இல்லை; தாலாட்டு என்ற போர்வைக்குள் வாய்ப்பாடு, தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் போர்த்திக் கழுத்தை நெறுக்குவதும் இல்லையென முடிவு செய்தேன்.

வேலைக்கார வள்ளிக்குத் தாலாட்டு என்றால் கடல் மடை திறந்த மாதிரி வரும். இன்றும் படியாதவர்களுக்கு பாட்டுக் கட்டுவது, வெகு சுலபமாக இருக்கிறதின் ரகசியத்தை அவளிடம் காணலாம். ஆகவே தாலாட்டு இலாகாவை

வேலைக்கார வள்ளி கையில் ஒப்படைத்து விடுகிறதென ஏகமனதாக ஒப்புக்கொண்டோம். வேலைக்காரி எங்கள் நிலா முற்றத்தில் எப்போதும் இருக்க முடியாது. அதனால் ஆதி நாளில் உத்தியோகஸ்தர்களோடு பங்கா இழுக்கும் கயிறு போய்வர வாசல் நிலையில் உருளை போட்டு கயிறு இழுப்பவனுக்கு தொங்குமே அப்படிச் செய்தோம். கயிற்றின் நீளந்தான் அடுக்களைவரை போக வேண்டியதாயிற்று. காந்திமதியின் குரல் தூளிக்கு எட்டுகிற மாதிரியே, அடுக்களையில் இருந்த படியே தொட்டிலை ஆட்டவும் என் இஞ்சினியரிங் மூளையால் செய்துமுடிக்க முடிந்தது. என் பாடும் நிம்மதி யாயிற்று.

வேலைக்காரி வள்ளி தாலாட்டுப் பாடல்கள் கேட்டதையும் பாடுவாள்; தானாகவும் இட்டுக் கட்டுவாள். அவள் பாடுவதைக் காந்திமதி பாடஞ் செய்வதும் நித்திய வேலையாயிற்று. கம்பருடைய கற்றுச் சொல்லிக்குக் கூட எழுதும்போது அத்தனை கைவலி எடுத்திருக்காது. வள்ளி அவ்வளவு அதிகமாகப் பாடினாள். அத்தனையும் தாலாட்டு· தாலாட்டு. உதாரணமாக இந்தப் பாட்டை—இல்லை-கவிதையைப் பாருங்கள்.

இலை தீய்ந்து கொடி வாடி
இல்லை யென்று போயிட்டதே
சருகு திர்த்துப் பழம்பழுத்த
சாதிப் பலாப் பழமே!

எத்தனை நோன்புகள், விரதங்கள் செய்து பின்னர் பெற்ற பிள்ளை, கண்ணன்! பிள்ளை இல்லையென்று கொடி போன்ற மீனு வாடி வதங்கிப் போன சமயத்திலே, சருகை உதிர்த்துவிட்டுப் பலாமரம் பழம் பழுத்த மாதிரி பொத்துப் பொத்தென பலாப்பழமாக பிறந்தானும். என்ன நயம், என்ன பொருத்தம். பயல் தரும் தொல்லையைப் பலா முள்ளுக்கும் அவன் சிரிப்பை பலாச்சுளைக்கும் பொருத்திச் சொல்லலாம்.

"வள்ளி, நீ தினம் காலையிலோ மாலையிலோ மீனுவுக்குத் தாலாட்டுச் சொல்லிவை. அதற்குத் தனியாய் பணம் தருகிறேன்."

"ஏஞ்சாமி! தாலாட்டுத் தானுக வரவேணும். சொல்லி வைச்சா அது வரும்? கண்ணேடு அம்மா பாட்டுக் கத்துக்கிற நாளிலே தாலாட்டும் கத்திருக்கணும்" என்பாள். வள்ளியின் அபிப்பிராயப்படி, பாட்டு வாத்தியார் சொல்லி வைத்திருக்க வேண்டிய முக்கிய ராகம் நீலாம்புரி; முக்கிய பாடல்கள் தாலாட்டு என்பதை இன்று உணருகிறேன். எனக்கு இன்னொரு பெண் பிறந்தால், பாட்டு வாத்தியாரைத் தாலாட்டுச் சொல்லி வைக்கும்படி முதலில் வற்புறுத்தல் செய்வேன். அதுவரை வள்ளி சொல்வதை நான் நோட்டுப் புத்தகத்தில் எழுதி வருகிறதே சரி. எழுதிய பாடல்கள் சில சமயம் காவிய ரசனை உள்ளதாக இருக்கும். ஆகவே. நானே, காந்திமதிக்குப் பாடிக் காட்டுவேன்.

"ஐயோ, தாலாட்டை நிறுத்துங்கள். தூங்குகிற ராஜுக்கட்டி முழிச்சுவிடுவான்"

"முழித்தால் என்ன. வள்ளியின் அருளினுலே நிறையத் தாலாட்டு இருக்குது. பாடித் தள்ளிவிடுவேன்"

எங்கள் பேச்சில் கொஞ்சலும் இருக்கும். கோபமும் இருக்கும். தாலாட்டுப் பாடல்கள் என் கைக்கு வந்ததி லிருந்து அழுகிற பயலை எழுப்பிவிட்டு வேடிக்கைப் பார்ப் பதும், தாலாட்டுக்களைப் பாடி அவனைத் தூங்க வைப்பதும் எனக்குப் பொழுது போக்காயிற்று.

நீ இரங்காயெனில் "அவனை என்ன பல் பிடுங்கின பாம்புன்னு நினைச்சீங்களா?" என்பான். அதாவது பிடி பட்ட பாம்புக்கு மகுடியை வாசித்து ரோஷம் ஊட்டி' வேர்ப்படயை ஏடுத்துப் பயங்காட்டுவதைப் போன்றதாம் என் தாலாட்டுப் பிரபந்தம். நல்ல உதாரணம் என்று இதையும் நான் அனுபவித்தேன்.

திடீரென்று ஒரு நாள், பக்கத்து வீட்டுச் சண்முகம் என் தாலாட்டுக்காகச் சண்டை பிடித்தார்.

"உங்களாலே இந்தத் தெருவிலே என்போன்ற ஆண்களுக்கே அவமானம் வந்திருக்கிறது."

"ஏன்?" என்றேன்.

"மீறு வீட்டுக்காரரைப் பாருங்கள் தொட்டில் ஆட்டுகிறார். தாலாட்டுப் பாடுகிறார். நீங்கள் என்ன செய்ய லாயக்கு? இத்தெருவிலுள்ள மனைவிமார் கேட்கிறார்கள்?" என்று கோபமாகச் சொன்னார், சண்முகம்.

"எனக்கு ஒன்றும் புரியவில்லையே"

"ஒன்று நீங்கள் தாலாட்டுப் பாடுவதை நிறுத்தினால் தான் எங்கள் வீடுகளில் சகதர்மிணிகள் எங்கள்மீது போர் தொடுப்பது நிற்கும்."

"என் வீட்டில் நான் பாடுவேன்; ஆடுவேன்"

"பிறர் வீட்டுக்கு எட்டாதபடி பாட்டைநடத்துங்கள்"

"இனிமேல் அப்படியே செய்கிறேன்"

ரகசியமாகச் செய்யமுடியாத செயல்களுக்குள் தாலாட்டுப் பாடுவது ஒன்று. தாலாட்டுப்பாடுவது வெளிப்படையானது. நாலைந்து நாட்கள் சென்று அண்டை வீட்டுச் சண்முகம் வந்தார். கோபமாக வரவில்லை. நாலைந்து நபர் களோடு சேர்ந்து வந்தார். அந்த வேளையில் நான்,

ஆறிரண்டும் காவேரி அதன் நடுவேசீரங்கம்
சீரங்கமாடித் திருப்பாற் கடலாடி
மாமாங்க மாடி மாசிக் கடலாடி
தைபூச மாடித் தவஞ்செய்து வந்தவனே

என்று ஆடிக் கொண்டும், தொட்டிலை ஆட்டிக்கொண்டும் இருந்த வேளையில் "நிறுத்து அய்யா நிறுத்துங்கள்" என்ற கோஷ்டி கானம் கேட்க குரல்களின் தலைவனாக சண்முகம் கோபக்கனல் தெறிக்கச் சிரித்தார். எனக்கு நெருப்பாக இருந்தது. இந்த வேளை பார்த்து கண்ணன் அழுகிறான்;

அடுக்களையிலிருந்து காந்திமதி, "நான் தொட்டிலை இழுக்கிறேன்; எனக்குப் பதிலாக நீங்கள் இரவல் குரல் கொடுங்கள்" என்று சொல்லுகிருள். நல்ல வேளை பார்த்தாள்; வீட்டின் தலை வாசலிலே மானத்தை வாங்கும் கோஷ்டி. வீட்டுக்குள்ளே அது புரியாதகிரகலட்சுமி... நான் தொடாமலே தொட்டில் ஆடுவதைக் கண்ட கோஷ்டிகள் நெருங்கி வந்தார்கள். பங்கா முறையில் நூறு அடிக்கு அப்பால் கயிறு இழுபட்டு ஆடுவதையும் நான் நடுங்குவதையும் பார்த்துச் சிரித்தவர்களை என்னல் சகிக்க முடியவில்லை. பரிகாசத்தோடு ஆரம்பித்த சிரிப்பின் ஓட்டம் என் இஞ்சினியரிங் மூளையைக்கண்டு வியந்தது, கோபம்போய் கொஞ்சும் சிரிப்பு, பாராட்டுச் சிரிப்புச் சிரித்தார்கள்.

திருப்பிக்கொண்டு, "நிறுத்துங்கள்" என்றேன். அந்தக் கூட்டத்தில் "அதுயாரடா அவன் எங்கள் சிரிப்பை நிறுத்தச் சொல்லறது. எங்கள் வீடுகளிலே எங்களைச் சிரிப்பா சிரிக்க அடிக்க வைக்கிறெ நீ. என் வீட்டு பொம்பளை, நான் வீட்டுக்குப் போனு அதைச் செய் இதைச் செய்யுன்னு சொல்லரு. நீதானே எங்கள் கஷ்டங்களை உற்பத்தி செய்யும் ஆத்மா...உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று பாய்ந்தான்.

நான் உறும உறும, வந்தவர் கனைக்கக் கனைக்க, தூங்குகிற பயல் முழிக்க முழிக்க, காந்திமதி சட்டுவத்தோடு அடுக்களையிலிருந்து பாடி வருகிருள்.

**அடித்தாரைச் சொல்லியழு**
**ஆக்கினைகள் பண்ணிவைப்போம்**
**தொட்டாரைச் சொல்லியழு**
**தொழுவில் கட்டி வைப்போம்**

கோஷ்டியாக நின்ற கும்பல் ஒன்றையொன்று பார்த்து சுருதி பேதத்தில் பேசின. தாலாட்டுப் பாட்டே, பயங்கர ஆயுதம் போல் அவர்கள்மீது பிரயோகம் ஆகிவிட்டது. தொழுவில் கட்டிவைக்கப் போவதை வந்த கூட்டத்தினர்

எதிர்பார்க்கவில்லை. அவர்கள் பயந்து நிற்கிறார்கள் என்ற தைரியத்தோடு, காந்திமதியுடன் 'டேயட் பாடுகிற மாதிரி' நானும் சேர்ந்து அடித்தாரை சொல்லியழும் பாடலில் சேர்ந்து கொண்டேன். எங்கள் வீட்டுத் தொழுவில், வந்த மனிதர்களைக் கட்டிவைக்க மட்டும் நான் விரும்பவில்லை. மாடானாலும் பயன் உண்டு. இந்த மனிதர்களால் யாது பயன். ஆகவே பாட்டிலே சொல்லுகிறேன்.

நாக்கை அறுத்து வைப்போம்
நகரை விட்டு ஓட்டி வைப்போம்
பல்லைப் பிடுங்கிடுவோம்
பட்டணம் ஓட்டிடுவோம்

என்று நான் பாட, பிறகு என்னைத் தொடர்ந்து காந்திமதியும் சேர்ந்து பாடினாள். நாங்கள் இருவருமே பாடுகிறோம். தாலாட்டு 'டேயட்'.

கண்ணை அடித்ததார்
கண்மணியைத் தொட்டதார்
பொன்னை அடித்ததார்
பொற்கிளியைத் தொட்டதார்...?

எங்கள் இருகுரல் தாலாட்டையும் பொறுக்காத அந்தக் கும்பல் "நிறுத்துங்கள் நிறுத்துங்கள்" என்று வீட்டிற்குள் வரவே மாடிக் கதவைச் சாத்திவிடுகிறோம்...அவர்கள் மீண்டும் கத்தினார்கள். கத்திக்கொண்டே இருந்தார்கள்.

## 12. எனக்கும் என் குலத்துக்கும் எதிரி

சிறுகுழந்தை செய்கையெல்லாந்
தேர்ந்தெழுத வெண்டு மெனில்
மறுபிறவி ஒன்றெடுத்து
வந்தாலும் போதாதே.

—புதுப்பாடல்

தாலாட்டினால் ஏற்பட்ட கலாட்டாவை எப்படி சமாளிப்பது என்று நான் விழித்துக் கொண்டிருந்த வேளை, நீ இரங்காயெனில் தோன்றாத் துணைவனாக வந்தான். நல்ல வேளையென்று நான் திருப்தியடைந்தேன். முன்பெல்லாம் பிள்ளையில்லாப் பெரும்பாவியென திட்டிய தெருப்பெண்கள் என்னைப் பின்பற்றி தத்தம் கணவன்மார் தாலாட்டுப் பாட வேண்டுமெனச் சொல்லுகிறார்கள். இந்த விபரம் அறிந்த நீ இரங்காயெனில், கோபத்துடன் வந்த கோஷ்டியை சமாதானம் செய்ய முயன்றான்.

"உங்களுக்கு இதனால் என்ன அவமானம் நேர்ந்தது?"

"அவமானந்தான். என் பெண்சாதி இவரைப் போல நானும் தாலாட்டுப் பாட வேண்டும். ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே உரிமையென வாதாடுகிறாள். இவரால் முளைத்த வம்புக்கு நாங்கள் சண்டை போடுவோம்."

அவர் முடிந்ததும், "சண்டை போடுவோம்" எனக் கூட்டாகக் கத்தினார்கள். ஊருக்குப் பயந்து நான் வாழவா என் குழந்தை கண்ணன் பிறந்தான். எனக்கு தெருக் குழந்தைகள் வாய்ப்பாடு அறஞ்செயவிரும்பு! 'ஓரொண்ணு ஒண்ணு, என்பதாகப் பலவிதமான கேலிப்பெயர்கள் வைத்ததைப் பாராட்டவில்லை. பெரியவர்களுடைய கோபத்தை தாங்க முடியாது. இப்போது தவிக்கிறேன்.

"அப்போ, உங்கள் கட்சிப்படி மணி இனி தாலாட்டுப் பாடக்கூடாது"

"கூடாது, கூடாது, இவர் காலடிச் சுவட்டை நாங்கள் பின்பிற்றவா?"

"வேண்டாம்" என்று சமாதானம் கூறி நீ இரங்கா யெனில், "டேய் மணி இவர்கள் மனம் புண்பட நீ நடந்தது தப்பு. அதனால் உனக்கு ஒரு தண்டனை. இவர்களுக்கு நீ அன்றாடம் தாலாட்டு வகுப்பு நடத்திவிட வேண்டும். தாலாட்டுக் கேட்க வருகிறவர்கள் கைக் குழந்தை கொண்டுவர வேண்டும்; இரண்டு தாலாட்டுப் பாடம் கற்பதற்கு ரூபாய் பத்து வீதம், தாலாட்டுக்காக மாதச் சம்பளம் இவர்கள் கொடுக்க வேண்டும்" என்று தீர்ப்புச் சொன்னான். தாலாட்டுத் தம்பிரானாக நான் மாறி வகுப்பு நடத்தலாமென எண்ணிக் கொண்டிருந்த சமயம், வந்த கோஷ்டி வீரர்கள் பத்து ரூபாய் மாதச் சம்பளம் என்றதும் எடுத்தார்கள் ஓட்டம். மலைபோல வந்த ஆபத்து பனி போல நீங்கவே நான் தாலாட்டைப் பலமாகப் பாட ஆரம்பித்தேன்.

என் காதில் விழுவதற்காக வீதியில் போகும் என்னைப் பார்த்து, சாடைமாடையாக சண்முகத்தின் சகாக்கள் பேசுவார்கள். தாலாட்டுத் தம்பிரான், ஆரிரோ அரசன், தொட்டில் பாட்டரசன் என்ற பட்டங்களை முணு முணுப்பார்கள். ஏதும் காதில் படாதவன் போன்று ஆபீஸ் போய்விடுவேன்.

கண்ணன் பயல் சாதிப் பலாப்பழம் போல இருக்கவே கண் திருஷ்டி என்னும் ஈக்கள் அவனை மொய்க்கா வண்ணம் பாதுகாக்க ஆரம்பித்தாள். அதுவும் ..ம்படி வீட்டு பாப்பம்மா வந்தால், "எங்கேம்மா காந்திமதி, உன் பயலை எங்கே?" என்றதும் வாசலுக்கே ஓடி "அவன் தூங்குகிறான்" என்று வழியனுப்பும் முயற்சி நடக்கும். பாப்பம்மாள் போனதும், அவளது காலடி மண்ணை எடுத்துவந்து

தலையைச் சுற்றிப் போடுவாள். அடுப்பிலே மண்போட்டால் புகையாது; மிளகாய் வற்றல் போட்டால் புகைச்சல் வருமல்லவா, புகைச்சல் வர வர பாப்பம்மாள் மட்டுமன்று மற்றும் பலரும் கண் திருஷ்டி போட்டுவிட்டார்கள் என்று சொல்லுவாள். இதனால் தொட்டிலை மாடிக்கே மாற்றி விட்டாள். மாடிக்குத் தொட்டில் வந்ததால், நிரந்தர தாலாட்டுப் பாடகனாக இருக்க நேர்ந்தது. மேலே தொட்டி லில் அழுகின்ற கண்ணனைச் சமையல் கட்டிலும், கீழே பட்டக சாலையிலும் இருந்தபடியே இழுத்து விட மார்க் கங்கள் செய்திருந்தேன். கீழ் வீட்டிலிருந்து சுவர் ஓரமாக மின்சாரம் போக குழாய் பொத்துக்கொண்டு போகுமே அது போல மாடிக்குத் தொட்டில் கயிறும் போய்க்கொண் டிருக்கும். தொலைவில் இருக்கிறவரை இன்பம் தரும் பொருள்கள், கிட்ட வந்ததும் அலுப்புத் தரும்; அதுபோல மாடியில் என் பக்கமாகவே கண்ணன் வந்ததும் எனக்குத் தாலாட்டின் மீதே வெறுப்பு ஏற்பட்டது. அழுதாலும் பாடுவதில்லை; அழவும் பாடுவதில்லையெனத் தீர்மானித் தேன். குடும்பத்தில் எந்தத் தீர்மானமும் சுலபம்; துண்டு விழாமல் சரிகட்ட முடியாது. ஆகவே குழந்தையைத் தூங்க வைக்க மாடியிலே வந்து தாலாட்ட ஆரம் பித்தாள் வள்ளி.

மாடி எனக்குச் சொந்தமில்லை யென கீழே தூக்கி யெறியப்பட்டேன. நாளாக ஆக நான் எத்தனை உரிமை களைப் பறி கொடுத்தேன் என்பதை எண்ணிக்கை வைத் துக்கொண்டு வருகிறேன். இன்னும் வள்ளி வேலைக்கு வராமல் போகவே, நான் பாடும்படி குரல் கொடுத்தாள்.

''முடியாது முடியவே முடியாது'' என்றேன்.

"ஒரு பிள்ளை பெத்ததும் பாசம் அத்துப் போச்சா; வீல்வீல்னு கத்தியபடியே மாடியே இடிஞ்சு விழுந்திடும் போங்க மாடிக்கு'

''முடியாது, முடியாது''

"அப்போ உங்க அறையிலே தொட்டில்போடுகிறேன்"

"கீழே தொட்டில் கொண்டுவந்தே, என் ஆபீஸ் மாடிக்குப் போய்விடும்."

"அப்போ மாடியிலே ஒரு தொட்டில்; கீழே இங்கே ஒரு தொட்டில் போட்டாத்தான் சரியாகும்" என்ற வேளையில் நீ இரங்காயெனில்வந்தான். "இரண்டு தொட்டிலுக்கு அவசியம் ஏற்பட்டதா?" என்று சிரித்தான். விஷயம் விளக்கப்பெற்றது. மாடியில் இருந்த பயல் கதறினான்.

"ஐயா, நீலாம்புரியாரே பாடுங்களேன்" என்றாள்.

"நான் நிறுத்திவிட்டேனடா நீஇரங்காயெனில், ஏதோ தமாஷாக தாலாட்டு பாடினேன். இவள் என்னையே சகல வேலைகளும் வாங்க ஆரம்பிக்கிறாள். இனி நான் பழைய மாதிரி ராஜாவாக இருப்பேன். குழந்தையைக் குளிப்பாட்டும்போது தண்ணீர் விடுங்கள்; பவுடர் எடுங்கள் என்று தலையில் சுமத்தினால் முடியாது. என்னால் செய்யமுடியாது"

"சரி சரி. உனக்கு ஞானோதயம் ஏற்பட்டுப் போச்சு. எங்காவது அரச மரத்தடியிலே போய் உட்கார்ந்து விடாதே" என்ற சமயம் வேலைக்கார வள்ளி வந்தவள் மாடிக்குத் தாவினாள். மாடியிலிருந்து அழுகையும் தாலாட்டும் முகாரியும் நீலாம்புரியும் இணைந்து வந்தன.

ஆரடித்த கண்ணீர் ஆறாய் பெருகியது?
அங்கெடுத்த கண்ணீர் ஆறாய் குளம் பெருகி

"பார்த்தியா மணி. வேலைக்கார வள்ளி பெரிய கவி தானப்பா. கண்ணீர் ஆறாகவும் குளமாகவும் ஓடுதாம். அவள் சொல்வதைக் கவனி"

நான் கோபங் கொண்டாலும் கவிதைச் சுவையில் ஈடுபட்டவன். மேலே பாட்டைச் செவி மடுத்தேன், தூக்கம் என் கண்ணை அழுத்திற்று.

ஆறு பெருகி ஆனே குளிப்பாட்டி
குட்டம் பெருகி குதிரை குளிப்பாட்டி
இஞ்சிக்கும் பாய்ந்து இருவாட்சி வேரோடி.

என்று வள்ளி பாடவே, "சபாஷ் சபாஷ் பயல் பூபாளத்தின் கண்ணீர்ப் பெருக்கு செடிகொடியை வளர்க்குதா?" என்றான்.

கண்ணன் அழுகை குறையும் காலத்து, வள்ளியின் பாட்டும் நிற்க ஆரம்பித்தது.

நாரத்தைக்குப் பாய்ந்து நடுவே பலாப் பழுத்து
மாதுளைக்குப் பாய்ந்து மருதாணி வேரோடி
வாழைக்குப் பாய்கையிலே வற்றியதாம் கண்ணீர்.

நானும்நீ இரங்காயெனிலும் தாலாட்டின்சுவையையும், கண்ணீர் பெருகி வளர்த்த நாரத்தை, பலா, மாதுளை இவற்றையும் வாழைக்குப பாயுங்காலத்துக் கண்ணீர் வற்றியதையும் ரசிக்க ஆரம்பிக்கவே, பயல் மாடியில் தூங்கியவன் விழிக்க ஆரம்பித்தான்.

"அம்மா நம்மாலே இவனைத் தூங்கவைக்க முடியாது" என மறுத்தாள்வள்ளி. புரட்சிப்பாடல் வந்ததேபாருங்கள்.

தாத்தா அடித்தாரோ டாங்கு கையாலே
பாத்து நீஇறங்கு பாரசூட் போல
அழுது புலம்பாதே ஆகாச கப்பல் பார்
பொழுது விடிந்துவிடும் பூபாளம் நீதூங்கு.

இந்த தமாஷ்பாட்டை நான் ரசித்தாலும் காந்திமதிக்கு ரசிக்க முடியாமல், தாலாட்டிலே புதிய திருப்பத்தைப் புகுத்தினாள். தாலாட்டை வைத்துக் குடும்பப் பூசலை உண்டாக்க முடியுமென்று காட்டிவிட்டாள். தன் உறவினர்களை உயர்த்தியும், என் உறவினர்களை தாழ்த்தியும், பிஞ்சு உள்ளத்திலே புகுத்தினாள்.

மாமா அடித்தாரோ
மல்லிகைப் பூ கையாலே

மாமி அடித்தாளோ
அம்மிக் கையாலே

இதைக் கேட்டு நான் சும்மா இருக்க முடியுமா? என்னருமைத் தங்கை பாலாவின் காதில் விழுந்தால் எத்தனை பெரிய பூகம்பம் நிகழ்ந்துவிடும். 'மீனு, நீ உன் சகோதரனை உயர்த்தியும், என் சகோதரியைத் தாழ்த்தியும் பாடாதே', என்றேன். அவள் ஏன் நிறுத்துகிறாள்?

சித்தி அடித்தாளோ
செவ்வந்தித் கையாலே
சித்தப்பா அடித்தாரோ
சிறு நெருஞ்சிக் கையாலே.

"நிறுத்திவிடு மீனு. பாட்டை நிறுத்து" என்றேன். எங்கள்வீட்டில் புகுந்துவந்து என்னைப் பார்த்து கோஷமிட்ட சண்முகம் கோஷ்டியாரைப் போன்று காந்திமதியை நான் இறைந்தேன்.

"நான் பாடுவேன், எனக்குத் தெரிஞ்சதை"

"அதற்காக குத்தலாக எங்கள் குடும்பத்தைத் தாழ்த்தணுமா?"

"தாழ்த்திப் பாடறதைவிட, அக்கா தன் குடும்பத்தை உயர்த்திப் பாடணுமா?" என்றான் நீ இரங்காயெனில்.

"என் குடும்பத்தைத் திட்டினே நான் பொல்லாதவனாக இருப்பேன்." என்று பயங்காட்டினேன்,

"சித்தப்பா அடித்தாரோ
சிறு நெருஞ்சிக் கையாலே.

என்று காந்திமதி பாடவே நான் எழுந்தேன். நீ இரங்கா யெனில் எங்கள் குரோதத்தை மாற்ற

அம்மா அடித்தாளோ
அம்மிக் கையாலே
அப்பா அடித்தாரோ
அரிவாள் கையாலே

எனப் பாடினதும் நாங்கள் வருத்தத்தை மறந்து சேர்ந்து சிரித்தோம்.

சிரிப்பு வாழ்க்கையில் எப்போதும் கிடைக்கும் பொருள் அல்லவே. அழுகைதான் எப்போதும் அள்ள அள்ளக் குறையாத பொருள். எங்களுக்குள் சந்தோஷம் வளர்ந்ததா? அல்லது சர்ச்சை வளர்ந்ததா என்பது விவா தத்திற்குரிய விஷயம். முக்கியமாக எனக்கு மேல் உத்தி யோகம் கிடைத்தது. ''பையன் பிறந்த வேளை' என்று பாராட்டினார்கள். பையன் பிறந்ததினால் எனக்கு அதிர்ஷ் டம் ஏற்பட்டால் அவன சம்பாதிக்கும் காலமாக இருக்க வேண்டும். அவன் பிறந்தது முதல் ஆபீஸ் வேலைக்கு இடையூறு செய்கிறான். இவனைப்போய் என் அதிர்ஷ் டத்தோடு இணைப்பது தவறான காரியம். நான் உழைக்க உழைக்க, எனக்கு மேலாக உள்ளவர்களிடம் நற்பெயரும் புதிய புகழும் உத்தியோக உயர்வும் பெறுகிறதோடு, இவ னுக்கு உயர்வில்பங்குதருவது விந்தையே! ஒருவேளை பிறவியி லேயே என் உழைப்பைத் தன் அதிர்ஷ்டத்தோடு சேர்த்துக் கொண்டவன், உழைக்காமலே நிறையச்சம்பாதிக்கும் சோம் பேறிகள் கூட்டத்தோடு சேர்வானோ என்னமோ. நாளை நடப்பதை யாரறிவார்?

என் உழைப்புக்குக் கௌரவம் கொடுக்காது, பிள்ளை பிறந்த வேளைக்கு கௌரவம் கொடுப்பதை நான் சகித்துக் கொள்ளுகிறேன். ஆனால் வரவர, நான் அற்ப பொரு ளாகவும் அற்பப் பொருளான சிறுபயல் மேரு மலையாகவும் வீட்டில் இடம் கொள்ளுவதைச் சகிக்க முடியுமா? மனைவி மதிக்காத ஒருவனை, மற்றவர்கள் மதிக்க மாட்டார்கள். புருஷன் இருக்கிறானே என்று தன் குரலை அடக்கிப் பேசாத மனைவியைத் தேடிவரும் சிநேகிதிகள் தாங்களும் அடக்க ஒடுக்கமாகப் பேசமாட்டார்கள். வீட்டுத் தலைவியின் தன் மைப் படியே, வீட்டுக்கு வருவோர் போவோர் நடப்பார்கள். என்னிடம் சற்று மரியாதையுடன் பழகும் மாமனார்கூட

என்னை லட்சியம் செய்யவில்லையென்றால் வேறு யார் லட்சியம் செய்யப்போகிறார்கள்.

காந்திமதிக்கு வளைகாப்பு ஆரம்பித்த காலத்திலேயே நான் இருக்கிறேனா, இல்லையா என்ற அக்கறை குறைய ஆரம்பித்தது. உங்களுக்குத் தெரியும் குழந்தைக்கு ஆறு மாதங்கள் எட்டு மாதங்கள் ஆக ஆக நான் உருவத்தையும் இழந்த அருவம் ஆன நிலையை எட்டிவிட்டேன். நான் உண்டதும், உறங்கியதும் யாருக்கும் தெரியாது; தெரியும் கவலையைக்கூட எவரும் எடுத்துக்கொள்ளவில்லை. என் தந்தையே என் சுகம்பற்றி நலம்பற்றிக்கடிதம் எழுதுகிறவர் வரவர பேரனைப்பற்றிய க்ஷேமலாபங்களைக்குறித்து எழுதுவார். வீட்டிற்குப் புதிதாக யார் வந்தாலும், சின்னப்பயல் சௌக்கியமா? தவழ்கிறானா? நீந்துகிறானா? சிரிக்கிறானா என்கிறார்களே தவிர, என்னைச் சீந்துவார் இல்லை. பெண், மணமேடையில் இருக்கும்போதும் பலருடைய கவனத்துக்கும்ஆளாகிறாள்;குடும்பம் நடத்தும் போதும்,குழந்தைப் பேறுகொண்ட காலத்தும், பலருடைய பாராட்டுதலுக்கும் அனுதாபங்களுக்கும் ஆளாகிறார்கள். அப்பாவி ஆண்மகனை ஏறிட்டுப் பார்ப்பவர்கள் எவரும் இல்லை. இல்லையே! பயலின் ஆதிக்கம் வீட்டிற்குள் அதிகம் ஆக ஆக உரிமைகள் பொருள்கள் பறிக்கப் பெற்றன. "ஆத்மா வைஜாயதே புத்ர" தந்தையின் ஆத்மாவே புத்திரனாகப் பிறக்கிறது என்று சுலோகங்கள் சொல்லியும் தந்தையை எண்ணுவார் இல்லை. தந்தையின் முதல் விரோதி குழந்தை என்ற முடிவுக்கு வந்தேன்.

என் முடிவை ஊர்ஜிதம் செய்யும் பொருட்டு, காந்திமதி மணிக் கணக்கில் பேசுவாள்; இவள் பேசுவதில் ஒரு மண்ணாங்கட்டியும் பயலுக்குப் புரியாது; அவன் பதிலுக்குப் பதில் பேசுவதாகவும் அவனுடைய அம்...உம்...ஹிம் என்ற உளறலுக்கும் வியாக்கியானங்களைப் பக்கம் பக்கமாக அடுக்குவாள். "தலைமட்டும் இரண்டென்றாலும், குழந்தை

யும் தாயும் ஒற்றைக் குலேயேயாம்; உயிரும் ஒன்றே உள்ளத்தின் கூடும் ஒன்றே" என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாய் விளங்கி நின்றார்கள். அளவிற்கு மிஞ்சினல் அமிழ்தமும் நஞ்சு யென்றார்கள். மலர்போல குழந்தைக்கு முகம் இருக்கட்டும் அதனைக்காண காலம், பொழுது, நேரம், கிடையாது? சதா இதுவேதான் நடந்தது. வீட்டு வேலைகள், அன்றாட கடமைகள் எல்லாம் அறவே மறந்தாள் காந்திமதி.

ஆபீஸ் பைல்களை எங்கே வைத்தேன் என்ற நினைவின்றி தேடினேன். இதற்கு முன் இத்தனை மறதியும் கிடையாது; மீனுவின் உதவியும் இருக்கும். இப்போது உதவிக்குப் பதில் இடைஞ்சல். நான்படும் அவஸ்தையை அறியாமல், "நீதாண்டா தங்கக்கட்டி, கண்ணு! சீ சீ முழிக்கிறதைப் பாரு! கொட்டைப் பிராந்து கண்ணைக் குத்த வருது" என விளையாடினாள். இந்த விளையாட்டுக்குச் சிரிப்பு அலை அலையாக வீடே இடியும்படியான கல கல கல கலச் சிரிப்பு துணையாக நிற்கும். குழந்தை எந்த அர்த்தமற்ற சொல்லுக்கும் சிரிக்கும். வயிறு நிறைந்தால் அது செய்வது சிரிப்போ அல்லது துக்கமோதான்.

குழந்தையின் சிரிப்பைக் கேட்ட பாட்டி, "ஏன் மீனு இசகிப் பயல் என்ன சொல்லுகிறான்." என்று கேட்பாள்.

"பாட்டியைக் கட்டி கொள்வானும்" என்பாள். மீனு தன் தாயை தன் மகனுக்குப் பெண்ணாகப் பேசுகிறாள்! என் காதில் விழும்படி பேசுகிறாள் ஒரு பிள்ளை பெற்றதும் சில உரிமைகளைத் தாங்களாகவே பெண்கள் எடுத்துக்கொண்டு விடுகிறார்கள். சொல்லக்கூடாதவற்றை அடிக்கடி பேசுவார்கள். நான் பைலை கண்டுபிடித்து நாவல் புத்தகத்தைத் தேடுகிறேன். எனது துயர் தெரியாமல் தாயும் மகளும் சேர்ந்து கண்ணனோடு சிரிக்கிறார்கள். நான் இருப்பதைக் காந்திமதி அறவே மறந்துவிட்டதால், அவளைப்பெற்ற தாயும் மருமகன்' இருப்பதை மறந்துவிட்டுச் சிரிக்கிறாள்! எல்லாம் நான்பெற்ற பிள்ளையால் வந்த அவமானம்.

"அங்கே என்ன சிரிப்பு?" அவர்கள்பெற்ற சிரிப்புக்காக நான் கோபம் கொள்ளுகிறேன். என்னைக் கவனிக்க ஆள் இல்லையென்ற கோபம் அவ்வாறு குமுறி வருகிறது.

"அவர்கள் கோபிக்கிறுங்க, போய் என்ன ஏதுவெனக் கேள்." என்பாள் மாமியார்.

தாயின் பேச்சை லட்சியம் செய்யாமல், "அவுங்களுக்கு என்ன? எதையும் சொல்லுவாங்க. நீ போம்மா" என்று மேலும் அலட்சியமாகப் பேசினுள்; மேலும் கடகடவெனச் சிரித்தாள். நான் படுகிற மனவேதனையை யாரிடம் போய்ச் சொல்வேன்?

"இந்த வீட்டில் மனுஷர்கள் இருக்கிறுர்களா இல்லையா?"

"ஏன் கத்துறீங்களாம்?"

"நீ போய் கேளம்மா, மீனு. அவனை நான் வைச்சுக் கொள்ளுகிறேன்"

"நீ சும்மா இரம்மா. அவர்களுககு வால் பிடிச்சுக் கொண்டு பக்கத்திலே நான் நிற்கமுடியுமா?" என்றவள் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு காம்பீர்யமாக வருவாள். என் குரலில் இருக்கும் ஆத்திரம் அவள் வரவைக் கண்டு நெகிழ்ந்து சாந்தமாக மாற முயற்சி செய்யும். ஆனுலும் ஜம்பம் விட்டுக்கொடுக்காமல், "எங்கே புத்தகம்? நாவல் எங்கே?" என்று கேட்டேன்.

"நாவலும் கீவலும் படிக்க எனக்குப் பொழுது இல்லை. எங்க ராஜு கட்டி சொல்லுவானே ஆயிரம் கதை" எனக் கன்னத்தை கிளு கிளுக்க வைப்பாள்... அந்தப் போக்கிரி குழியக் குழியச் சிரிப்பான்.

"உங்களிடம் தான் நாவலைக் கொடுத்தேன் நேற்று"

"என்னிடமா?" என்று யோசனையில் ஆழ்ந்திருக்கும் வேளை, பயல் என்னிடம் வரத் தாவுவான். பொய்யான கோபங் காட்டி கண்ணை உருட்டுவேன். அவன் ஏன் பயப்

படுவான்? என்னோடு புத்தகத்தைத் தேட மீனு ஆரம்பம் செய்வாள். என்னுடைய பொருள்கள் பல மேஜை, பீரோ இதற்கடியில் கிடக்கும். முன்னாளில் ஒழுங்காகவும், அடுக்காகவும் வைக்கப் பெற்ற எனது சாமான்களை இன்று வாரி இறைத்திருக்கக் காணலாம்.

"இதெல்லாம் என்ன? இது வீடா? பூகம்பம் வந்த பூமியா?"

"எங்கே நேரம் இருக்கிறது. இவன் விடுகிறானா?"

இந்த வேளையில் மீனுவைப் பெற்ற தாயார் நாவலைக் கொண்டுவருவாள். தண்ணீரில் கிடந்த பெருச்சாளி மாதிரி நாவல் ஊதிப்போய் பக்கங்கள் பல இல்லாமல் கொண்டு வரும் காட்சியைப் பார்க்கிறேன்,

"அடே......நேத்து வெந்நீர் பானைப் பக்கம் கிடந்தது. இந்த நாவலா?" என அனுதாபம் காட்டுவாள்

"உனக்கு வர வர அஜாக்கிரதை அதிகமாகப் போய் விட்டது" என இறைவேன்.

"அவன் அந்த நாவலின் அட்டையைப் பார்த்து அழு தான். விளையாடியதும் எடுத்துவிடலாம் என்று நினைத் தேன். மறந்துபோய்விட்டேன்."

"பார்த்தாயா, என் பேனாவை எடுத்து விளையாட்டுக் காட்டினாய்; கைகடிகாரம் காணாமலே போய்விட்டது. ஆபீஸ் வாசகசாலையிலிருந்து பெற்ற நாவல், இப்போது தண்ணீர் பெருச்சாளி ஆகி இருக்கிறது, இனியென்ன, நீ தொலைத்துத் தலைமுழுக வேண்டியது தான் பாக்கி. அதை விரைவில் செய்யப் போகிறீர்கள்"

"வர வர ராஜூவைக் கண்டால் உங்களுக்குப் பிடிக்க வில்லை, நீங்களே கரிச்சுக் கொட்டினால் வேறே யார் தான் கரிச்சுக்கொட்ட மாட்டார்கள்"

பார்த்தீர்களா, எதற்கு என்ன பதில் வந்தது! நானும் கோபத்தில், "இனி இந்த வீட்டிலே என்றால் ஒரு கணம்

இருக்க முடியாது; நீங்கள் எல்லாம் என்னைப் பிச்சைக் காரனாக நடத்துவதை என்றால் சகிக்க முடியாது" என்று கத்தினேன்.

"கேளுடா ராஜு. உங்கப்பா, ஓட்டலிலே போய் ஹாயாக ரூம் எடுப்பாங்க. அப்போ, புதிசா ஒரு நடன ராணி, நாட்டிய உல்லாசினி வருவா...ஜாம்ஜாம் இவங்க தலையை நீட்டித் தரிசனம் செய்யப்போகிறார்களாம்" என்று சொன்னாலும் பரவாயில்லை. சிரித்தாள். என்னைத் துரும் பாக எண்ணியதோடு காற்றில் தூக்கிப் பறக்கவிடவும் அவ்வளவு தைரியம் எப்படி வந்தது?

மீண்டும் எனது உறுமல். "என்ன சொன்னே ஜாக் கிரதை" என்றேன்.

"செய்யாததைச் சொல்லவில்லை. நீங்கள் ஓட்டலில் தங்கி அந்த நடன ராணி..."

நடன ராணியின் பெயரை உச்சரிக்குமுன் ஓங்கி ஒரு அறை அவள் கன்னத்தில் கொடுத்தேன். எதிர் பாராத உதை விழவே அவள் விடுவிடுவென அழுது கொண்டு போனாள். தாயின் இதயங்கொண்ட பாலகனும் அழுதான். இரு குரல் அழுகையைச் சகிக்காத நான் ஆபீஸ் நோக்கிப் பட்டினியாகப் புறப்பட்டேன். என் மாமியார் எத் தனையோ சொல்லியும் வேண்டியும் உணவருந்தாமலே போய்ச்சேர்ந்தேன்.

பாதி அழுகையுடன், "சாப்பிடுங்கள்" என்றாள் காந்திமதி.

"நாய்க்குப்போடு. சாப்பாடு! என்ன சாப்பாடு?" என்று வழிமறித்தவளைத் தள்ளிவிட்டு விரைவாக நடந்தேன். சும்மாவா ஒளவையார், "மதியாதார் தலைவாசல் மிதியாமை கோடி பெறும்" என்றார்? பயம் போய்விட்டது. பக்தியும் போய்விட்டது. பணிவும் போய்விட்டது, குழந்தை பெற்ற தும் கணவனுக்கு எஜமான் ஆகிவிடுகிறாளா மனைவி? பார்க்கலாம் ஒருகை!

# 13. யார் எஜமானன்?

அரும் பாலகா! முனம் பூமணஞ் சொற்பொருளாக, உயிர்
கரும் பாஞ் சுவை, யெள்ளும் எண்ணெயும் போலொத்த
காதலரைப்
பெரும் பாலில் நல்லன்னங் கங்கா சலத்தைப் பிரிப்பதுபோல்,
கரும்பாம் புலவர் யமனுகச் செக்கெனத் தோன்றினையே.

—பலபட்டடைச் சொக்கநாத புலவர்

"நடிப்பிலே சிறந்தவளாக இருந்தாலும் குடும்பத்து ரகளையை முகத்தில் கண்டுபிடித்துவிடலாம். உங்களுக்குள் என்ன சண்டை?" என்று என்னை விசாரித்தபோது நான் திடுக்கிட்டேன். நான் என்னவோ சாமர்த்தியமாகத்தான் நடித்தேன். வீட்டில் கோபித்துக்கொண்டு வந்திருப்பது என்னமாகத் தெரிகிறதோ? எனது மேல் உத்தியோகஸ்தர் இவ்வாறு கேட்கவே, நடந்த விபரங்களைச் சொன்னேன். எனக்குப் பரிந்து பேசாமல் அவர் தத்துவம் பேசினுர்.

எனக்குள்ள கோபத்திற்கும், காந்திமதியை நான் அடித்ததற்கும் காரணங்கள் என் மனம் என்றுர். மனசிற்குள்ளாக ஒரு தனி உலகம் இருக்கிறது என்றுர். முதலில் சிரிப்பு வந்தது. உண்மையில் காந்திமதி சொல்லிய சொற்கள் என் மனசை வாதனை செய்யவில்லையாம்; காந்திமதி என்னிடம்காட்டிய அலட்சியமும்,குழந்தையிடம் காட்டும் பரிவு என மனசிலே புகுந்து தொல்லை தருகிறதாம். முக்கியமாக காந்திமதி குழந்தையின் தாயாக நடமாடுகிறுளே தவிர, மனைவிக்குரிய ஸ்தானங்களை வகிக்கவில்லை; ஆகவே எனக்குள்ள உடமையை, என் குழந்தை பறித்துக்கொண்டதில் நான் பொருமைப் படுகிறேன்; சிறு குழந்தையிடம் கோபத்தைக் காட்ட இயலாத காரணத்தால் மனைவியிடம் கோபத்தைப் பன்மடங்கு காட்டு

கிறேன். அன்றுடம் என் சுக சௌகர்யங்களைக் கவனிப்பதே தன் தொழிலாக வைத்திருந்த காந்திமதி வேலைத் தொல்லையாலோ அறிந்தும் அறியாமலும் என்னைக் கவனிக்க மறந்து போனுள். தன்னைக் கவனிக்கவில்லையென என் உள் மனது குறை கண்டது. அதைச் சொல்ல முடியாமல் அவளது சிறுகுற்றத்தைப்பெரிதுபடுத்தியது. ஆகவே அடிவிழுந்தது. இத்தனையும் மேல் உத்தியோகஸ்தர் மனத்தத்துவ முறையில் சொல்லச் சொல்ல எனக்கும் அது உண்மையென்று படுகிறது.

அவர் முன்னிலையில் புருஷன் என்ற கௌரவத்தில் நான் விரைப்பாக இருந்துவிட்டேன். தனித்திருந்த சமயம் என் உள்மனசும் வெளிமனசும் தர்க்கம் செய்துகொண்டன. எனக்குள்ள இடத்தை என் குழந்தை பற்றிக்கொண்டதின் காரணமாகவே, காந்திமதியை, அவள் செயலை வெறுக்கிறேன் என்ற முடிவுக்கு வந்தேன், ஒரு குழந்தை பெற்றவள் கணவனை மறக்க ஆரம்பிக்கிறபோது இன்னும் குழந்தைகள் பிறந்தால் எனக்கு அவள் அன்பில் பங்கே கிடையாதோ என்று எண்ணுவேன். கோபித்துக்கொண்டு போன தினத்தில், ஓட்டலை நாடிப்போய் தூங்காமல், நீ இரங்காயெனில் வீட்டில் தூங்கிக்கண் விழித்தேன். அவன் சமாதானம் செய்து வைத்தான். மறுநாளுக்கு மறுநாள் வீடு புகுந்தேன்.

முன்பொரு சமயம் கோபித்துக்கொண்டு போனதும் என்னைத் தேடி பம்பரமாகச் சுற்றிய காந்திமதி இப்போது நான் இருக்கும் வீடு தெரிந்தும் கூப்பிட வரவில்லை. பிள்ளை பெற்றவர்களுக்கு நெஞ்சழுத்தம் அதிகம்; புருஷனே கதி என இருக்க வேண்டுவதில்லை. பேதைப் பெண்ணை பிள்ளையும் குட்டியுமாக அலையவிட்டு விட்டுப் போய்விட்டான் என்று கணவனையே உலகமும் திட்டும். உலகத்திற்குப் பெண்களை கண்டுவிட்டால், நியாயம் மறைந்து, அநியாய வழியிலேயே நின்று பேசும். ஆம், நிறையப் பேசுமே.

என்னை வந்து மாமனாரும் மற்றும் இரண்டொருவரும் சமாதானம் செய்து அழைத்தார்கள். நானும் பிகு செய்து கொண்டுபோய்ச் சேர்ந்தேன். சண்டை போட்டுக்கொண்ட தம்பதிகள் மீண்டும் சமாதானம் அடையும் காலத்து அதிக மான பாசத்தைக் காட்டுவார்கள். காந்திமதி நான் வீட்டிற்குள் வந்ததும் என்னிடம் பேசுவாளா? எனக்கு வேண்டுவன டயப்படி நடந்தது. கண்விழிக்கு முன் பற் பொடி காத்திருக்கும்; நான் கேட்காமலே துணி மணி வந்து விடும்.

"இலை போட்டாயிற்று என்று சொல்லடா கண்ணு"

எப்படி இருக்கிறது வேடிக்கை? சிறுபிள்ளையிடம் சொல்லுவதாக பாவனை, குழந்தை வருவதற்கு முன்னால் நானும் சுவரைப் பார்த்துக்கொண்டு "இலை போட் டாச்சோ?" என்பேன்.

"போட்டிருக்கிறதே" என்று சுவரைப் பார்த்துக் கொண்டு அவள பதில் வரும். அந்நாளில் சுவருக்குள்ள கௌரவந்தான்,இன்று குழந்தைக்கு வந்திருக்கிறது.

சண்டை போட்டு, சமாதானம் ஆகிறபோது நடக்கிற பேச்சுக்கள்தான் தாம்பத்திய வாழ்விலே ரசமான பேச்சுக் கள். நேருக்கு நேர் கண்ணொடு கண் பார்த்து மனசைச் சொல்லாமல் சுற்றி வளைத்துச் சொல்வதிலே ஆனந்தம் இருக்கிறது; சமயாசமயத்தில் சண்டையும் இருக்கிறது.

"வீட்டிலே உளுந்து இல்லையடா கண்ணு. சொல்லு"

"பணம் இல்லையடா கண்ணு, அம்மாவிடம் சொல்லு"

"எங்காவது கடன் வாங்கியாவது வாங்கலாமெனச் சொல்லு."

வார்த்தை முடியுமுன் "கடன் வாங்குவதை அவனிடம் சொல்ல வேண்டுமா?" என்று எரிந்து விழுவேன்.

அழுகையின் ஊடாக "உங்களுக்குத்தான் என்னை கண்டால் வேப்பங் காயாக இருக்கிறதே. ஏன் வம்பும் தும்பும் பேசணும்" என அழுவாள்.

"கீலி அழுகை எதுக்கு. நேரடியாகச் சொல்லுகிறது. அவன் என்ன தூது? இக்கிணிப் பயல்" என்று திட்டும் போது மேல் உத்தியோகஸ்தர் சொல்லிய மனஸ் தத்துவம் நினைவிற்குள் வந்தது.

"இந்தா பாருங்கோ. உங்களை மாலையிட்டு கண்ட பலன் அழுகை தானே. வேறே என்ன சுகம் இந்த வீட்டிலே? அழுகைதான் மிச்சம்."

கோவென அழும்போது, அழுகைக்குத் தன் புருஷனே காரணம் எனச் சொல்லி அழும்போது, காரண கர்த்தா வாக அதுவரை இல்லாதவன், இருந்துதான் விடுவோமே யென்று திட்டவோ, மட்டரகத்தில் பேசவோ சமயா சமயத்தில் கை நீட்டவோ இது போன்ற கட்டங்கள் பிறக்கும். நானும் மனிதன் தானே; எனக்குள்ள மிருகத் தனம் விதிவிலக்காகுமா. மீண்டும் வம்பு அதிகமாகும். பயன், கண்ணீர்ப் பெருக்கு; நாலு நாள் கராம்புராம். காதல் பேச்சு, சரசம், குழந்தையின் மூலமாகப் பேச்சு...இத்தி யாதி...இத்தியாதி.

தீர்மானமாக ஒரு முடிவுக்கு வந்தேன். என் மனசிலே உள்ள கோபதாபம், வைஷம்மியம் எல்லாவற்றையும் அடியோடு துரத்திவிட்டு, காந்திமதி எனக்குள்ளவள் மட்டு மன்று, தாரத்தின் பதவியைவிட தாயின் பதவி உயர்ந்தது என்று முடிவு கட்டினேன். பெருமையுடன் வாழத் திட்ட மிட்டேன். இதுதான் கல்யாண மானவர்களுக்கு முடிவாக நேரும் கதி என்றும் அறிந்தேன். சமயாசமயங்களில் சுயரூபம் தலை தூக்கும்போது அறிவோடும் அன்போடும் அடக்கிக் கொண்டேன். காட்டிலே புகுந்து துறவு நெஞ் சத்தோடு வாழ்வதைவிட இல்லறத்திலே புகுந்து இனிமை நிறைந்த நெஞ்சோடு வாழ்வது மிக மிகக் கடினம். துறவியை விட, இல்லறவாசிக்குப்பலவகைத் துன்பங்கள் பல படித்த தாகப் புகும். புகப்புக அதனை வெல்பவன் இல்லறவாசி. தன்னை மட்டுமன்று தன்னைச் சார்ந்தவர்கள் மனசையும்

வென்றவனாக வாழ்தலே இல்லறம் என்பதை உணர்ந்தேன். உணர்ந்தேன். முக்காலும் உணர்ந்தேன்.

ஆனால்...?

ஆனால் போட்டுவிட்டதும் நீங்கள் சிரிக்க ஆரம்பிக்கிறீர்கள்; என் தோல்வியைக் கண்டு நகைக்கிறீர்கள். நான் ஆனால் போடுவது சிந்திப்பதற்காக. தருமம், நியாயம், அன்பு இவ்வழிகளில் செல்பவனுக்கு எத்தனை துயர்கள் காத்திருக்கின்றன, தெரியுமா? தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும் என்பது உண்மையாயிற்று. குடும்ப தர்மத்தில் சந்தோஷத்தில் ஒரு புல்லுருவி வந்து குடி புகுந்ததே. இன்னும் விளக்கமாகவே இதைச் சொல்லி விடுகிறேன்.

தருமம் தழைத்த நாளில் இந்த நாட்டில் "யார் எஜமான்?" என்ற கேள்விக்கே இடமில்லாமல் எல்லோரும் எஜமானர்களாய் இருந்தார்கள். எல்லோரும் இந் நாட்டு மன்னர்களாய் இருந்தார்கள். ஆனால் காலம் செல்லச்செல்ல, யார் எஜமானன் என்ற கேள்வி பிறந்தது. நம்முடைய அரசியல், சமூகவியல் இங்கே புகுந்து கேட்ட கேள்வி இன்று குடும்ப இயலுக்குள்ளும் வந்து விட்டது! நாட்டின் ஏற்றத் தாழ்வுக்குக் காரணம் அறிஞர்கள். முக்கியமாகக் கவிகளே பொறுப்பு. நம்முடைய கவிஞர்களில் பெரும் பாலோர் பெண்ணின் மனதை அறிந்தவர்கள். ஆண்களின் வேதனையைத் துளியும் அறியாதவர்கள். குடும்ப விளக்கென்றும் அறிவின் சுடர் என்றும், பொறுமையின் உரு கடமையின் தரு, அப்படி இப்படியெனப் பெண்களைப் புகழ்ந்தது ஆண்களுக்கு வக்காலத்து வாங்க, இலக்கியம் தொட்டு அரசியல்வரை ஆள் இல்லாது போய்விட்டது.

நான் குடும்பம் செய்ய ஆரம்பித்த நாள் முதலாய், அல்லது நான் சிறுவனாக இருந்த நாள் முதலாய் கவனிக்கிறேன். பெய்ரை வாங்குபவள் பெண்மணி; உயிரை வாங்குகிறவர்கள் பெண்மணி; பெயரையும் உயிரையும்

கொடுத்துக் காப்பாற்றியும் "சபாஷ்" என ஆண்மகனைத் தட்டிக்கொடுப்பார் இல்லையே. ஆண்களைத் தட்டிக்கொடுக்காது போனாலும், மட்டந்தட்டாமல் இருக்க வேண்டாமா? வீட்டிலே குழந்தை பிறந்துவிட்டால், யஜமான் என்ற பட்டத்தைத் துறப்பவன் தகப்பன். நான் பட்டம் இழந்தேன்; பதவி இழந்தேன். பலநாளும் கஷ்டம் அனுபவிக்கிறேன். எல்லாம் பிள்ளையின் பிரதாபம்.

இந்தக் கஷ்டம் என்றுமே நிலவிவருந்திருக்கிறது. பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் ஆண்கள் படுகின்ற கஷ்டத்தைப் பெண்கள் படுவதாகக் கவிதையில் சொல்லுகிறார். நாயகிபாவவழிபாடு கவிதைக்குள் ஏற்பட்டது. எதையும் பெண்களின் கண்கொண்டு பார்க்க முற்பட்டார்கள் கவிகள். குழந்தை பிறந்ததால் தனக்குக் கஷ்டம் வந்ததாகச் சொல்லுகிறாளாம். இது உண்மையா? இது பொய். கவியின் கற்பனையென்பதை நான் சொல்லும் விதங்களிலிருந்து நீங்கள் தெரியப் போகிறீர்கள்.

கவிதைசொல்லுகிறது:—

"அப்பாமகனே. அருமையான பாலகனே. எந்த நேரத்தில் நீ பிறந்தாயோ. உன்னைப் பெற்றது முதல் என்ன நேர்ந்தது சொல்லுகிறேன கேள். நானும் அவரும் மலரும் மணமுமாக இருந்தோம்; நீ வண்டு போல வந்து மலரையும் மணத்தையும் பிரித்தாய். அம்மட்டுமா? சொல்லும் பொருளுமாக இருந்தோம் புலவனைப் போல வந்து எங்களைப் பிரித்தாய். கரும்பும் சுவையுமாக இருந்தோம்; நீ கரும்பாலையாக வந்து கசக்கிப் பிழிந்தாய், எள்ளும் எண்ணெயுமாக இருந்தோம்; செக்குலக்கை ஆனாய். பாலும் தண்ணீருமாக இருந்தோம்; அன்னப் பறவையாக வந்து பிரித்தாய்."

இவ்வளவு தூரம் கசப்பு ஏற்பட்டு, 'குழந்தையைச் செக்குலக்கை, என்கிறார். வண்டு, புலவன், கரும்பு ஆட்டும்

ஆலே என்றெல்லாம் சொல்லுகிருளாம் பெண், பெண்கள் சொல்லுகிற சொல்லா? என்போன்ற ஆண்வர்க்கம்சொல்லு கிற சொல்லே, சொல்ல வேண்டிய சொல்லேப் பெண்கள் வாயிலாகச் சொல்வதில் கவிகளுக்கு ஒரு மகிழ்ச்சி. சை! தைரியத்தோடு நான் நினைக்கிறேன் என்று சொல்லும் வீரம் கவிகளுக்கு [பெண்மை நிறைந்தவர்களுக்கு] ஏது? எனக்கு மட்டும் கவிதை எழுதும் திறமை இருந்தால் "நாயகி பாவத்தோடு" பார்க்காமல். நாயகன் பாவத்திலே முரட்டு கவிதைபாட முடியும் என்பதை நீங்களே சொல்லுவீர்கள்.

என்ருல் காலேயில் எழுந்திருக்க முடியவில்லே; அல்லது எழுந்திருக்கிறேன்; இரண்டுக்கும் மூல காரணம் கண்ணன் பயல். நான் காப்பி சாப்பிட முடியவில்லே; கண்ணனே காரணம். பாரதிக்கு, கண்ணன் பல நிலேயிலும் கவிதைக் குப் பொருளாக இருந்தது போலவே என் துயர்களுக்குப் பிறப்பிடமாக இருந்தவனும் கண்ணன்.

"ஏ காந்திமதி காலே பேப்பர் எங்கே"

"வாசல் ரேழியில் கிடக்கிறது"

"எடுத்து வா"

"ராஜூப்பயல் கையில் இருக்கிருன்"

நான் போய் எடுக்கப்போகிறேன். சில நாள் பேப்பரை நான் படிக்கும் முன்பாக முன்னதாகவே அவன் கிழித் திருப்பான். பல் துலக்கப் புறப்பட்டால், எனது பிரஷ் அவனது விளேயாட்டுப் பொருள். பற்பொடி டப்பாவில் தாள வாத்திய லய விந்யாசங்கள் நடைபெறும். பல்லேக் கடித்துக் கொண்டு, பல் துலக்கி வந்து டவலே எடுக்கப் போனுல், பயல் விரித்திருப்பான்; தலே துவர்த்துவதற்கு ஏற்கனவே உடுத்திய வேஷ்டியேடவலாக மாற்றவேண்டும்.

"ஐவங்கீர்,எங்கே?"

கத்திப் பயன் இல்லை. காந்திமதி இருக்கும் இடம் சென்று விளையாட்டாக "அம்மணி அவர்களே நான் எப்போது குளிக்கிறது? நான் எப்போது உணவருந்துவது, இந்த ஏழை எப்போது அலுவலகம் செல்லுவது?" என்று சொல்வேன்.

"சொல்லுடா கண்ணு அப்பாவுக்கு, போய் ஒழுங்கா குளி; சாப்பிடு; ஆபீசுக்குப் போய் சம்பாதியின்னு சொல்லு" என்று குழந்தை வழியே அஞ்சல் செய்வாள்.

"நீயே குளிப்பாட்டி விடேன்"

"ஐயே, நீங்களும் பச்சைக் குழந்தை, உங்களை நான் குளிப்பாட்டிவிடணும்"

இந்த வேளையில் நீ இரங்காயெனில் வருவான். "குழந்தை யாராம்? மீறு அக்கா, மணி வர வர குழந்தையாகத்தான் ஆகிறான்." என்று சொல்லும்போது, குளிக்கும் அறையில் நுழைவேன்.

நீ இரங்காயெனில் பாடுவான்.

அப்பாவின் கோபமடா — ராஜா
ஆகாத கோபமடா
அதனை நீ கொள்ளாதே—ராஜா
அசட்டுப் பேர் வாங்காதேடா

இவ்வாறு அவன் வாடுவதை உள்ளூர ரசிக்கும் போது எனக்கு வெந்நீர் இருக்காது. மனைவிமீதுள்ள கோபம் வேலைக்கார வள்ளி மீது திரும்பும். "ஏ வள்ளி உனக்கென்ன கொள்ளை. வெந்நீர் எங்கே" என்று வெளியேவந்து கேட்டால் அவள் சொலும் பதில் இதுவே.

"இட்டாச்சு......புடி புடி...கள்ளப்பயலை புடி."

எனக்கு எப்படியிருக்கும். "இட்டாச்சு...பட்டாச்சு-காதிலே விழவே, "வெந்நீர் எங்கே?"

'வெந்நீர் இப்பத்தான் அடுப்பில் போட்டிருக்கிறது. குழந்தைக்கு இன்னைக்கு எண்ணெய் கொடுத்திருக்கு மடியில் வைச்சிருக்கிறேன்."

"இந்தா வள்ளி அவுங்களுக்கு வெந்நீர் இல்லே, எண்ணெய் குடிச்ச குழந்தைக்காக வெந்நீர் என்று சொல்."

"இதை நான் சொல்லணுமா? தானே தெரிஞ்சுக்குவார் அவரு"

குளிர்ந்த தண்ணீரிலே என் கோபக்கனலை குளிர விட்டேன். வெந்நீர் கிடையாத பொருளாகி விட்டது. வெந்நீர் மட்டுமா? நல்ல சாதம் ருசியான குழம்பும் இப்படியே கிடையாப் பொருள்கள் பல.

"இது குழம்பா..." என்று கத்தினல், காந்திமதி சும்மா இருக்க, "அட ஏஞ்சாமி கத்தரே. சின்ன எஜமான் தூங்குகிருர்" என்று வள்ளியிடமிருந்து பதில் வரும்.

"இது என்ன தினம்தினம் ஜீரக ரசம்?" என்று கேட்பேன்.

"ஆமாம் குழம்பு இல்லே. ரசம்தான்"

"இது என்ன பதிலேச் சார்ந்தது, குழம்பு எங்கே?"

"எத்தனை நாள் சொல்லணும்? அவன் எண்ணெய் குடித்தால் நான் பத்தியமாகச் சாப்பிடவேண்டுமா?"

"நான் எதற்காக பத்தியச் சமையல் சாப்பிட வேண்டும்? வேறே ஒரு சாம்பார், தக்காளி ரசம்..."

"என்னுலே ரசம் வைக்கவே நேரமில்லே."

ஏதோ உண்டு உதறி எழுந்து டிபன் பாக்ஸை தேடினல் அகப்பட்டது.

"எங்கே டிபன்?"

"சாப்பாடே வெல்லக்கட்டியா இருக்குதே எங்கே டிபன் செய்ய விடருன்?"

"அப்போ பட்டினி கிடக்கணுமா?"

"ஆபீஸ் காண்டினிலே சாப்பிடுங்கள். கான்டீன்னிலே டிபன் சாப்பிடுவதே கிடையாதா? நாட்டிய ராணி வந்த போது சாப்பாடே சாப்பிட்டவங்கதானே"

"நல்ல பிள்ளை வந்து வாச்சுது. வாய் ருசியும் கை ருசியும் போச்சு...என் கோட்டை எங்கே?"

"பழைய கோட்டுத்தான் போடணுமா?"

"அதை வித்துவிட்டாயா?"

"நேத்து கிலுகிலுப்பையும், வெண்கலக் கிண்டியும் வீதியிலே வந்தது."

"கோட்டை வித்து பால் குடிக்கக் கெண்டி வாங்கினே இருக்கிற கெண்டிகளில் கொடுக்கிறது. வெள்ளிக் கெண்டி மூணு கிடந்தது."

"அதை அடிச்சு நொறுக்கிருன்"

"ஒரு நாளைக்கு இந்த வெண்கலக் கெண்டியாலே உந் தலையை உடைப்பான் பார். நடத்துங்க உங்க சாம்ராஜ்யம்..." என்றவன் புதிய கோட்டை எடுத்துப் போட்டுக் கொள்வேன், அவள் வந்து போட்டுவிடமாட்டாளா என்ற ஆசை துளிர்க்கும்.

"இன்றைக்காவது பனிக்குல்லாயும் மாந்த மாத்திரையும் மறந்திடாமல் வாங்கி வாருங்கள்"

நான் பதிலே பேசாமல் ஆபீசுக்கு ஓடுவேன். ஆபீசில் போய் உழைத்து, ஓட்டலில் உண்டு, கடன்பட்டு மாந்த மாத்திரையும் பனிக்குல்லாயும் வாங்கிக்கொண்டு மாலையில் வருகிறவனுக்கு மரியாதை என்ன நடக்கிறது?

'என்ன சாமி டக்குடக்குன்னு நடக்கிறீங்க. மெதுவா நடங்க, இவ்வளவு நேரம் தொட்டிலையாட்டித் தூங்க வைக்கப்பட்டபாடு பெரியபாடு. மிலிட்டேரி கவாத்துபோல என்ன நடை வேண்டிக்கிடக்குது?"

அலுத்துச் சலித்து வந்த எனக்குக் கோபம் கொப்பளிக்கிறது. "நீ யாரு கேக்கிறது?" என்று இரைந்தேன்.

வேலைக்கார வள்ளி, "நீங்க என்ன நாஞ் சொல்லச் சொல்ல பொய்க்கால் குதிரைக்காரன் மாதிரி நடக்கிறீங்க" என்பாள்.

"இது என்வீடு நீ சத்தம் போடாதே"

"பாருங்க மீனு அம்மா; ஐயா இனமில்லாம சண்டைக்கு வர்றதை. என் கையே கடுத்துப் போச்சு... தொட்டில ஆட்டி ஆட்டி"

"முழிக்கட்டும் ராஜுப் பயல். அப்போ அவங்களிடம் தள்ளினுத்தான் தெரியும். ராத்திரியும் ஓட்டல் எடுப்பு இங்க எடுத்து வரும்படி நேரும்பாரு."

"நீ வைச்ச வேலையாளுன்னு நினைப்போ? வந்தவனுக்கு காப்பி இல்லை ஒரு மண்ணும் இல்லை"

பூட்சு காலை ஓங்கித் தட்டிக்கொண்டு மாடிக்குத் தாவுவேன். "இந்தாங்க" என்ற குரல் வரும். அந்தக் குரலில் பனிக்கட்டியின் குளிர்ச்சி இருக்கும்.

"என்ன?"

"கொஞ்சம் சொரசம் சாப்பிடுங்களேன்?"

"சொரசம் விளையாடறயா?"

"பயலுக்கு ஓமம் வைச்சு அறைச்சு மருந்து போட்டினேன், பசிக்கு நல்லது குடியுங்களேன்"

"ஏன் நீ வயிறுவெடிக்கச்சாதமும் வகைக்கறி போட்டதுக்கு மருந்து வேறே கேடு. பசி பெருங்குடலை தின்குது"

சிரிப்புடன் "ஓமமருந்து இல்லே-காப்பி குடியுங்க" என அன்பாகத் தருவாள். என்னை போற்றுவதில் அத்தனை மகிழ்ச்சி. அத்தனை கோபமும்போய்விடும். அவள்சிரித்தோ சிரிக்காமலோ என்னருகில் நிற்கிறபோதுதான் இந்த உலகத்தை மறந்துவிடுகிறேன். அவ்வேளையில் நீ இரங்காயெனில், "மணி இருக்கிருளு?" என்று கத்திக் கொண்டு வந்து, நிற்பன் கீழே வேலைக்கார வள்ளி, "இந்தா சார் கத்தாதே எஜமான் தூங்குகிருர்" எனக் கத்துவாள்.

"அப்படியா? எஜமானன் தூங்குருனா? ஆபீஸ் போகலே?"

"இந்த வீட்டிலே தூங்குகிறவர் யார்? அதோ தொட்டிலிலே'"

"சின்னப்பயலா?" எனச் சிரிப்பு.

"அட அவருதான் எஜமான். சிரிப்புக் காட்டி முழிக்க வைச்சுடாதே சார்.'.

"இவந்தானு வீட்டு எஜமான். பெரிய எஜமான் ஆபீ ஸிலே இருந்து வரலே"

காந்திமதி மாடியிலிருந்து வந்துகொண்டே, "வந்துட் டாங்க" என இறங்குவாள்.

"பார்த்தாயா மீனு அக்கா. எஜமான் என்ருல் இந்த வீட்டுக்கு இந்தப் பயல்தான் எஜமானும் எப்படி இருக் குது கதை!..."

"நிஜந்தானே" என்பாள் காந்திமதி. அருமையுடன் அன்பு கனியக் கனியக் கொடுத்த காப்பி குமட்டல் செய்யும். இந்த வார்த்தையைக் கேட்டால் எப்படி இருக்கும். என் தலை சுழலும். "டேய் மணி, வீட்டு எஜமானு னுமே இவன்?" எனக் கோபத்தைக் கிளறுவான்.

"பேசாதே"

"நீயாருடா என்னைப் பேசாதே யென்று சொல்ல? நீ இந்தக் குடும்பத்தில் வேலையாள்."

"ஆமாம். நீ இரங்காயெனில் நான் பெரிய முட்டாள்."

"கல்யாணத்திற்கு முந்தியா பிந்தியா?"

"பிந்தித்தான் முட்டாள்."

"கலியாணம் செய்யும் எவனும் முட்டாள் என்பது என் சித்தாந்தம்."

"ரொம்ப உண்மையடா"

"அட முட்டாள். குடும்ப பாரம்ஏற ஏற மனுஷன் புத்தி பேதலித்துப் போகிறது சகஜம்; உன்னிடம் உள்ள

குணத்தைக் கவனித்ததில் இன்னும் உனக்கு தன் சௌக்கி யத்தை விட்டுக் கொடுக்கும் சகஜ புத்தி வரவில்லை."

"போதும், போதும். நான் யார் தெரியுமோ, இந்த வீட்டில்? ஆண்டிப் பயல்!"

என் பேச்சில் குழந்தை விழித்துக்கொண்டது. காந்தி மதியும் வள்ளியும் எடுத்தனர். என் மடியில் கொண்டு வந்து தள்ளினர். நான் திகைத்தேன். நீ இரங்காயெனில் செய்த சேஷ்டைகளைக் கண்டு பயல் சிரித்தான். சிரிக்கும் குழந்தை அருகில் இருந்தால், நம் கவலை மட்டுமன்று, இந்த உலகமே மறந்துவிடும் நானும் வர வரச் சிரித்தேன்; என் சிரிப் புக்கு அவனையே யஜமானன் என்று எண்ணினேன்.

"அடடா, அப்பாவும் பிள்ளையும் என்னமாகச் சிரிச்சு மகிழ்ந்து போறீங்க?" என்று காந்திமதி கேட்க வள்ளி ஆமோதித்தாள்.

"டேய் எஜமானப்பயலாடா நீ...? சிரிக்கிறதைப் பாரு...இட்டாச்சு..." என்றேன்.

"இந்தச் சமயம் ஒரு காமிரா இருந்தால் நீயும் பிள்ளையும் சிரிக்கிறதைப் படமாக எடுக்கலாம்" என்ருன்.

இடியோசை கேட்ட நாகம்போல காந்திமதி நடுங்கிஞள். எனக்கு அவள் பயத்தின் விபரம் புரிய வில்லை.

# 14. போட்டோ எடுக்கிறார்கள்

புகைப்படம் எடுப்பதைச் சொல்வேன்—குழந்தை
வகைப்படம் எடுப்பதைச் சொல்வேன்.

வாட்டமின்றி யோட்டமின்றி
வாய்சிரிக்க வேணும்
பாட் டியின்றி ப்ராட்டனின்றி
படமெடுக்க வேணும்
அப்பனின்றி அம்மையின்றி
அதனையெடுக்க வேணும்
தப்பு யின்றி தயவு மின்றி
தனியே எடுக்க வேணும்

*—புகைப்படப் புலவனார்*

*தசரத சக்ரவர்த்தி ராமனுக்கு மகுடாபிஷேகம் செய்ய எத்தனை முயற்சிகள் செய்தாரோ; அது கற்பனையான காவியம்: நான் செய்த முயற்சிகளைச் சொல்லப் போனால், இதிகாசமாக வளரும். ராமபிரானுக்கு பட்டாபிஷேகம் நடத்த முடியாததுபோல கண்ணன் பயலை பல மாதங்களாகப் படம் பிடிக்க முயற்சிகள் செய்தோம்; ஆனால் திருட்டுத்தனமாக ஒரு சமயம் இதை மீனாவின் தாயார் கண்டுவிட்டாள்; என் தாயாரும் பார்த்துவிட்டாள்.*

*"ஐயோ, ஐயோ. குழந்தையைப் படம் எடுத்தால் ஆயுள் கம்மி. குழந்தை இளைத்துத் துரும்பாகப் போகும்" என்றனர்.*

*நீங்கள் இது கேட்டுச் சிரிக்கலாம். பலருடைய கொள்கைக்கு மத்தியில் குழந்தை வளருகிறது. நான் திருட்டுத்தனமாக, ஸீயிரங்காமொனில் தயவு கொண்டு படம் எடுக்க முயற்சித்த படங்களில் தலையிருந்தால் கால்*

இருக்காது; கால் இருந்தால் தலையிருக்காது. இரண்டும் இருந்தால் போதிய வெளிச்சமின்றி அம்மிக் குழவியாக கருங்கும்மென்றும் இருக்கும். பல நாட்களாய் முயன்றும் நடவாத காரியத்தைத் துணிந்து செய்து விடுவதென முடிவு கட்டினேம். நானும் கடையில் விசாரித்து வந்து விட்டேன்.

"எவ்வளவு ரூபாய் கேட்கிருன்?" என்று விசாரித்தாள் காந்திமதி. போட்டோ ஸ்டுடியோக்கள் இந்த நாளில் பஞ்சமில்லை; சலூன்களுக்கு அடுத்தபடியான எண்ணிக்கை இந்த ஸ்டுடியோக்கள் தாம். நாங்கள் எல்லோருமே போட்டோ ஸ்டுடியோவிற்குப் போவதெனத் தீர்மானம் செய்தோம். வண்டி இரண்டு வந்தன. நாங்கள் ஏறி அமர்ந்தோம்.

புகைப்படம் எடுப்பதிலே கஷ்டங்கள் இல்லை; குடும்ப சச்சரவு வராது என்று தீர்மானித்துத்தான் போனேம். ஆனல் புதிய பிரச்சனைகள் எழுந்தன. குழந்தையை யார் வைத்துக் கொள்வது, யாரிடம் இருக்கும் போட்டோ நன்ருக இருக்குமெனத் தீர்மானம் செய்தோம். முடிவுக்கு வராததுதான் தீர்மானம். எங்கள் தர்க்கங்களை யெல்லாம் போட்டோ ஸ்டுடியோக்காரர் உடைத்து விட்டார். "குழந்தையை யார் வைத்துக் கொண்டாலும் குழந்தையின் உருவம் சிறிதாக இருக்கும்; ஆகவே தனியே எடுப்பதே மேல்" என்ற யோசனை சொன்னர். போட்டோக்காரர் சொல்லிய யோசனையை நான் வரவேற்றது வம்பில் வந்து முடிந்தது.

வண்டிக்குள் இருந்தவர்கள், என் தாய், மாமியார் வேலைக்கார வள்ளி மூவரும் மனம் நொந்து போனர்கள். எல்லோரையும் சமாதானம் செய்ய ஒரு குரூப் போட்டோ எடுக்க ஸ்டுடியோக்காரரிடம் யோசனை கேட்க வந்தேன்.

"என்ன சார், நீங்கள் குரூப் போட்டோ எடுக்க வந்தீர்களா? குழந்தைப் படம் எடுக்க வந்தீர்களா?"

"குழந்தைப்படம்"

"அதை மட்டும் எடுத்துக் கொண்டு போங்கள். ஒவ்வொருவரும் தானே குழந்தையை வைத்துக்கொள்ள ஆசை பட்டால், உங்கள் பணத்திற்குச் சனி பிடித்திருக் கிறது. வேண்டாம். வீண் செலவைச் செய்யாதீர்கள். இன்று பிறர் தயவுக்காகச் சொல்லிவிட்டு நாளைக்குப் பணம் கொடுக்கும்போது என்னைத் திட்டுவீர்கள்."

"வாஸ்தவம். குழந்தையை மட்டும் எடுத்தாற் போதும்."

"தைரியமாகச் சொல்லி அழைத்து வாருங்கள்"

மீண்டும் நான் வண்டிப் பக்கம் போனபோது ஒரு வண்டி காலியாக நின்றது. "என்ன மீனு, எங்கே அவர் களை?" என்றதும், "நீங்கள்தான் குழந்தையுடன் படம் எடுக்க முடியாது என்கிறீர்கள். எங்கம்மா, உங்கம்மா வேலைக்கார வள்ளி மூன்றுபேரும் வந்ததே வந்தோம் மலைக் கோட்டைப் பிள்ளையாரையாவது பார்க்கலாமென்று போய்விட்டார்கள். குரூப் போட்டோ ஒன்றும், ராஜு பயலை தனிப்படம் ஒன்றும் எடுத்திருக்கலாம்" என்று சொன்னாள். என்னதான் கோபக்காரனாக இருந்தாலும் நடுவீதியில் மனைவியுடன் சண்டை பிடிக்கும் பண்பு எனக்கு ஏற்படுமா?

"சரி நீ குழந்தையை எடுத்துக் கொண்டு வா"

நாங்கள் ஸ்டுடியோவிற்குள் வந்தோம். போட்டோக் காரர் "உள்ளே போங்கள்" என்றார். காத்து இல்லாத அறையைக் கண்டதும் குழந்தை அலற ஆரம்பித்தது.

"அழுகையை சமாதானம் செய்யுங்கள் சார்; ஏதாவது பப்பர்மெண்ட் பிஸ்கோத்து."

"அடடா வாங்க வில்லையே?"

"குழந்தையைப் படம் எடுக்க வருகிறவங்க இது கொண்டுவர வேண்டாமா?" என்றவர் தமது வேலைக்கார பையனை பிஸ்கோத் வாங்கி வர அனுப்பினார்.

"நீ மடியிலே வைச்சுக்கோ, மீனு?"

"நீங்களே வைத்துக் கொள்ளுங்க"

"சார் அந்த மேசையிலே விடுங்க" என்ற அவரது குரல், பம்பரத்தை மேஜையில் விடுங்கள் என்ற மாதிரி இருந்தது.

"எப்படி சார் முடியும்? குழந்தை மிரண்டால், நிமிர்ந்தால் தொப்புன்னு விழுவானே. மேஜை அகலமாக இல்லையே"

"விழத்தான் போடச் சொல்லறேன்" என்றவர் சிரித்துக்கொண்டு குறும்புப் பார்வையுடன் "கீழே தரையிலே விழ அல்ல, காமிராவிலே விழத்தான் போடச் சொல்லறேன். உம் ரைட்" என்றார். வட்ட மேஜையில் போட்டுவிட்டு எங்கே கீழே விழுந்து விடுவானோ என்று நானும் காந்திமதியும் கண்கொட்டாது திக் திக்கென விழித்து நிற்போம்.

"மேஜையிலே துணிகூட இல்லை. ராஜுவுக்கு நெஞ்சை யழுத்துமே?" என்றாள் காந்திமதி.

"உன் பயல் நெஞ்சழுத்தக் காரப் பயல்தானே பாரேன் சிரிக்கிறதை...பிடியுங்க சார்..." என்றேன்.

இதே வேளையில் "அவன் விழுந்திடாமல் பிடியுங்க" என்று உத்தரவு கொடுக்கிறாள் தாய். "எப்படியம்மா விழாமல் பையனைப் பிடிக்க?" என்று சிலேடையைத் தட்டுகிறார் காமிராமேன். இதற்குள் அவனுக்கு மேஜை அலுத்து விடவே மிரள மிரள விழிக்கிறான். பார்வை காமிராவை விட்டுப் போய்விடவே, "அம்மா நீங்க இந்தப் பக்கம் வந்து கைதட்டிக் குழந்தையைக் கூப்பிடுங்கள்" என்று உத்தரவு பிறப்பிக்கிறார். நாட்டியம் சொல்லி

வைக்கும் நட்டுவாங்கத்தார் உத்தரவு போல காந்திமதிக்கு உத்தரவு வரவே, காந்திமதியும் குழந்தையின் அழகு அப்படியே படத்தில் விழக் கைதட்டினுள். பெயர் சொல்லி அழைத்தாள். பயல் சிரித்தான், வயிற்றைத் தூக்கி எழுந்தான். மேஜையில் தவழ ஆரம்பித்து விட்டான்.

ஓடிப் போய் பிடித்துக் கொண்டேன். "கெடுத்துப் பிட்டீங்களே. ஏ ஒன் போஸ் வீணுகப் போச்சே...இனி மேல் எங்கே வரும்?" என வருத்த மடைந்தார். "கீழே விழுந்திருப்பான் சார்" என்று மீண்டும் மேஜையில் வைத்தேன். உஷ்ணம் தாங்காமல் உடம்பெல்லாம் முத்து முத்தாக வியர்வை. என் பட்டுச் சொக்காயிலும் மடிப்பு அங்கவஸ்திரத்திலும் அவனது வியர்வையைத் துடைத்தேன். பயல் மேஜையில் படுக்க மறுத்தான். பிஸ்கோத்து வரவே, மேஜையில் படுத்தான்.

காமிராக்காரர், "சார் சார் நீங்களும் அம்மாவும் கால்மாடு தலைமாடா நின்று கூப்பிடாதீங்க." என்றுர். சினிமாவில் நடிக்க போயிருந்தால்கூட டைரக்டர் எங்களை இத்தனை பாடு படுத்தமாட்டார். அப்படியே ஒரு பக்கமாய் நின்று கூப்பிட்டோம். "தங்கக்கட்டி டேய் எமப் பயலே" இப்படி ஏதோ சொன்னேம். அவன் தலை தூக்கி எங்களைப் பார்க்கவேண்டுமே. அத்தோடு விடுகிருரா காமிராமேன்?

"சிரியுங்கள் சார்" என்று உத்தரவு போட்டார். நினைத்தவுடன் சிரிக்க உணர்ச்சியில்லாத நடிகரா நான்? பயல் இரையெடுத்த சிங்கம் தலையைக் கீழே போட்டுத் தூங்குவது போல தூங்குகிருன். கண்மூடி இருக்கிறது; பிஸ்கோத் செய்யும் வேலை. பயலை நிமிர வைக்க காமிராக்காரர் டம் டம் டும்...ஹை...இங்கே பாரு இதோ—என்றெல்லாம் கத்தினுர்...அவன் சிரித்தான். அவரது தலை கருப்புத் துணிக்குள் புகுந்தது. அவன் அழ ஆரம்பித்தான்.

"அழுகையோட பிடிச்சுடாதீங்க. அழுமூஞ்சி படம் வேண்டாம், வேண்டாம்." என்றாள், மீறு என்னும் காந்திமதி.

"அம்மா நீங்க சும்மா இருங்க. ஆயிரம் புள்ளையைப் படம் எடுத்தவன்நான். சார் உங்களைத்தானே...?"

"என்ன?"

"சிரிப்புக் காட்டுங்க. உரக்க."

"டாக்கியே பிடிக்கப் போறீங்களா? உரக்க எதுக்காகச் சிரிக்கணும்?"

"புன்முறுவல் பூத்தாலும் மெல்லிய சிரிப்புச் சிரித்தாலும் பயலுக்குத் தெரியாது...அதனாலே சிரிப்பு பலமாக நடக்கட்டும்."

இடைமறித்த காந்திமதி, "புள்ளை கீழே விழுந்திடக் கூடாதே?" என்றாள்.

"கீழே விழுந்தாலும் கம்பளம்தான் விரிச்சிருக்கு. ஒண்ணும் செய்யாது" என்றவர், "கொஞ்சம் சிரிங்க" என்றார். நான் சிரிக்க முயற்சித்தும் அழுகை முன்னுக்கு வந்தது. காந்திமதி "நீங்க யானை யானை அழகர் யானை சொல்லி, நாலுகாலாலேநடந்துவாங்க" என்றதும் எனக்குக் கோபம் பற்றிக்கொண்டு வந்தது. வீட்டில் குதிரை சவாரி செல்கிற பயல், படம் பிடிக்கும் இடத்திற்கு வந்து என்னைக் கால்நடையாக்க வேண்டுமா?

"சார் குழந்தை சிரிக்கணும் சார். யானை மாதிரி கத்தி நடவுங்க" என்கிறார் காமிராமேன். நான் நடக்கிறேன். என்ன செய்கிறது. நான் நடப்பதைப் பார்த்தவர், "சார் சார் நல்ல தவழும் கிருஷ்ணனாக இருக்கிறீங்களே" என்று சிரித்தார். காந்திமதி "தவறிப்போய் அவுங்க தவழும் லட்சணத்தைப் படம் எடுத்திடாதீங்க" என்று எச்சரித்தாள்.

ஒருவகையாக நான் தவழ்வதைக் கண்டோ அல்லது இயற்கையாகச் சிரித்தானோ அவன் கையிலிருந்த பந்து

வாய்க்குள் போக முயற்சி செய்யவே, "சார் சார் துணிப் பந்தை வாங்குங்கோ, அதிலே மரத்தூள் இருக்கும்" என்று மீனு கத்தினாள்.

"சும்மா இருங்கம்மா. நீங்க தவழுங்க சார். ஒரு பத்து நிமிஷம்."

"பத்து நிமிஷமா? முழங்காமல் வலிக்கிறதே..."

"முழங்கால் வலிக்கிறதா? போன வாரம் ஒரு குழந்தையைப் படம் எடுத்தேன். அதனுடை அப்பா தன் குழந்தையைச் சிரிக்க வைக்கச் சிரசாசனமே போட்டார். தவழுங்க சார்."

"நல்லாத்தான் தவழணும். ஜல்தி...படத்தை எடுங்க நேரம் ஆகுது."

"இதோ ரெடி..."

இவ்வாறு காமிராக்காரர் ரெடியாக இருந்தால் கண்ணன் பயல் சிரிக்க மாட்டான்; கண்ணன் சிரித்தால் காமிராக்காரர் போஸ் சரியில்லை என்பார். ஒருவகையாக என் முட்டும் வலியெடுத்தது. துணிப்பந்தில் பாதி மரத் தூளையும் தின்ற சமயம் பிலிம் பிடித்தது. "குட்ஈவினிங் எவெரிபாடி" என்று வணக்கம் செய்தார்.

அடடா! அவர் சொன்ன குட் ஈவினிங் எவரிபாடிக்கு அந்தப் பயல் சிரித்த சிரிப்பை எடுக்க ஹாலிவுட் காமிரா மேன் வேண்டும். அத்தனை கொள்ளை இன்பம் இருந்தது. படம் பிடித்தாய்விட்டது. "எப்போ சார் ஒரு வாரம் ஆகுமா? ' என்றேன்.

"மூன்றே நாள்"

"சரி. காப்பி எத்தனை வேணுமின்னு அப்பாலே சொல்லறேன்"

"ஒரு டஜன் போதுமா?"

"எந்த மூலைக்கு? குறைந்தது ஒரு குரோஸ் வேணும். 144 படம். அதுவும் போதுமோ போதாதோ" என்றேன்.

காமிராமேன் முகத்தில் பிரமிப்பு குடியிருந்த சமயம் நாங்கள் தெருவையடைந்தோம். கோவிலுக்குப்போன மூன்று பேர்களுக்கு ஒரு வண்டியை நிறுத்திவிட்டு நாங்கள் வீட்டையடைந்தோம்.

மூன்று நாட்களைப் பல்லைக் கடித்துக்கொண்டு போக்கி விட்டோம். குழந்தையின் படத்தைக் காண ஆவல். இன்னும் இரண்டு நாள் சென்றது. ஒரு வாரம் முடிவதற்குள் யார் யாருக்குக் கண்ணன் படம் அனுப்ப வேண்டுமென பெயர் எழுதி வந்தபோது ஓட்டர் லிஸ்டு மாதிரி நபர்கள் பெருகிவிட்டார்கள். என் கலியாணத்திற்கு அழைப்பிதழ் அனுப்பிய காலத்தில்கூட இத்தனை நபர்களுக்கு அனுப்ப வில்லை. கண்ணன் அழகு வெள்ளத்தைக் காட்ட இத்தனை காப்பிகள் தேவையா என்ற விவாதம் முடியவில்லை. படம் நன்ருயிருந்தால் குறைந்த பட்சம் 144 காப்பிகள் போது மென முடிவு செய்தோம்.

நூற்றி நாற்பத்துநாலு என்ன கணக்கென நீங்கள் நினைக்கலாம். என் தந்தை, மீனுவின் தந்தை அவரவர் களுக்கு வேண்டிய நபர்களுக்கு கொடுக்கலாம். முக்கிய மாகக் கொடுக்கவேண்டிய புள்ளிகளில் செல்லத்தம்மா பெயர் அகப்பட்டது. படம் எடுக்கப் பெற்றதைச் செல்லத்திற்கு என் தந்தை எழுதியிருக்கவேண்டும். அவளும் கண்ணன் படம் கேட்டு எனக்கு லட்டர் எழுதி யிருந்தாள். இது பொறுக்காத காந்திமதி பேச்சை ஆரம்பித்தாள்.

"செல்லத்தம்மாளுக்குப் படம் அனுப்பவேண்டாமா?" இதைச் சொல்லும்போது ஈட்டி குத்துவதாகச் சொன்னுள்.

மகள் பேச்சை புரியாத அவள் தாயார், "யாரு மீனு செல்லத்தம்மா? அது யாரு செல்லம்?" என்று கேட்கவே, என் தாயார் விளக்க ஆரம்பித்தாள். "அதுவா? செல்லத் தைத்தானே இவனுக்கு முதலாவதாக பெண் பார்த்துக்

கட்டுவதாக இருந்தது? பூப்பொருத்தம் பார்த்தபோது பொருந்தலே. உங்கள் மகள் காந்திமதியை முடித்தோம்" என்றாள். எனக்குத் தலைவலி ஆரம்பித்தது. காந்திமதி மற்ற விஷயங்களில் தங்கக் கம்பி; செல்லத்தம்மா பெயர் கேட்டாளோ, கூரிய ஈட்டியாகிவிடுவாள்.

"அந்தச் செல்லத்தம்மாளே லட்டர் எழுதியிருக் காளே, இவாளுக்கு"

"உன்னிடம் காட்டினேனே"

"படத்தைக்கேட்டு எழுதினாலே காட்டினீங்க. மற்றப் படி லட்டர் எழுதினால் காட்டுவீங்களா?"

"வேறே லட்டர் எழுதினால் அப்போதுகாட்டுகிறேன்"

"உங்க படத்தைக் கேட்டு எழுதலையா?" என்று குத்த லாகக் கேட்டாள்.

"எனக்குப் பழைய கோபம் வரும்."

"வரட்டுமே, என் பிள்ளை படத்தை இவ என்ன கேட் கிறதாம்?"

"இதில் என்ன தப்பு?" என்றாள் என் தாயார்.

"தப்பா? ரொம்ப அழகுதான். கலியாணமான ஒருத்தி இப்படிக் கடிதம் எழுதலாமா?"

"படித்தவளான நீயே இப்படிச் சொன்னால்?" என்று அவள் தாயார் பேச்சை நிறுத்திப் போய்விட்டாள்.

"மீனு நீ பொல்லாதவள். நான் படம் அனுப்ப முடியா தென எழுதிவிடுகிறேன். சரிதானே? அவள் என் உறவுப் பெண். எனக்குக் கடிதம் எழுதுவது பிடிக்கவில்லை யென் றால் நிறுத்திவிடுகிறேன்.

"இன்னிக்குப் பிள்ளை படம் கேட்பாள்; நாளை உங்கள் படம் கேட்பாள். நடக்கட்டும், நடக்கட்டும்."

"சே. அசடு...பேசறதைப் பார் பேச்சை"

குழந்தையின் படம் எடுக்கப் போய், காந்திமதியின் மனப் பாம்பு தலை தூக்கி என்னை கடிக்க வருகிறது. எல்லாம் குடும்ப சுகந்தானோ என்னமோ! ஒரு வகையாகப் புகைப்படம் கைக்கு வந்து சேர்ந்ததும் எல்லாருக்கும் அனுப்பிவைப்பது ,மீனுவின் கோபத்திலிருந்து விடுதலை பெறுவது என எண்ணினேன். காலதாமதம் ஆகிக் கொண்டே போயிற்று.

யாருக்குப் பதில் சொன்னாலும் வேலைக்கார வள்ளிக்கு பதில் சொல்ல முடியவில்லை. "புகையிலைப் படம் எப்போ வரும்" என்பாள், புகைப்படம் அவள் வாயில் புகையிலைப் படமாக உருவெடுத்தது. நான் அலைந்து அலைந்து என் காலே வலியெடுத்தது. ஸ்டூடியோ ஆசாமி ஏதோ தவறு பண்ணிவிட்டார் என்று முடிவு செய்தேன். ஆகப்போக ஒருமாதம் ஆயிற்று. மாமியாரும், என் தாயாரும் ஊருக்குப் புறப்பட இருந்தார்கள். புகைப்படம்வந்தால் தபாலில் அனுப்பி வைக்கும்படி சொன்னார்கள். ஊருக்குப் போவதற்கு முன் எப்படியேனும் ஒரு டஜன் படம் தயாரித்துத் தரும்படி வற்புறுத்தியிருந்தேன்,

படத்தை ஆள் வசம் கொடுத்து அனுப்புவதாகச் சொல்லியிருந்தார், பொக்கிஷத்தை எதிர் பார்த்தவர் போன்று எதிர் பார்த்தோம். "புரூப்" பார்க்கவில்லையா என்று கேட்காதீர்கள். "புரூப்" அனுப்பியதாகவும் அது வந்து சேரவில்லையென்றும் நாங்கள் சொன்னோம், ஒரு படம் மட்டும் வந்துவிட்டது; வந்து விட்டது படம். வீட்டில் பரபரப்பு.

"கட்டியிருக்கும் நூலைப் பிரிக்கட்டும் என்ன அவசரம்?" என்றாள். நீயிரங்காயெனில், அவசரமாகப் பிரிக்கவே கலகலவென அத்தனை படங்களும் சிதறின. "புகையிலைப்படம் வந்துட்டுதா?'' என்று கரித்தவலையைத்தேய்த்த கையோடு வள்ளி வந்து ஒன்றையெடுத்தாள். எல்லோர் முகத்திலும் அதிருப்தியே தாண்டவம்.

"இது என்ன அண்டங்காக்கா மாதிரி கன்னங்கரே லென்று இருக்கு" இது என் தாயார் விமர்சனம்.

"நம்ம ராஜு படமா?" இது காந்திமதியின் கேள்வி.

"வெந்நீர் தவலே மாதிரி இருக்குது" இது வள்ளி!

"இது அண்டங்காக்கா இல்லே; வெந்நீர் தவலேயும் இல்லே. இருட்டடிப்பின் பிம்பம். இது எவன் எடுத்த படம்?" என்றான் நீ இரங்காயெனில்.

"பிரதி பிம்பம் ஸ்டூடியோவிலே" என்றேன்.

நீ இரங்காயெனில் போட்டோவிற்கு ஒரு கவி பாடினான்.

அண்டாவும் சருவ மில்லே—இது
அம்மிக் குழவியோடா?
அண்டங்காக்காயுமில்லே—இது
ஆப்பிரிக்கா கண்டமடா.

பாட்டுக் கட்டியதோடு "டேய் மணி உன் முகத்திலே கரியைப் பூசிவிட்டான் பிரதிபிம்பம் ஸ்டூடியோ" என்ற குற்றப்பத்திரிகை வசனமாக வந்தது. எல்லோரும் ஏழை மீது பாய்வது சகஜந்தானே. நான் "எனக்கொன்றும் தெரியாது" என்றேன்.

"டேய் மணி அந்த ஸ்டூடியோவிலே உன் மூளையையும் கொஞ்சம் படம்பிடிக்கணும்" என்ற சமயம் காந்திமதியின் தாயார் தன் பேரனுக்குத் தாடி மீசை இருப்பதாகச் சொன்னாள். அந்த அம்மாளுக்குக் கண் அத்தனை தெளிவு.

"தாடியாவது மீசையாவது?" என்றேன்.

எல்லோரும் தாடி மீசை இருப்பதாகச் சொன்னார்கள். என் கண்ணிலும் தாடி மீசை படவே, "அதான் துணிப் பந்திலே உள்ள மரத்தூள் ஒட்டியிருக்கிறது" என்ற குட்டையுடைத்தாள் காந்திமதி. எல்லோரும் பிரதி பிம்பம் ஸ்டுடியோக்காரரிடம் யுத்தம் செய்யப் புறப்பட்டார்கள்.

அந்த ஆசாமி ஒரு மாதமாகப் படம் கொடுக்காமல் தாமசம் செய்ததின் ரகசியம் இன்று புரிந்தேவிட்டது. இதற்குள் வள்ளி வைத்திருந்த காப்பியில் குழந்தைக்கு இரண்டு தலை இருப்பதாகச் சொன்னார்கள். வாங்கிப் பார்த்தால் ஒரு தலையில் இன்னொரு தலை ஒட்டுப்போட்ட மாதிரி இருந்தது. படம் "ஷேக்" ஆகி இருக்க வேண்டும் என சொன்னான், நீ இரங்காயெனில். இந்த அமளி துமளியில் படத்தைக் கொண்டு போய் குழந்தையிடம் காட்டினால் அது அலறி வீறிட்டது.

"ஏன் அலறுது"

"அதன் படத்தை அதனிடம் காட்டினேன்" என்றாள் வள்ளி.

"சரிதான். பேய் பிசாசு படத்தை காட்டவா செய்யணும்? அழாதேடா..." என்று நீ இரங்காயெனில் சமாதானம் செய்தான்,

எல்லோரும் ஏகோபித்துச் சொன்னபடி, அந்தப் பிரதிபிம்பம் ஸ்டுடியோவிற்குப் போய்ச் சேர்ந்தோம்; சண்டை போட்டோம். வாங்கிய பணத்திற்காக மீண்டும் ஒரு படம் எடுத்துத் தருவதாகச் சொன்னார். தவறு ஏற்பட்டதற்காகப் பதிலாக எங்களை எல்லாரையும் வைத்து ஒரு குரூப் போட்டோ எடுத்துவிடுவதாகவும் சொன்னார். தீமையிலும் ஒரு நன்மை இருப்பதைக் கண்டோம். என் மடியிலும் காந்திமதி மடியிலும் இருக்கும் நிலையில் குரூப் போட்டோ எடுத்து முடித்தோம். பையனை நன்றாகவும் தவறு நேராத வண்ணமும் எடுக்க முயற்சி செய்தார். முன்பு படம் எடுக்கும்போது, நானும் காந்திமதியும் அவனைச் சிரிக்கச் செய்தோம். இப்போது அவன் பாட்டிகளும் நீ இரங்காயெனிலும், வேலைக்கார வள்ளியும் ஆக ஆறு நபர்கள் சேர்ந்து குழந்தையைப் படம் எடுக்க விடுவார்களா?

ஓரே கூச்சல் கும்பல், கண்ணன் திரு திருவென விழித்தான். மின்சார ஒளியும், பலபேர் கூச்சலும் சேர்ந்து அவன் பட்டபாடு பரிதாபமாக இருந்தது. ஆனால் சிரிப்பு மட்டும் முகம் நிறைய இருந்தது. காமிராமேன் பழைய தவறுதலைச் செய்யாதபடி, சர்வ ஜாக்கிரதையாக படம் பிடிக்க முயற்சி செய்தார். நாலைந்து எடுத்தும் "ஷேக்" ஆகி விட்டதாகச் சொல்லி மீண்டும் எடுக்க முயற்சி நடந்த போதுதான், குழந்தை வட்ட மேஜையிலிருந்து புரண்டு தொபுக்கென வீழ்ந்தது...

உடனே "ஐயோ...ஐய்யையோ" என்ற அலறல். ஒப்பாரி கண்ணீர், கூச்சல் அந்த இடத்தில் ஏற்பட்டன, என்ன? என்ன? என்ற கேள்விகள் எழ எல்லோரும் கதி கலங்கி நின்றோம்.

## 15. சில்லறைத் தொல்லைகள்

படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்
உடைப் பெருஞ் செல்வராயினும் இடைபடக்
குறு குறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை இல்லோற்குப்
பயக்குறை இல்லைத்தாம் வாழு நாளே.

—அறிவுடைநம்பி

இதுநாள் வரையும் என்ன வாழ்ந்து விட்டேன். இப்போது சில்லறைத் தொல்லைப்பட—இப்படி நீங்கள் நினைக்கலாம். தொல்லைகளைப் பிரிப்பதே பெரிய தொல்லை. பல திறப்பட்ட தொல்லைகள் அடைந்ததைச் சொல்லிவிட வேண்டும். குழந்தைக்கு போட்டோ ஸ்டுடியோவில் வந்த ஆபத்தை நினைக்கும் போதெல்லாம் இன்னும் உடம்பு சில்லிடுகிறது. ஆனாலும், ஸ்டுடியோக்காரர் விடாப் பிடியாகக் குழந்தையைப் படம் எடுத்து விட்டார்; படமும் உயர்தரமாக இருந்தது. பிரதிகள் 144 வாங்கி வேண்டிய. நபர்களுக்கு அனுப்பியும் முடிந்தது.

சில்லறைத் தொல்லைகளில் மிக மிக முக்கியமானது ஆகாரம் கொடுத்தல்; ஆகாரம் பறித்தல். தவழ்ந்து விளையாட ஆரம்பிக்கும் குழந்தைக்குக் கண்ணிற் கண்டன வெல்லாம் ஆகாரம். யாரோ ஒரு கவிஞர், காட்சியிலே இல்லையடா கண்களிலே உள்ளதடா என்றார். பார்க்கின்ற பார்வையில்தான், பார்க்கும் பொருளுக்குச் சிறப்பு என்றார். இதையறிந்த மாதிரி, பார்க்கின்ற பொருள் அனைத்தும் உண்ணும் பொருளே என கண்ணன் நினைக்கிறான்.

மாயக் கண்ணனாக இருந்தால் அவன் வாயிலே நமது வீடும் வாசலும் ரேஷன் கடைக்காரரும் இருப்போம். நம்முடைய பயல், கண்டதைத் தின்னத் தின்ன, டாக்டர்களின் கூட்டத்தை யன்றோ அழுதொழுகும் வாயில் பார்க்கிறோம்.

தான் மண்ணும் கல்லும் உண்டதோடு நில்லாது, உணவுப் பாத்திரத்திலும், அந்தத் திருக்கையை அளைய வரும்போதும், நான் சகிக்கவேண்டுமாம். தாய்மை என்ற பரிபூர்ண உள்ளம் படைத்தவர்களுக்கே, உண்ணும் உணவில் குழந்தையின் கை பட்டாலும் சும்மா இருக்கத் தோன்றும். அவனையே மண் படாமல் உண்ணச் செய்ய முயற்சிக்கும் நான், மண்ணோடு அளைந்த கையை எனது கலத்திலுள்ள சாதத்தில் பட விட மாட்டேன். தவழும் பருவத்திலே இடுப்புச் சதங்கை, காலின் கொலுசு, கைவளைகள், கிருஷ்ணன் கொண்டை, அழுதொழுகும் செவ்வாய் மழலைப் பேச்சு, தத்தித்தாவி நடக்கும் நடை எல்லாம் உயர்வான காட்சிகள். எனக்குப் பிடிக்காத ஒரு காட்சி, எப்போதும் குழந்தைக்கு ஆகாரம் கொடுத்துக் கொண்டே இருப்பது.

முக்கியமாக என் தாயாருக்கும், மீனாவின் தாயாருக்கும் குழந்தைக்குச் சோறூட்டுதல், இட்லி திணித்தல், பாலைக் கெண்டி வழியாக நிரப்புதல், இடைக்கு இடை பிஸ்கோத்து, ஆரஞ்சுப் பழம் கொடுத்தல், திணித்தல், ஊற்றுதல்...அம்மம்மா, சில்லறைத் தொல்லை சொல்லி மாளாது. நான் மாடியில் இல்லையென எண்ணி, "மீனா, இசக்கிப் பயலுக்கு பால் கொடுக்க வேண்டாமா?" என்பாள் மாமியார். என் தாயார் அப்போதுதான் மூன்று கெண்டி பாலைக் கொடுத்து விட்டுக் கிணற்றடிக்குப் போயிருப்பாள். இது ஒருவருக்கும் தெரியாது.

"இன்னும் மணி எட்டு அடிக்கலையே?"

"அது என்னடியம்மா. மணி எட்டு அடிக்கறத்துக்கும் குழந்தைக்குப் பால் கொடுக்கிறதுக்கும்?"

"அவங்க டயப்படிதான் பால், ஆகாரம் கொடுக்கச் சொன்னார்கள். மேலும் டாக்டர் உத்தரவும் அப்படித் தானே."

"டாக்டராவது மோட்டாராவது. நீ யெல்லாம் டயப்படி பால் குடிச்சுத்தான் வளர்ந்தாயோ? நீ சிறு பிள்ளையா இருக்கிறபோது நம்ம வீட்டு சிவலைப்பசு பால் அரைப்படியும் நீ குடிச்சிருப்பே. காலையிலே எட்டு மணிக் குள்ளே ஏழுதரம் கொடுத்திருப்பேன் உனக்கு."

மீறு மெதுவாக, "அம்மா, மாடியிலே அவங்க இருக்கி றாங்க காதிலே விழுந்தா பழிவரும். குழந்தைக்கு மாந்தம். கட்டி, ஈரல் வியாதி எல்லாம் பாலும் பழமும் அதிகமாகக் கொடுத்ததாலே வந்திட்டதாகச் சொன்னாங்க...அவங்க ஆபீஸ் போகறவரை சும்மா இரு" என்று சொல்லுவாள்.

"நான் பிள்ளை பெத்தவளா? நீதான் அதிசயமா பெத்திட்டே?" என மகள்மீது பாய்வாள். அவளது தாய்க் குக் கண்ணீரே வந்துவிடும். இந்த வேளை பார்த்து வள்ளி யும் நுழைந்து, "அட பெரியம்மா ஏன் அழுது? ஐயா ஏதாச் சும் சொன்னுங்களா?" என்பாள். மகள் காந்திமதி தன்னை அவமானம் செய்ததை அவள் தாய் சொன்னதும் "அட சின்னம்மா என்னத்தைக் கண்டது? நீங்க நல்லது சொன் ஞத் தெரியாது. அடிக்கடி பால் ஏம்மா. பழச்சாறு ஏம்மா. ஒரு இட்லியைக் கொடுங்க" என்பாள். எனக்கு இட்லி என்ற சொல் நாராசமாக இருக்கும். குழந்தை வளர்ப்பைப் பற்றி ஒன்றும் தெரியாத அசடுகள் கூடி கண்ணனை மண் தின்ன வைத்து விடுவார்கள் என ஆத்திரங் கொள்வேன். வள்ளியின் குழந்தைகள் பசும்பாலை அறியாதவர்கள்; தாய்ப் பால் அதன் பிறகு இட்டிலி தோசை பழைய சாதம் என்று அவை தின்று பழகிவிடும். ஒவ்வொன்றும் இருப்புக் குண்டு கள் போல இருக்கின்றன. ஆனாலும், என் கண்ணனுக்கு இட்லி கொடுக்க நான் பயப்படுகிறேன். தடுக்கிறேன். என் முதுகு திரும்பியதும் மனங்கொண்ட மட்டும் ஆகாராதி

களைக் கொடுத்து விடுவார்கள்; வயிற்றைக் கெடுத்தும் விடுவார்கள். பிறகு கேட்கப் போனால், "நான் ஒன்றுமே கொடுக்கவில்லை. இல்லவே இல்லை" என்ற இல்லைப் பாட்டு வந்துவிடும்.

"ஏ வள்ளி, இட்லி தோசை பேச்சை எடுக்காதே. அவங்க காதிலே விழுந்தா கொன்னுவிடுவாங்க."

"இதுக்கு மாசம் பதினொன்று ஆகுது. இன்னும் பாலும் பழமும் கொடுக்கிறீங்க. வயிறு செரிக்க வேண்டாம்."

கண்ணன் பயல் எல்லாவற்றையும் சாப்பிடுவதில் எல்லோருக்கும் அக்கறை; அவன் ஏதும் சாப்பிடாது இருப்பது பற்றியே எனக்கு அக்கறை. இதற்குள்ளாக மீனுவின் தாய் "வள்ளி பாலாடையைக் கொண்டா, மாவுக் கஞ்சிப் போட்டலாம்" என்று சொல்லியபடி, வள்ளி எடுக்கப் போவாள். இதற்குள் பயல் ராகம் இழுப்பான். தெனாலி ராயன் பூனை, சூடு கண்ட பூனை; பாலைக் கண்டதும் எடுத்ததாம் ஓட்டம். அது கதை; இவனோ பால் பாத்திரம் கெண்டி, சங்கு எடுத்ததும் ஓலமிடுவது நிஜம் .

"பார் பாரம்மா அழுறான் ராஜா" என்பாள் மீனு.

"ஏன் அழுறான்? வயிற்றுக்கில்லை அழுறான்" என்பாள் அவள் தாய்

"வயிற்று வலி அழுறான்" என காந்திமதி தர்க்கம் செய்வதற்குள் பாலாடை, கெண்டி, கஞ்சி ஆற்றும் வெள்ளித் தம்ளர் எல்லாம் கொண்டு வருவாள் வள்ளி. பயல் கூச்சல் சகிக்காது. என் கோபமும் கூரையைப் பொத்துக் கொண்டு போகின்ற மாதிரி "இது வீடா இல்லையா? ஏன் மீனு உன் காதிலே அரணை புகுந்து விட்டதா?", என்பேன்.

"நாஞ் சொன்னேன் கேட்கவில்லை"

"மண்ணாங் கட்டியைச் சொன்னே. சற்று முன்னாலே தானே எங்கம்மா ஆறு லோட்டா பால் போட்டி விட்டா. இப்போ என்ன கஞ்சி வாழுது? பிஸ்கோத்து ஆரஞ்சு,

இட்லி, பாலு, முறுக்கு...ஆய் ஆய்...அது என்ன தலை யணையா''

''அம்மாவிடம் சொன்னேன் கேட்கலை''

''அவன் உயிரோட இருக்கணுமா வேண்டாமா? ஏன் எல்லோரும் சேர்ந்து என் பிராணனை எடுக்கிறீங்க.''

இப்படிப் பேசினால் மாமியாருக்கு நாக்கை பிடுங்க வேண்டும் போலிருக்கும். ''இந்தாம்மா மீனு, உம் பிள்ளை யைப் பிடி'' என்பாள். நான் திட்டியதால் ஏற்பட்ட கோபம் குரலில் இருக்கும்.

''உன்னை வளர்த்த மாதிரி அந்தப் பயலையும் கெடுக்க வேண்டாம்.'' இதை நான் சொல்வது தப்பு என்றாலும் கோபத்தில் குதி போட்டல்லவா பேச்சு வருகிறது?

''என்னை வளர்த்ததில் என்ன தப்பு?''

''தப்பு சொல்லறேன். எண்ணிக்கோ. எந்த வியாதி உனக்குக் குறைச்சல்? ஒத்தை தலைவலி, இரட்டைத் தலைவலி, மயக்கம், வேலையைக் கண்டதும் வாயு குத்து, வயிற்றறைச்சல், வாதம், பித்தம், தலைக்கனம்...''

''போதுமே, நீங்கதான் சயன்சுப்படி வளர்ந்தவங்க.''

''சயன்சா?''

''சுகாதாரப்படி வளர்த்தவங்களுக்கு என்ன குறைச் சல்? கால்வலி, வாதம்; குடல் மந்தம்; இடுப்புவலி.''

''இந்தா இந்தா இல்லாத வியாதிகளை அடுக்காதே''

''நீங்க மட்டும் சொல்லலாமா?''

சண்டை வலுக்க விருந்த சமயம், சமாதானமாகப் பேச்சைத் திருப்பி ''மீனு. நான் வியாதியிலே பிறந்தேன்; வியாதியிலே வளர்ந்தேன்; வியாதி மாலிகையைக் கலி யாணம் செய்தேன். என் குழந்தையைப் பார்த்து வருங்கால என் மருமகள் இப்படிக் கேட்காமல் இருக்கவே நல்ல முறையில் வளர்க்க ஆசைப்படுகிறேன். பார் பார் வயிற்று வலியால் அழுகிறானே'' என்றேன்.

"நீங்களானு பட்டினி போட்டு டயப்படி அளவோட வயிற்றுக்குக் கொடுக்கச் சொல்லுறீங்க. வீட்டிலே பெரிய வங்க நொறுங்கத் தின்னு நூறு வயசு என்று சொல்லுறாங்க. நான் ஒருத்தி நடுவிலே அகப்பட்டு நைந்து நைந்து சாகிறேன்..."

"அட நீங்க என்னம்மா. ஒரு வேளைக்கு நாலு வேளை தின்னுத்தான் பசலே உடம்பு சத்துப் பிடிக்கும். மணியடிச்சுப் பால் கொடுத்தா அது என்னுப் பழக்கம்?"

"இந்தா வள்ளி உன்னோடை யோசனையை உன் வீட்டிலே வைத்துக்கொள்" என்று கத்திவிட்டு, குழந்தையைக் கோபத்தில் விட்டுச்சென்ற மாமியாரின் பக்கம் பார்த்தால் மாமியார் அண்டாவைத் தூக்கித் தரையில் டங்கென போடுகிறுள்; என் மீது போட்டதாக நினைப்பு. பெரிய ஜீவன் மனம் நோகுமே யென்று நான் வாய்மூடி மற்ற காரியங்களில் ஈடுபட்டிருந்தாலும் பையனுக்கு ஆகாரம் கொடுக்கும் வகையில் நான் வாய்மூடி இருக்க முடியாது.

தனித்து விடப்பட்ட கண்ணன் தவழ்ந்தும், நடந்தும் எதை எதையோ தின்றுவிடுகிறுன் "துப்பு துப்புடா ஆய் ஆய்...என்னடா துவரம்பருப்பு..." என்று கத்திவிட்டு "கண்ட கண்ட இடத்திலே சாமான்களைப் போடாதே; போடாதே" என்று நான் கத்த வேண்டும்; கதறவேண்டும். பெருக்குமாற்றுக் குச்சி...தூசி துரும்பு......உளுத்தம் பொட்டு கல்லு மண்ணு. இது வீடுதானு? வீடு பெருக்கிறுத்தானே" என இறைவேன். குழந்தையைக் கெடுப்பதை நேரிடையாகக் கண்டித்துப் பேசாத சமயம் நமது கோபத்தைக் காட்டி வேறொரு தப்பிதத்தைத் தேர்ந்தெடுத்து அதற்காகத் திட்டிஞல், முன் காரியத்தைக் குறித்துச் சத்தம் போட்டதாக யூகித்துக் கொள்ள முடியும். ஆகவே என் கூக்குரல் அதிகாரவெறி கொடிகட்டிப் பறக்கிறது. மாமியாருக்குப் பேச சந்தர்ப்பம் கிடைக்கிறது. "வயிறு நிறைஞ்சா ஏன் கண்ட கண்ட பொருளைத் திங்குது? கூட

அரைக்கால்படி போட்டிருல் சும்மா தெய்வமேயென்று இருக்கும்" என்பாள்.

"ஒரு படியா விட்டு தெய்வத்துக்கு அபிஷேகமே செய்யலாம்"

"போட்டற பால் அரைக்கால்படி. அதுவும் தண்ணி" என்பாள் காந்திமதி.

"ஏ மதி. நேற்று டாக்டர் என்ன சொன்னர். கோதுமைப்பண்டம் கண்ணுடித்தாள், உளுந்தவடை கொடுக்காதீர்கள் என்று சொன்னரே..."

"அப்பா...எனக்கு ஒரு பிள்ளையே போதும். நீங்கள் எக்கேடும் கெட்டுப் போங்க"

மீறு போய் விடுவாள். குழந்தைநலத்தைப் பேணும் கருத்தோடும், சுய நலத்தோடும் ஆகாராதிகளைக்குறைக்கச் சொன்னேன். கண்ணன் பயல் குடிக்காத திதிப்புக் கஞ்சி பால் இவைகளை எனக்கு தர்மாஸ் பிளாஸ்கில் ஊற்றிக், கொடுத்து, ஆபீசுக்குக் கொண்டுபோகச் சொல்லும் பழக்கத்தையும் நிறுத்த வேண்டும்.

ஆகாரத்தை 'மணிக் கணக்குப்படி நான் கொடுக்கச் சொன்னதால் முதலில் மாமியாருக்கும்,பிறகு என்தாயாருக்கும் என் மீது கோபம் பிறந்தது. பிறகு கோபித்துக் கொண்டு ஊருக்குப் போய்விட்டார்கள். "இவன்தான் ஓவியமாகப் பிள்ளை பெற்றவன்; எங்களுக்குப் பிள்ளையை வளர்க்கத் தெரியாதா?" என்று இருவரும் ஏகோபித்து என்மீது குறை கூறிச் சென்றர்கள்.

* * * *

கண்ணனுக்கு என வாங்கிய பொருள்கள் சரிப்படாவிட்டால் அதை என் தலையில் கட்டுவது சில்லறைத் தொல்லைகளில் ஒன்று. தொட்டில் வேஷ்டி வாங்கியது அகலக் கட்டையாக இருக்கவே, அதிலே கருப்புக் கரை போல பூ போட்டு என்னை அங்க வஸ்திரமாக உபயோகம் செய்யச் சொன்னுள், அருமை காந்திமதி. பயலுக்குச்

சட்டை தைக்கத் துணி யெடுக்க, அது குறைவாக இருக் கவே என் கை வசம் கைக்குட்டையாக விரிந்தன.

"சட்டை சிறிசாகப் போவதை கைக்குட்டையாகக் கிழித்து" என்று ஆரம்பிக்கவே, "இந்தா காந்திமதி" நான் எத்தனை கைக்குட்டைகளை வைத்துக் கொள்வது? இந்தப் பயல் துணிமணி சிறிதாகப் போனாலும், இன்னொரு பிள் ளைக்கு உதவும்" என்பேன். "போதுமே சும்மா இருங்க" என்று கோபத்தோடு முகத்தைச்சுளிக்கும் அழகே அடடா ஒருவன் ஆயுளின்நினைவுக்குப்போதும். குழந்தைகள் இந்தப் பிராயத்தில் எதையும் சுவைத்துப் பார்க்கும். முக்கியமாக மண், துணிமணி, பேப்பர், (என்னுடைய ஆபீஸ் பேப்பர் களின் நிறம் மகா மட்டம். அதை தின்னும் உரிமையுடைய பிராணியே எடுக்கும் ஓட்டம். ஆனாலும் கண்ணன் பயல் அந்தப் பேப்பர்களை கசக்கியும், வீணாக்கியும் படாதபாடு படுத்துவான்.) அவனுக்கு பேப்பர் கிழித்தல் ஒருபொழுது போக்கன்று; லட்சியம் என்றே சொல்லவேண்டும். அதிலும் அத்தனை பேப்பரையும் கொண்டு போய் அண்டா, சருவம் கொப்பரை, குடம் இவைகளில் அமுக்கித் தண்ணீரை அளைய வேண்டும், தண்ணீருக்கும் சிறு குழந்தைக்கும் என்ன சம்மந்தமோ...மொண்டு மொண்டு கொட்டுவதிலும் குடிப்பதிலும் கன குஷி. அப்பப்பா தண்ணீரைத் தொட விடாவிட்டால் அவன் கத்துவான்; தொட்டால் நான் கத்து வேன். தண்ணீரைத் தொட்டால் நிமோனியா, இருமல் என்ற பெயர்கள் மூலம் டாக்டருக்கு கனத்த வரும்படி; எனக்கோ பணத்துக்கு நெருக்கடி. ஊர்ந்து செல்லும் பிள்ளையும் ஊர் வாயும் சரி. இரண்டும் பிறர் சொல்லுக் கும் அதிகாரத்திற்கும் அடங்காப்பிடாரிகள்.

* * *

பக்கத்து வீட்டிலுள்ள பூனைக்குட்டி, சொறிநாய், விளை யாட்டுச்சாமான்கள் இவனுக்கு வேண்டும். இவனுக்காக வாங்கிக்கொடுப்பவைகளை, கழுநீர் பானையிலும் சாக்கடை

யிலும் கொண்டு போடுவான்; பக்கத்து வீட்டார்களுடைய சாக்கடை ஓடாததால் வம்புக்கு வந்து மல்லுக்கு நிற்பார்கள். இக்கிணியூண்டு பயல் எத்தனை ரக வம்புகளை விலைக்கு வாங்குகிறான். பூனைக் குட்டியை சதா மடியில் வைத்துக்கொள்ள ஆசைப்பட்டால், அது பாவம் என்ன செய்யும், திமிறி ஓடும். ஓடினால் அழுகை; ஓடாவிட்டால் போகவில்லையென அழுகை. பக்கத்து வீட்டுக்காரர் பூனைக் குட்டியை நாங்கள் தொடக்கூடாதென தன் வீட்டிலேயே கூடைக்குள் கவிழ்த்து வைத்துக்கொண்டார். இதற்காகப் புதிய பூனைக்குட்டி ஒன்றைத் தேடி, வாங்கும்படி நேர்ந்தது. அந்த மூதேவியை வெளியே ஓடாது அடைத்துப் போட்டால் கதறு கதறெனக் கத்திப் பிராணனை விடும்; அவிழ்த்துவிட்டாலோ பக்கத்து வீட்டுப் பூனைக்குட்டியோடு போய் ஜோராக விளையாடும். என் தகப்பனார் இம் மாதிரி பிராணிகளின் நண்பர்; ஆனால் அவை வீட்டுக்குள் வரச் சம்மதிக்கமாட்டார்! பையனுடைய சந்தோஷத்திற்காக வளர்க்கப்படுகிறது என்று சொல்லியும், "டேய், மணி ஒன்று பூனைக்குட்டி வீட்டில் இருக்க வேண்டும்; அல்லது உன்னைப் பெற்ற இந்தப் பாவி இருக்க வேண்டும்" என்று சொல்லும்போது அப்பாவி நானென்ன செய்ய? பூனைக் குட்டியைத் தற்காலிகமாக நீ இரங்காயெனில் வீட்டில் கொண்டுபோய் விட்டுவைத்தேன். தொல்லைகளில் இதுவும் ஒன்று.

* * *

சில்லறைத் தொல்லைகளின் எல்லைக் கல்லைச் சொல்லி விடுகிறேன். பௌர்ணமி பூஜை நடந்தகாலத்தில் எத்தனை குழந்தைகளை நாங்கள் நிலாச்சோறு உண்ண அழைத்தோமோ, அவர்கள் எல்லோரும் எங்கள் வீட்டை விளையாட்டு மைதானமாக எண்ணி வருகிறார்கள். ஒவ்வொரு குழந்தையும் தம்பி, மச்சான், மாமன், மைத்துனன், கொழுந்தன், அத்தான் என்ற முறை கொண்டாடி வரு

வார்கள். அவர்களுடைய தாய்மார்கள் பௌர்ணமி பூசையின் போது தங்கள் குழந்தை உண்ட புண்ணியத்தாலேயே எங்கள் வீட்டில் கண்ணன் பிறந்தான் எனத் தம்பட்டம் தட்டுவார்கள். தம் வீட்டில் இல்லாத பொருள்களை இரவலாகவோ, இனமாகவோ தட்டிக்கொண்டு போவார்கள். தங்கள் குழந்தையின் தவப்பயனால் எங்களுக்கு கிடைத்த குழந்தை பாக்கியத்தை நினைப்பூட்டி ரூபாயாக கைமாற்று கேட்பவர்கள், கரண்டி கரண்டியாக சீனி, பால், டின் உணவு...இந்த தொல்லையை மேலும் சொல்ல வேண்டாம். பணத்திற்கும் உணவுச் சாமான்களுக்கும் பிடித்த சனியனை மனக் கட்டுபாடு கொண்டு ஒரு வகையாக நிறுத்தியும், மறுத்தும் சமாளிக்கலாம்; விளையாட்டுத் தோழமை பூண்டு வருகிற ஆண்—பெண் குழந்தைகளை என்ன செய்ய? அவர்கள் கூச்சலும் கும்மாளமும் சிவசிவ . கைலாசமே வெடித்துவிடும். ஏதாவது சொல்லிவிட்டால் "அட, பாவி, அவனுக்கு குழந்தை அருமை தெரியுமா?" என்கிறார்கள். காது இரும்புக்காது இருந்தால் நலம் என்று தோன்றுகிற படி, பிறர் குழந்தைகள் வந்து சேர்ந்து விளையாடுவதன் மூலம் நிர்த்தூளி நடத்துவார்கள். விளையாடுவதைத் தடுத்தாலும் சண்டை, தடுக்காவிட்டாலும் ஒன்றுக்கொன்று சண்டை, கண்ணன் பயலும் வீட்டுக்குள் இருக்கப் பிரியப் படாத மாதிரி சதா தெருவுப்பக்கம் ஓட்டம் எடுப்பான். இதனால் கம்பிக் கதவு போட்டு, பயங்கர மிருகங்களை மக்கள் தொல்லை செய்யாதிருக்கப் பாதுகாக்கும் நிர்வாகிகள் போன்று நாங்கள் செய்தோம்.

"அதிசயமான பிள்ளை பெத்திட்டாங்க. இரும்புப் பெட்டியிலே வைச்சுப் பூட்டுகிறதுதானே"

எப்படிப்பட்ட பேச்சு! அட உலகமே!!

இருக்கிற தொல்லைகள் போதாதென்று உறவினர்களிலும் நண்பர்களிலும் ஒரு சிலர் புதிய தொல்லையை ஆரம்பித்தார்கள். தன் குழந்தையின் போட்டோவை

பிறருக்குக் கொடுப்பவனை முட்டாள் என்றே சொல்ல வேண்டும். கண்ணன் புகைப்படம் பெற்றவர்களில் ஒரு சிலர் வியாபாரிகள். பயலுடைய படத்தைப் பார்த்தவர்கள் தங்கள் விளம்பரத்திற்குத் தேர்ந்தெடுத்தார்கள். படம் அத்தனை கவர்ச்சியாக இருந்தது. செருப்புக் கடை வியாபாரி எனது நண்பர்; ஈரல்குலை கட்டி, மருந்து வியாபாரி, மூக்குப் பொடி வியாபாரி, இவ்வாறு பன்னிரண்டு நபர்கள் என்னைத் தொல்லை செய்தார்கள். தங்களுக்கே ரிஜிஸ்டிரேட் மார்க்காக உபயோகித்துக்கொள்ள அனுமதி கேட்டார்கள். மாதிரிக்காக எப்படி அந்த படத்தை உபயோகம் செய்ய முடியுமெனக் காட்டியும் இருந்தார்கள். குழந்தையின் தலைக்கு மேலாக அளவற்ற செருப்புக் குவியல்கள்! இது வாயைப் பிளந்து சிரிக்கும் நிலையைக் காட்டும் படம்; ஈரல்குலை கட்டி மருந்துக்கு இப்பால் நோஞ்சான், அப்பால் இவன் திட காத்திரனாக இருக்கிறான். மூக்குப் பொடி வியாபாரி பெரிய ஜாடிக்கு மேலாக இவன் படுத்திருப்பது போல மாதிரி படம் தயாரித்துக் கொண்டு வந்தார்...எனக்கு வந்த கோபமும் ஆத்திரமும் சொல்லத் தரமன்று. ஆயிரம் ரூபாய் வரை, இனும் கொடுப்பதாகச் சொன்னார்கள். போதாக்குறைக்கு என் படத்தையும் கேட்டார்கள். என்ன வியாபார உலகம். என்னை விற்றாலும் விற்கலாம் என் குழந்தையை வியாபாரப் பொருளாக்க நான் சம்மதிக்கவில்லை. அவர்கள் என் அறியாமையை வியந்துகொண்டே போய்விட்டார்கள்.

எல்லாவற்றிக்கும் மேலாக, காந்திமதியின் உறவினர் ஒருவர் பெரிய பணக்காரர். குழந்தையில்லாதவர். அவர் வீட்டுக்கு இவன் படம் போனது முதல் அவரது மனைவி திரிபுரசுந்தரி எங்கள் வீட்டில் குடியேற வந்து விட்டாள். பெரிய பணக்காரர் மனைவி விருந்தாளியாக வந்தால் ஏழை பரம ஏழை ஆக வேண்டியதுதான். காந்திமதிக்குத் தலை கால் புரியவில்லை. வந்து ஒரு வாரம் இரண்டு வாரம்

தங்கினுள். எந்த நிமிஷமும் கண்ணனும் அந்தம்மாவும் குழந்தையும் "தாயு"மாக இருந்தார்கள். "அம்மா எங்கே?" என்ருல் திரிபுர சுந்தரியைக் காட்டும் நிலைமை யடைந்தான். காந்திமதியை ஏறிட்டும் பார்ப்பதில்லை. காரும், கையில் நோட்டு நோட்டாகப் பணமும் இருக்கவே, எங்களைக் கேட்காமல் கடை வீதிக்குப் போவாள். அவன் கை நீட்டுகிற திக்கிலுள்ள பொருள்கள் அனைத்தும் என் வீட்டில் கொண்டுவந்து குவிக்க ஆரம்பித்தாள். பிளாஸ்டிக் பஜார் ஒன்று வீட்டில் வைக்கலாம்; கல் பொம்மைகள்; மரபொம்மைகள், துணிப் பொம்மைகள் இப்படி எவ்வளவோ. பழ வகைகள் பிஸ்கோத்து வகைகள் சொல்லி முடியாது. இதற்கெல்லாம் மேலாக தமது மனைவியைப் பார்த்துப் போக அவளது கணவர் பெரிய காரில் வாரம் ஒரு முறை வந்து போவார். என் பாடு பரம கஷ்டமாயிற்று. நிலா முற்றம் வீட்டிற்கு நானும் காந்திமதியும் சொந்தக் காரர்களா, விருந்தாளியாக வந்த அந்த அம்மணி திரிபுரா சுந்தரி எஜமானியா என்று தெரியவில்லை. வேலைக்கார வள்ளி, அந்தம்மா உத்தரவை, சிருஷைகளைக் கவனித்தாள். ஆக்ஞையை எதிர்பார்த்தாள். நானும் காந்திமதியும் அண்டிப் பிழைத்த ஆண்டிகள் போன்று எங்கள் சொந்த வீட்டில் நடமாடினேம். முன்பெல்லாம்; "எஜமான் தூங்கருங்க சத்தம் போடாதீங்க" என்ற வள்ளி, "பெரியம்மா தூங்கருங்க சத்தம் போடாதீங்க" என்று சொல்ல ஆரம்பித்தாள். நான் தரும சங்கடத்தில் மாட்டிக் கொண்டேன். கண்ணன் பயலும், "அம்மா அம்மா" வென்று அந்த அம்மணியைப் பிரிவதில்லை. காந்திமதி கூப்பிட்டாலும், "மாத்தேன் போ" என்று விடுவான். அவன் தூங்க வேண்டியது, உணவுகொள்ள வேண்டியது யாவும் காந்திமதியின் செயலுக்கு அப்பால் போய் அந்தம்மாள் ஆதிக்கத்துக்குள் குடியேறிவிட்டது. பணம் எங்களை பயங்காட்டியது. இதுவும் நன்மைக்கே என்றிருந்த வேளையில் உண்மை சொரூபம் தெரிய வந்தது.

"ஏம்மா மீனு. கண்ணன் பயலே நாங்களே வளர்க்கிறோம்"

விளையாட்டாகச் சொல்லுவதாக முதலில் நினைத்தோம்; பின்பு அது உண்மையான பேச்செனத் தெரிந்தது

பிச்சையெடுத்தாராம் பெருமாள்; அதைப் பிடுங்கினாராம் அனுமார் என்னும் கதையாக எங்களுக்கு வரப்பிரசாதமாக அரும்பாடுபட்டு ஒரு பிள்ளை கிடைக்க அதைத் தத்து எடுக்க வந்துவிட்டார்கள். அவர்களுக்கோ மூன்று கார்கள் இருக்கின்றன. லக்ஷம் லக்ஷமாய் பணம் இருக்கிறது. என் சிந்தனையில் ஒரு மின்னல் ஒளிவிடும். பயலுக்கு நம்மால் அதிர்ஷ்டம் வராது போனாலும், அவனுக்கு வருகின்ற அதிர்ஷ்டத்தைத் தடை செய்வானேன்? தத்துப் பிள்ளையாகக் கொடுக்க ஆசை பிறந்தாலும், மனம் சில சமயம் மறுக்கும்; மீண்டும் மருகும். என் தகப்பனார் காதில் இது விழுந்தால் என் தலையைச் சீவிவிடுவார். என் மாமனார் உலகம் அறிந்தவர். அவரிடம் இதைச் சொன்னால் "மாப்பிள்ளை நீங்கள் யோகம் செய்தவர்கள். பயலை இங்கேயே வளர்க்க வேண்டும்; ஐந்து வயதுவரை வளர்க்க வேண்டும் என்று கட்டுப்பாடு போடுங்கள். அவர்கள் வீட்டில் பணம் பூஞ்சக்காளம் பூத்துக் கிடக்கிறது. ஒரு பங்களாவை வாங்கி இந்த ஊரிலேயே குடியேறுவார்கள். ஐந்து வயதுக்கு அப்பால் நாம் பிள்ளைகளிடம் பாசம் கொள்ளமுடியாது. இதனால் உங்களுக்கும் நன்மை, அவர்களுக்கும் சந்தோஷம்" என்று யுக்தி சொன்னார்.

என் மனசில், பம்பபடி வீட்டுக்காரம்மா ஆறு குழந்தை பெற்ற ஏழையின் உருவம் வந்தது. எனக்கு, தன் மகனை முருகனை தத்துக் கொடுக்க முடியாதுயென்று சொன்ன தாய்மை உணர்ச்சி நினைவில் வந்தது. ஆகவே நானே விட்டுக்கொடுக்க மனம் துணிகிறேன். காந்திமதி என்ன சொல்லுவாள்? "ஐந்து வயதுவரை வளர்த்தபின் தத்து எடுக்கட்டும்" என விட மனசுவருமா? இந்தப் பேச்சுக்கள்

கிணற்றில் போட்ட கல்லாக இருந்துவந்தன. மெல்லவும் மாட்டாமல், கொள்ளவும் மாட்டாமல், சேர்ந்து சிரித்துச் சமாளித்தோம். இன்னும் எனினென்ன சில்லறைத் தொல்லைகளை இந்தப் பயல் கொடுப்பானோ?

எதிர்பாராத விதமாக என் தந்தையிடமிருந்து தபால் வந்தது. என்ன ஆபத்தோ சம்பத்தோ என்று கைநடுங்கும்படி பிரித்தேன்.

# 16. ஆண்டு நிறைவு.

**கேள்வி :**—தாம்பத்தியம் எப்போது குற்றமாகும்?

**பதில் :**—வருஷம் தோறும் குழந்தை பிறக்க ஆரம்பிக்கும்போது.

—பாபுராவ் பட்டேல்

சந்தோஷ சமாசாரத்தை என் தந்தை எழுதியிருந்தார். பையனின் ஜாதகத்தைக் கணிக்க எடுத்த சமயம், ஆண்டு நிறைவுத் தேதியைக் குறித்தும், அதை சாஸ்திர முறைப் படியும் ஆடம்பரமாகவும் கொண்டாடத் தம் வீட்டுக்கே வரும்படியும், ஆக்ஞையிட்டார்.

நாட்களை எண்ணிக் கொண்டிருந்தோம். ஆண்டு நிறைவு நாளும் வந்துவிட்டது. எங்கே ஆரம்பித்து எங்கே வந்து நிற்பதென்று தெரியாமல் பம்பரம்போல் காலம் சுழல்கிறது. காலத்துக்குள் பிறந்த ஜன்மங்களும் சுழல்கின்றன.

காலை நேரத்துச் சடங்குகள் முடிவுற்றன. பலர் முன்னிலையில் பூர்ண கும்ப ஆசியுடன் மஞ்சள் நீராடி புத்தாடை புனைந்து குழந்தையுடன் வருகின்றோம். வீட்டுக்குள் சமையலறையிலிருந்து புகை மிண்டுகிறது. எங்கும் ஜே! ஜே!! என்ற கல்யாண சப்தங்கள்; கலகலப்பு வாழ்த்துக்கள், முக்கியமாக கண்ணன் பயலைச் சுற்றி நாரி மணிகளின் கூட்டம். கைக்குக் கை தாவுகிறான். இந்தச் சின்ன பயலுக்கு செய்யும் உபசாரங்கள் கண்கொள்ளாக் காட்சி. அவன் உடம்பிலே மின்னும் தங்க ஆபரணங்கள் பட்டுடைகள், இட்டிருக்கும் பொட்டு உள்பட முகங் கொள்ளாக் காட்சி. ஏதோ இளவரசனைச் சுற்றி சுயம்வர நடத்துகிற மாதிரி அத்தனை சிரிப்பும் கேலியும் பெண்கள் பகுதியிலிருந்து அலை அலையாக மிதக்கின்றன.

அவனுடைய அம்மா வழித் தாத்தா "எங்கே அந்தப் பயல்? விநாயக சுந்தரத்தை எங்கே?" என்றதும் இன்னொரு தாத்தா-அப்பா வழி சொல்லுகிறார்: 'எங்கே சுந்தர விநாயகத்தை எங்கே?"

இவ்வாறு தாத்தாக்கள் அலற, பாட்டிகள் கூச்சலிட பந்து ஜன மித்திரர்கள், வாழ்த்தும் இனமாகப் பரிசுகளும் வழங்கக் காத்து நிற்கிறார்கள்; சாவகாசமாக ஜமுக்காளத்தில்இருப்பதைத்தான் காத்துநிற்கிறார்கள் என்று சொல்லுகிறேன். புண்யாகவாசனத்திற்கு வந்த வெள்ளிக் கெண்டிகள், பாலாடைள், தம்ளர்கள் இன்னும் வீடு கொள்ளவில்லை! ஆண்டு நிறைவுக்கும் அதே பரிசுப் பொருள்களைச் சிவந்த பட்டுப் பேப்பரில் சுற்றிக் கொண்டும், ரூபாயை ரொக்கப் பரிசுகொடுக்கவும் காத்திருந்தார்கள். தத்தியும் விழுந்தும் காலில் சதங்கை கலீர் கலீரெனவும் வருகிறான். ஆடியும் பாடியும் வருகிறான்.

வருகிற பயலை மறித்து, "எங்கே ஒரு டான்சு ஆடு" என்கிறார்கள். தத்தி நடக்கும் பயலைத் தவறச் செய்யும்போது அது நடனம். இவ்வித நடனத்தை ஆடுவதாகக் கை தட்டல் நடக்கிறது! திருஷ்டி பட்டுவிடுமென கை சொடுக்கல். "இந்தாடா கரடிக் குட்டி" என்று என் மாமனார் பரிசு ஒன்றைக் கொடுத்தார். அதை அமுக்கிய போது கரடியாகக் கத்துகிறது. பயல் என்னமோ தனக்கே உரித்தான பாஷையில் சொல்ல, அது மாமனார் காதில் "பாத்திபாத்தி" என விழுகிறது. "பாட்டியாடா இது? இது பாட்டியாடா?" என்கிறார். என் மாமியார் "டேய் போக்கிரிப் பயலே கரடிடா அது' என்கிறாள். எல்லோரும் சிரிக்கிறார்கள். "கரடியைக் கண்டதும் பேரனுக்குப் பாட்டி நினைவு வந்துவிட்டது." என்று மாமனார் மேலும் சொல்லவே சிரிப்பலைகள் பேரலைகளாக கோஷமிடுகின்றன.

குழந்தையின் ஆண்டு நிறைவுக்கும்சரி, அவ்வப்போது மற்றபடி குழந்தையைப் பார்வையிட வருகிறவர்களும்

பட்டுத் துண்டாக சட்டைக்குக்கொண்டு கொடுக்கிருர்கள், கொடுக்கிற பரிசை ரொக்கமாகக் கொடுத்தால் அது பலனுள்ள வழியில் உதவியாக இருக்கும். எனக்காகச் சொல்லவில்லை; குழந்தை பெற்ற எல்லாருக்குமாகச் சொல்லுகிறேன். அரை கஜம் பட்டுத் துணியாக ஆறு டஜன் பரிசு வைத்து என்ன பயன்? வேண்டுமானால், இன்னும் பிறக்கிற குழந்தைகளுக்கு இவைகளை இருப்பு வைத்துப் பரிசாக் கொடுக்கலாம். சிலசமயங்களில் கெண்டிகள் பாலாடைகள், வெள்ளிப் பாத்திரங்கள், பரிசு கொடுத்தவர்களுடைய வீடுகளுக்கே பாத்திரத்திலுள்ள பெயர்களைநாசுக்காக அழிக்கப் பெற்று திரும்ப போய்ச் சேரும். எங்கள் பயலுக்கென வந்த பாத்திரங்களிலுள்ள பெயர்கள் அழிக்கப் பெற்றிருப்பதையும், எங்கள் வீட்டிலிருந்து பரிசு பெற்றவர்கள் ஊன்றிப் பார்த்தால் புரிய முடியும்.

தனக்கு வந்த பரிசுப் பொருள்களை ஒன்ருேடு ஒன்று மோதி உடைத்தான். இதைக் கண்ணுற்ற மனத்தத்துவம் அறிந்தபெரியவர்கள் பயல் எஞ்சினியவர் வேலைக்குப்போகலாம் என்றனர். என் தந்தை "இவனை டிராக்டரில் பூட்டி உழச் சொல்ல வேண்டும். உழவுக்குள்ள சிறப்புத் தனி" என்ருர். நானே, "இவன் ஓட்டல் முதலாளியாகட்டும் தனக்கும் சௌக்கியம்; பிறருக்கும் பேருதவி" என்று சொன்னேன். இம்மாதிரி சமயங்களில் பேசும் பேச்சுக்கள் சிரிப்பதற்காகத்தான். சிந்தனை செய்யவன்று.

ீ இரங்காயெனில் தன் பங்காக நிறைய விளையாட்டுச் சாமான்களை வாங்கிவந்து உதவினுன். ஒரு டஜன் தகர கஞ்சிராக்கள், கலகலவென இவ்வட்டங்கள் ஓசையிட்டால் ஒன்பது காட்டு நரிகள் கத்தியமாதிரி ஒலிக்கும். போதாக்குறைக்கு ஊதல்கள், கொட்டுகள். அதாவது அவன் வாங்கிய பொருள்கள் எல்லாம் உரத்து நாதப் பிரளயம் கொப்புளிக்கிறவை. அத்தனை பரிசுவந்த ஊதல்கள், தகர கஞ்சிராக்கள் வாய் ஆர்மோனியங்கள் பலூன்

கள் டமடம வண்டிகள், கல கல கிலுக்குகள் எல்லாம் சேர்ந்தால் அணு குண்டு ஆயிரம் வெடிப்பதற்குச் சமம். வேலைக்கார வள்ளியும் தன் குடும்பத்தோடு விஜயம் செய்து தன் சக்திக்காக அவனுக்கு ஒரு மோதிரம் செய்து போட்டாள். அவள் குடும்பத்தார் ஏழு பேருக்கும் புதிய துணிமணிகள் இனும் வகையில் ரொக்கமாக மூந்நூறு பெற்றார்கள். வள்ளி வகையறாவுக்கும் பரம திருப்தி.

"யார் யார் இனும் என்னென்ன கொடுத்தார்கள்" என்ற பிரச்னை வந்தபோது கதிகலங்கினேன். என் தாயார் "மீனு நீ தான் ஒரு லிஸ்டு எழுதிவை. நாளை அவரவர்கள் வீட்டுக்குத்திருப்பிச் செய்ய வேண்டாமா?" என்று சொன்னாள்.

"நான் எழுதிக்கொண்டிருக்கிறேன்" என்று என் தந்தை சொன்னார்.

"எல்லாம் வட்டியில்லாக் கடன். விட்டுவிடாமல் எழுதுங்கள்" என்றேன். யாரோ "பாருங்களேன், கண்ணை! காசைக் கொடுக்க மாட்டேன்கிறான். என்ன ஆசை இந்த வயதிலேயே" என்று மெச்சிக் கொண்டார். காசின் ஓசை சொல்லளவில் கேட்டாலே குழந்தைகள் சும்மா விடுகின்றனவா? விடுவதில்லை. வீட்டின் தலைமை ஸ்தானம் தகப்பனார் என்ற பெருமையை இன ஜனத்தார் அறியும் போது நமக்கும் தலைக் கர்வம் ஏற்படுகிறது. இதற்கு முன், "இல்லை போட நேரம் ஆகுமா?" என்பதை என் தந்தையிடம் கேட்பவர்கள் "என்னப்பா மணி என்ன ஏது?" என என்னிடம் திரும்பினார்கள். நான் குடும்பத்தின் கிளையன்று, முக்கிய நடுமரம் என்பதை பயலுடைய ஆண்டு நிறைவு உறுதிப்படுத்திற்று. இந்த ஆண்டு நிறைவில் என் தந்தை தாமும் பாலகனாய் அமர்ந்துவிட்டு, என் தோளில் நிர்வாகம், விருந்தோம்பல், உபசரிப்பு ஆகிய சுமைகளைத் தூக்கி வைத்தார். ஆண்களைப் போன்று பெண்கள் சுலபமாக அதிகாரத்தை பிறரிடம் விட்டுக்

கொடுக்கமாட்டார்கள். எனக்கு உள்ள பொறுப்புகள் காந்திமதிக்கும் ஏற்பட வேண்டுமே. அவளுக்கு வீட்டு நிர்வாகம் கொடுக்கப்படலாம். ஆனால் அவள் மாமியார் இன்னும் தான் வீட்டு எஜமானி யென்றே நிரூபித்து வந்தாள். சமையல்காரர்கள், வேலை ஆட்கள், மற்றும் விபரம் வேண்டுவோர் என்னை யண்டி விசாரித்தார்கள், அடுத்ததாக என் தாயாரை அண்டி விசாரித்தார்கள். காந்திமதிக்கு இந்தப் பொறுப்புகள் இல்லாதவரை மகிழ்ச்சியே. குஷாலாகக் குழந்தையைப் பெற்ற பெருமையை பலருக்கு நிரூபித்துக் கொண்டிருந்தாள். அவள் பாக்கியசாலி. நான் கஷ்டசாலி.

நான் சமையல் கட்டுக்கும் காலைப் பந்தி நடக்கும் இடங்களுக்கும் உக்கிராண அறைக்குமாக அலைகிறேன். நீ இரங்காயெனில் பலாப்பழம் உரிக்கும் கைங்கரியத்திற்கும், வடை, அப்பளம், பூந்தி, லாடு இவைகளைச் சிறுவர் சிறுமியர் இவர்களிடமிருந்து காப்பாற்றி பந்திக்கு உதவுவதாகச் சொல்லிவிட்டான். பந்திக்குப் பழங்கள் மிஞ்சினால் தான் உண்டு; அப்பளங்களும் வடைகளும் அவனை காப்பற்றத் தலைப்பட்டான். எங்கும் உணவுப்பொருள்கள்; அல்லது உணவாக வேண்டிய பொருள்கள்குவிந்தும் கூடை கூடையாகவும் இருக்கின்றன. விசேஷ வீட்டுக்கென ஒருவகையான கதம்ப மணம் நெகிழ்ந்து புறப்படுமே. அந்த மணம் வீசிக்கொண்டிருந்தது. இத்தனை சிறப்பும் சீரும் ஒரு வயசுப் பயலுக்காகவா நடைபெறுகிறது? அவன் உண்பதென்னமோ ஒரு கவளம்; மாங்காய்ப் பருமன் இருக்கலாம்; அவன் பெயரைச் சொல்லி இத்தனை மகோற்சவம் பந்தி ஆராதனைகள் நடைபெறுகின்றன.

கண்ணனின் அழுகை கேட்டது!

ஏன் அழுகிறான்? அன்றைய விசேடத்திற்குக் கதாநாயகன் அழுகிறதைத் தணிக்க ஆட்கள் போட்டியிட்டனர். ஆகவே அழுகை அதிகமாயிற்று. நீயிரங்காயெனில் பலாப் பழத்தைக் கொடுத்ததை என் தந்தை பார்த்துவிட்டார்,

ஒரே இரைச்சல். முடிவிலே காலை முதல் பயல் பட்டினி யென்ற விபரம் தெரிய வந்தது!

"நீங்கள் கெண்டியில் பால் விட்டுக் கொடுக்க வில்லையா?" என்கிறாள் மாமியாரை நோக்கி மீனு.

"உன் அம்மா கொடுத்திருக்கலாம்" என்றாள் என் அம்மா.

"ஐயோ நான் கொடுக்கவேயில்லை. மீனு நீயும் கொடுக்க வில்லையா?" என்று மீனுவின் மீது அவள் தாய் பாய்கிறாள். கண்ணன் பட்டினி என்ற கோஷம் வானைப் பிளக்கிறது. பால் எங்கே? பால் எங்கே? என்ற கேள்விகள் அலை மோதுகின்றன, சேகரித்திருந்த பசும்பாலை விசேஷ வீட்டிற்கு வந்த குழந்தைக்காரிகள் வாங்கிக் கொண்டார்கள். மணி 12 அடிக்கும்போது காலைப் பால் கிடையாது. கிடைத்தாலும் கொடுக்கக் கூடாது என்ற பேச்சுக்கள் எழுந்தன

முடிவிலே புட்டிப்பால் தயாரித்துக் கொடுக்க மீனு சமையல் அறைக்குள் ஓடுகிறாள். "இப்படியும் ஒரு பெண் பிள்ளை இருப்பாளோ?" என்று பலரும் பரிகாசமாகச் சொல்கிறார்கள். மீனுவுக்குத் தாங்க முடியாத அவமானம். இத்தனை நாள் கவனமாக வளர்த்தும் முக்கிய தினத்தன்று. ஆண்டு நிறைவன்று, பால் புகட்ட மறந்து விட்டார்கள். பலரும் பலவிதமாக அன்றாடம் ஆகாராதிகளை திணித் தார்களே; இன்று எல்லோரும் மறந்துவிட்டது விந்தையே. சமையல் அறையில் நெருப்பெழ நான் விழிக்கிறேன். மீனு தலை குனிகிறாள். தவறு என ஒப்புக்கொள்ளுகிறாள்.

"இந்தாங்கம்மா, குழந்தைக்குப் பால் பாயசம் கொடுங்கள் அதுதான் முறை" என்கிறார் தலைமைச் சமையல்காரர். புட்டிப்பாலை மறுத்து பாயசத்தோடு ஓடுகிறாள். கண்ணன் பாயசம் உண்ணுவதற்கு, பரிசுப் பாத்திரங்களில் யார் வீட்டுப் பாத்திரத்தை எடுப்பது என்ற பிரச்னை எழுகிறது. முடிவில் என் தங்கை பாலா வாங்கிவைத்த (உண்மையில் என் தாயார் பணத்தைக் கொண்டு வாங்கிய சந்தன

பேலாவை தன் மகள் வாங்கியது என்று சபை மெச்சச் சொல்லிவிட்டாள் அம்மா) வெள்ளிப் பாத்திரம் வருகிறது. பெண்களுக்கு விசேஷ தினங்களில் பொழுது போக்கு அன்றைய விசேடத் தலைவன் தலைவிக்கு தேவைக்கும் அதிகமான இம்சை செய்வதுதானே, அப்படித்தான் கண்ணனை நடத்தினார்கள். பயல் பாயசம் உண்ணும்போது, தலையை வாரிப் பின்னல் போடுவாள் ஒருத்தி. பின்பக்கம் பின்னுவாள் இன்னொருத்தி. காலுக்கு பூட்ஸ் மாட்டுவாள் ஒருத்தி பூட்ஸ் மாட்டியதை கழற்றுவாள். ஒரு காலில் செருப்பு, இன்னொரு காலில் பூட்சு; குரங்கு கை அகப் பட்ட பூமாலை பழுதடையாமல் இருக்கலாம்; ஆண்டு நிறை வன்று அகப்படும் குழந்தைகள் பெண்களிடம் படும்பாடு சொல்லுக்கு அப்பாற்பட்டது. சற்றுப் பொறுத்து ஆணு டைகள் மாறி, பட்டுப் பாவாடையும் ஐம்பரும், நகையுமாக பயல் வருவான். பலவிதமான தோற்றங்கள். சிங்காரங் கள். அத்தனையும் பார்த்து எல்லோரும் இன்புற்றுச் சிரிக் கத்தான்.

புதிதாக வருவோரெல்லாம், குழந்தை விழித்தாலும் தூங்கினாலும் ஆசீர்வாதம் செய்து துன்பம் செய்வார்கள். பயல் அவர்களிடம் வருவதற்குப் பயந்து ஒதுங்கினாலும் விடாப்பிடியாகத் தூக்கி சதா அழ வைப்பதைத் தங்கள் கடனாகச் செய்த வண்ணம் இருந்தார்கள். இன்று அவன் இம்ஸை படப் பிறந்தவன். பிறந்தநாள் ஜன்ம நட்சத்திரம் என்பது மறு பிறவியைக் குறிக்கும் நாள் போலும்.

முக்கியமாகப் பெண்கள் தத்தம் பிறந்தநாள் முதல் தத்தம் முதற் குழந்தையின் ஆண்டு நிறைவு வரை நடந்த விநோதங்கள் தகடுதத்தங்கள் மாமன் மாமியார் குண விரோதங்களை அளக்க அளக்க அது குறித்து ஓர் பால் சண்டையும் பூசலும் ஏற்படுகின்றன. முதற் குழந்தையின் ஜன்ம நட்சத்திரத்திற்கு அப்பால் வீட்டிலே பிறக்கும் குழந் தைகள் பாடு அப்படி அப்படித்தான்—பிந்திப் பிறந்த வர்கள் ஆண்டு, நிறைவை ஆடம்பரமாகக் கொண்டாட

மாட்டார்கள். இதை ஆண்டு நிறைவுக்கு வந்த சபையோர் விளக்கினார்கள். கற்கண்டும் பழமும் எங்கும் மிதிபட்டன. கதம்ப பேச்சுக்கள் எங்கும் தெறிபட்டன. கண்ணன் பிறந்த நாளுக்கு என்ன ஆர்ப்பாட்டம். ஜே. ஜே. கூச்சல்.

சந்தன தாம்பூலங்களை எடுத்துக் கொள்வதும் பூசிக் கொள்வதுமாக வாழ்ந்துவிட்ட எனக்கு, இன்று ஓடியாடி யதில் இடுப்பொடிந்தது. ஒவ்வொருவரும் குறை கூறு வண்ணம் குனிந்தும் நிமிர்ந்தும் சந்தனம் கொடுத்தபோது வாசனையும், சொகுசும் நிறைந்த சந்தனம் வாதனை தரும் பொருளாயிற்று. எல்லாம் ஒரு வயதை எட்டிப்பிடித்த பயலின் வியாதியைச் சொல்லத்தானே! ஆண்டு நிறைவு வந்தால், தகப்பன் பொறுப்பின் தந்தை ஆகிறான்; கடமை யின் தந்தை ஆகிறான். பலர் குடும்பத்துக்கும் கடன் பட்டவன் ஆகிறான்; இவ்வளவு தொல்லைகளையும் அறிந்தேன்.

ஆண்டு நிறைவுக்கு வந்தவர்களை உபரித்து உணவளிப் பதில் உள்ள பந்தி சிரமங்களையும், மற்றும் சிரமங்களையும் சமாளிக்க முயற்சி செய்தேன். முன்னைப் போல பந்திக்கு முந்த முடியவில்லை. எல்லோருக்கும் உபசரித்து "உண்ணுங் கள் உண்ணுங்கள்" என்று பறிமாறுவது பணிசெய்வது மான வேலை கிடைத்தது. பரிசாரர்களோடு நானும் பரிசாரகனாக இருந்தேன்; தண்ணீர் விசாரிக்கும் தாகசாந்தி சிறுவனுடன் சேர்ந்தவன் ஆனேன்; விசிறி பிடிக்கும் வேலைக்காரனாய் நின்றேன். நான் தகப்பனார் என்ற ஸ்தா னத்தைத் தவிர்த்து மற்றப் பணிகளில் ஈடுபட்டேன். எல்லோரும் கண்ணனை "வாழ்க வாழ்க" என வாழ்த்தி னார்கள். பந்தி பந்தியாக இருந்தும் எழுந்தும் வாய்குதப்பிய வெற்றிலைத் தாம்பூலத்துடன், நெஞ்சு குளிரக் குளிர பூசிய சந்தனத்தோடு வாழ்த்தொலி சொன்னார்கள்.

பந்திகள் நடந்த வண்ணம் இருந்தன. பல முறை நடந்தன.

மறுநாள் காலையில் ஆண்டு நிறைவை யொட்டிய கர்ண பூஷணம்; காதைத் துளைத்துப் பொன்னிட்டுப் பார்க்கச் சித்தமாயிருந்தோம். வெள்ளைக் கல்லில் நகையும் கையுமாக ஆசாரியார் வந்தார். அவர் கையிலே இருந்த குத்தூசி என் கண்ணைக் குத்திற்று; அதாவது, அத்தனை இம்சை தந்தது. பூப்போன்ற காதிலே குத்தப் போகிறார்; சிரிக்கும் சிறுவன் சிந்தச் சிந்தக் கண்ணீர் விடுவான். என் உடல் நடுக்கமுற்றது. துளையிடும் படலத்தைக் காணப் பெண்கள் உத்சாகமாக கூடிவிட்டார்கள். இதில் எங்களுக்குப் பங்கில்லையென்று எந்த ஆண்களுமே வரவில்லை. ஒப்புக்காக, பாட்டனார் களும் மற்றும் இரண்டொருவருமே இருந்தார்கள். பெண் களுக்குத் தாங்கள் நகை போட்டுக் கொள்வதிலும் திருப்தி; பிறர் போட்டிருப்பதைப் பார்ப்பதிலும் திருப்தி; இதோடு நகைபோடுவதற்கு காதைத் துளைப்பதைப் பார்ப்பதாலும் கன குஷியென்றல்லவா தெரிய வருகிறது.

சுப முகூர்த்த நேரம் வந்தது.

"மாமனார் யார்?" என்றார்.

நான் என் மாமனாரைக் காட்டினேன். எல்லோரும் சிரித்தனர்.

"குழந்தையின் தாய் மாமனார்" என்று ஆசாரியார் விளக்கம் தந்தார். மீனாவின் தம்பி நாணிக் கோணி வந்தான். மருமகனை வாங்கி மடியில் வைத்தான். குத்து விளக்குச் சுடர் விடுகிறது. விளக்கடியிலிருந்த பிள்ளையார் முன் தெய்வமேயென இருந்த வாழைப் பழத்தை உரித்து ஆசாரியார் கொடுத்தார். நான் மறுத்தேன்.

"காரணமாகத்தான்" என்றார், பிறகு விஷயம் விளங் கின்று. அழப்போகிற பிள்ளைக்கு வாழைப்பழம் முதல் தினிப்பு என்பதை அறிந்தேன். சிரித்துக் கொண்டே, சுண்ணும்பைக் குழைய குழைய உள்ளங்கையில் தேய்த்துக் குத்தூசியால் எடுத்துக் கொண்டு பயல் காதில் குறி வைத் தார். குறி சரியா தப்பா நடு மையமாக இருக்கிறதா என்ற

விவாதம் ஆரம்பமாயிற்று. சுண்ணும்புக் குறி சரியெனப் பலரும் ஒப்புக் கொள்ளும்படி வைத்துவிட்டு, சிரித்துக் கொண்டே, ஊசியைப் புகுத்தி விட்டார்.

மறுவிநாடி! பட்டகசாலையே அதிர்ந்து விடும் படியான அலறல் கூச்சல். வில்லாக வளைந்தவனை இருக்கிக் கட்டினன் தாய் மாமன். துக்க உணர்ச்சி தாங்கமாட்டாது வெளிப்பக்கம் போய் விட்டாலும் என் மனம் அழும் பயல் பக்கமே இருக்கிறது. உடல் வெளிப்பக்கம்; உள்ளம் குத்துப்படும் குழந்தையின் பக்கம்.

ஆசாரியார், "உம் பழத்தைச் சாப்பிடு" என உபசாரம் செய்யும். அழும் குரல் அவரை "போ போ..." என உதைக்கும். இதற்கு ஊடாக, "பளிச்சின்னு வெள்ளைக் கடுக்கன் மின்னிது" என்ற ரஸிகக் குரல் எல்லாம் கேட்கின்றன. மாமனை உதைத்தும் துப்பியும் தள்ளித் தாயின் முகம் பார்க்க முயற்சி செய்கிறான். "அழத்தான் செய்வான்; இடது காதையும் குத்துங்கள்" எனப் பலரும் சொல்லுகிறார்கள்.

"அழுகை அமரட்டும்" என்றேன் வெளியிலிருந்து...

"இல்லை. இல்லை. அழுகையோடு அழுகையாத் தொடர்ந்து நடக்கட்டும்" என்றார்கள். அது மெஜாரிட்டியான பேச்சு. மெது மெதுவாக ஆசாரியார் சுண்ணும்பு குறியிட்டு அடுத்த காதையும் துளைத்து மற்றொரு வெள்ளைக் கடுக்கனையும் போட்டு விட்டார்...பயல் துடியாய் துடித்து விட்டான். தாய்க்காரி வாங்கிக்கொண்டு, காற்றுட தோட்டப்பக்கம் வந்தாள். எல்லோருக்கும் பரம திருப்தி, சந்தோஷம்.

"காதிலே கடுக்கன் போடறதிலே அர்த்தம் உண்டு" என்றது ஒருகுரல்.

"என்ன? என்றது மற்றொரு குரல்."

"அதாவது மண்டுவாக இருந்தாலும், இப்படி காது குத்துவதின் மூலம் அறிவுக்குத் துடிப்பு வருகிறது."

என்றார். எனக்கும், விஞ்ஞானி சர். சி. வி. ராமன் காது குத்துவது பிறருக்கன்று தனக்கு நல்லதென்று சொல்லியதைப் படித்திருந்த ஞாபகம் வந்தது. காதுக்கும் மூளை நரம்பிற்கும் சம்பந்தம் இருக்கவேண்டும்; இல்லாது போனால், பள்ளி ஆசிரியர்கள் காதைத் திருக மாட்டார்கள் காதைப் பிடித்துத் தூக்கியதும் பிராணிகள் கத்துவதை அறிகிறோம். ஆகவே, காதில் துளையிட்டு ஆபரணம் அணிவது அறிவின் பிரகாசத்திற்கு வழி யென்றும் உணர்ந்தேன்.

பயல் அழுகை இன்னும் முடியவில்லை. மீனாவும் வந்துள்ள பெண் குலம் அத்தனையும் சேர்ந்து அவனைச் சமாதானம் செய்கிறார்கள். எல்லோருக்கும் தாம்பூலம் அதற்கு மேல் விருந்து. விருந்து, வடை பாயசத்தோடு மறுநாளும் விருந்து.

முதல் நாளைப் போலவே, மறுநாள் நான் பணி செய்தேன், எங்கும் பாராட்டுரைகள். வயதான பாட்டி, "மணிக்கு ஆண்டு நிறைவு நடந்தபோது கூட இவ்வளவு சிறப்பாக நடக்கவில்லை" என்று பாராட்டினாள். என் ஆண்டு நிறைவைவிட என் குழந்தையின் ஆண்டு நிறைவு தான் எனக்குப் பிரமாதம். அதே போல "காந்திமதியின் ஆண்டு நிறைவைவிட, பயல் ஆண்டு நிறைவு பிரமாதம்" என்றார் மாமனார். நானும் மீனாவும் அவரவர் வீட்டுக்குத் தலைப் பிள்ளைகள். ஆகவே இருவீட்டு பந்து மித்திரர்களும் "கண்ணன் ஜன்ம நட்சத்திரம் பேஷ் பேஷோ பேஷ்" எனப் புகழ்ந்தார்கள். புகழை எவ்வளவு கேட்டாலும் இன்னும் கேட்க வேண்டுபோலிருக்குமல்லவா? கண்ணன் பயல் காதில் கடுக்கன் விழுந்தது முதல் தாயைத் தவிர யாரையும் தன்னருகே வரவில்லை. "தாய்" என்பது மீனா அல்ல; மீனா அல்ல; உறவினரான பணக்கார திரிபுர சுந்தரி அம்மாள். இந்த அம்மாளைப் பற்றி நான் எதுவும் சொல்லாமல் விட்டு விட்டதாக நினைக்கவேண்டாம். ஆண்டு நிறைவு பிரக்கியாதி பெற்றதற்கு முக்கிய காரணம் திரிபுர

சுந்தரி அம்மாளே. அவர்கள் உதவிய தொகை ரூபாய் மூவாயிரம்! இதை நீங்கள் ரகசியமாக மனசில் போட்டுக் கொள்ளுங்கள்.

பயலுக்கு அழுகையடங்க திரிபுர சுந்தரியம்மாள் தங்கள் வீட்டு மோட்டாருக்குள் எடுத்துப்போய் அதை ஓட வைத்தார்கள்! பயல் அழுகை பறந்துவிட்டது.

சந்தடி அடங்கிய சமயம், மீனுவிடம் ஒரு விஷயம் விசாரிப்பதற்காக நான் தோட்டத்துப் பக்கம் வந்தேன். அவள் அங்கே தலையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து இருந்தாள். அசதியான நிலை. வேலையும் அலைச்சலும், அதிகச் சிரமமும் அவளுக்கு வாந்தி தந்ததேயென்ற கவலையால், "என்ன மீனு உனக்கு, தலைவலியா?," என்றேன் அவள் பதில் பேசவில்லை.

"என்ன?" என்றேன் மீண்டும்.

அவள் பதில் சொல்ல முடியாமல் சிரித்தாள். வாந்தி யெடுக்கும் காரணம் புரிந்து விட்டது! அடடே!

"அட ராம ராம...இன்னொன்று?"

"எல்லாம் உங்களால்தான். பேசாதீர்கள். யாருக்கும் தெரிய வேண்டாம்..." என்ற மகிழ்ச்சி நிறைந்த கண்ணோடு சைகை செய்தாள். இன்னொரு குழந்தை. என் மனம் ஆனந்த மடைகிறதா? வருத்தம் அடைகிறதா? மனப் பூரிப்புடன் அவள் கையைப் பிடிக்க, என் பிடியைத் திமிறினாள். ஓட்டமெடுத்தாள். என் மனசிலே என்னன்னவோ கனவுகள். என்னன்னவோ கற்பனைகள்.

"கண்ணனுக்கு விளையாடத் தங்கையோ தம்பியோ அவசியந்தான்" என்றேன்.

"ஐயோ! வாயை மூடிக் கொண்டிருங்கள்"

நான் வாயை மூடிக் கொண்டேன்; ஆனாலும் மனசை மூட முடியுமா? மனம் பற்பல விந்தை விநோதங்களைக் கற்பனைக் கோட்டை வாசல் வழியிலே அழைத்துச் சென்று கொண்டேயிருக்கிறது. பிள்ளைக் கனியமுது பெற்றவர்கள், நாங்கள்; இனி பேசும் பொற்சித்திரம் பெறப் போகிறவர்கள்!

நாங்கள் பாக்கியசாலிகள்.

முற்றும்.